என்றும் உங்களுடன் புத்தகம் 1

# மங்கையர் மலர்

ஜூன் 2010 MANGAYAR MALAR 288 பக்கங்கள் ரூ.20/-

ஸ்ரீ பாலம் சில்க்ஸ் வழங்கும்
புடவை டிஸைன் போட்டி!
பக்கம் 12-13



இணைப்பு:
ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்!

அட்டகாச ஆரம்பம்!

- என்றும் 16...
- தலைவாழை சமையல்!
- சிறுகதைப் போட்டி







"எங்கள் இல்லத்தை சிறந்த முதியோர் இல்லமாகத் தேர்ந்தெடுத்து, தாங்கள் நன்கொடையாக அளித்த ரூபாய் 10,000/- க்கான காசோலையைப் பெற்றுக்கொண்டோம். அதற்கும், நமது வாசகி மங்கையர்கரசி அளித்த மங்கையர் மலர் ஒரு வருட சந்தாவுக்கும் நன்றி தெரிவிக்கிறோம்."

- ஆனந்தம் முதியோர் இல்லம், சென்னை

(தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து முதியோர் இல்லங்களுக்கும் தலா ரூ.10,000/- நன்கொடையாக, வாசகியர் சார்பாக வழங்கப்பட்டது)

- (ஆர்)













என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

மலர் : 30 இதழ் : 5 ஜூன் 2010

# பெரிய கடைவீதியில் உங்களுக்கு பெரிய லாபம்












Special designs:
Kempu, Antique, Fusion,
Meenakari, Nakasu, Polki and Filigiri.

| | 916 JEWELLERY 8gms | 24 ct GOLD BAR 100gms |
|---|---|---|
| Market Rate | ~~Rs.13,720~~ | ~~Rs.2,09,700~~ |
| D.A.R Rate | Rs.13,220 | Rs.1,87,200 |
| Your Savings | Rs. 500 | Rs.22,500 |




தங்கத்தை இப்போது 15% மட்டும் செலுத்தி ஆர்டர் செய்து 3 மாதத்திற்குள் மீதி தொகையை செலுத்தி டெலிவரி பெறும் வசதியும் உள்ளது

Sundays open

பெரிய கடை வீதி

## D.A.R jewellery

since 1931

92, Big Bazaar Street, Coimbatore - 1 Phone: 0422 2394586, 4220916, **09952433386**

# ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல் பக்கங்கள் ஆரம்பம் - 121

* A to z கல்வி கைடு
* பூஞ்சாரல் 2009-2010 நிகழ்ச்சியின் வண்ணப்படங்கள்
* அழகு, ஆரோக்யம், டயட், கலை, ஃபேஷன்... என இன்னும்... இன்னும்...

**உங்கள் படைப்புகளுடன் கலக்கல் கட்டுரைகளும்...**



# ஒரு வார்த்தை!



பிரம்மதேவன், இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்துக் கொண்டிருந்த வேளை அது.

முதலில் ஒரு கழுதையை உருவாக்கினார். அதற்கு எண்பது வருஷ ஆயுளைக் கொடுத்தார்.

''ஐயோ... சாமி! எனக்கு எதுக்கு அத்தனை ஆயுசு? ஐம்பது வருஷம் கொடுங்க போதும். மிச்சம் முப்பது வருஷத்தை ரத்துப் பண்ணிடுங்க'' என்று கழுதை பரிதாபமாகக் கெஞ்சியது.

பிரம்மாவும் மனமிறங்கி, ''அப்படியே ஆகட்டும்''ன்னார்.

அடுத்ததா, அவர் படைச்சது ஒரு நாயை! அதுக்கு அறுபது வருஷ ஆயுளை நிர்ணயிச்சார். ஆனால், நாயோ, ''உங்களுக்குப் புண்ணியமா போகட்டும். எனக்கு நாற்பது வருட ஆயுசே போதும். மிச்சமுள்ள இருபது வருஷத்தை ரத்து செஞ்சுடுங்க!'' என்று வேண்டியது.

''ஓ.கே! உன்னோட கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது!''ன்னார் பிரம்மா பெரும் கருணையோட.

அப்புறமா ஒரு குரங்கைப் படைச்சு, அதுக்கு அறுபது வருஷ ஆயுளை வழங்கினார் பிரம்மா. குரங்கா ஒத்துக்கும்? அடம் பிடிச்சு அழவே ஆரம்பித்துவிட்டது.

''பகவானே! அறுபது வருஷ ஆயுள் எல்லாம் பெரிய




என்றும் உங்களுடன்
**மங்கையர் மலர்**
தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

பொறுப்பாசிரியர் : **அனுராதா சேகர்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : **044 - 4343 8888**
தொலைநகல் : **044 - 4343 8899**

**ஆசிரியர் குழு :**
**044 - 4343 8877**
mangayarmalar@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
**044 - 4343 8811**
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
**044 - 4343 8833**
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
**044 - 4343 8844**
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.mangayarmalaronline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.**250/-**
வெளிநாடு : ரூ.**2,200/-**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




அவஸ்தை! எனக்கு நாற்பது வருஷம் போதும். மிச்ச இருபது வருஷத்தை நீக்கிடுங்க!''ன்னு கதறியது! பிரம்மாவும் ஒப்புக்கொண்டார்.

அடுத்ததா மனுஷனைப் படைச்சார். இருபது வருஷ ஆயுளை மட்டும் விதிச்சார். மனுஷனுக்கு ஒரே கவலை! ''என்ன சாமி... இப்படிச் செஞ் சுட்டீங்க? கழுதை, நாய், குரங்குக்கு எல்லாம் அதிக ஆயுளைக் கொடுத்துட்டு எனக்கு மட்டும் குறைச்சுட்டீங்களே! அதுங்க எல்லாம் வேணாம்னு நிராகரிச்ச ஆயுள் எல்லாத்தையும் சேர்த்து எனக்குக் கொடுத்துடுங்க...''ன்னு பிடிவாதம் பிடிச்சானாம்.

பிரம்மாவும், ''சரிப்பா... எடுத்துக்க''ன்னார்.''

முதல் இருபது வருஷங்கள் பிரம்மன் விதித்தது என்பதாலோ என்னவோ மனிதன், தன் இயல்போடு வாழ்கிறான். அடுத்த முப்பது வருஷங்கள், முதுகு ஒடிய பாடுபட்டு, குடும்பக் கவலைகளைப் பொதி சுமக்கிறான். அதன்பிறகு இருபது வருஷங்களுக்கு தனது சொத்து சுகத்துக்கு நாய் போல காவல் இருக்கிறான். அதைத் தொடர்ந்து இருபது வருஷங்களில் முதுமையடைந்து, ஆதரவு தேடி மகன், மகள் என தாவித் தாவி குரங்கைப் போல காலத்தைக் கழிக்கிறான்.

அன்பு மாணவ மணிகளே... இது மனித இயல்பு பற்றி, வேடிக்கைக்காகச் சொல்லப்படும் கதைதான்! ஆனால் அதில் விஷயம் இல்லாமல் இல்லை!

கடவுள் நமக்காக அருளிய முதல் இருபது வருடங்கள் உண்மையிலேயே மதிப்பு வாய்ந்தவை. நமக்கே நமக்கானவை. அப்போது படிக்கும் கல்வியும், கற்கும் வித்தைகளும், பேணும் ஆரோக்கியமும், வளர்த்துக் கொள்ளும் நல்லப் பண்புகளும், எடுக்கும் முடிவுகளும் நம் வாழ்க்கையை நிர்ணயிப்பவை!

டியர் ஸ்டூடன்ட்ஸ்... இது உங்களுடைய வாழ்க்கை! வாழ்வதும் ஒரே தடவைதான்! உங்கள் வாழ்க்கையை, குறிப்பாக முதல் இருபது வருடங்களை, மிகச் செம்மையாகப் பயன்படுத்தி, சிறப்பாக வாழ என்னுடைய வாழ்த்துகள்.

அஸ்திவாரம் பலமாக இருந்தால், கட்டடம் பற்றி கவலைப்பட வேண்டாமில்லையா?

*அனுராதா சேகர்*

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!



வெங்காய பக்கோடா மாவைக் கலக்கும் போது ஒரு வெங்காயத்தையும் ஒரு துண்டு இஞ்சியையும் மிக்ஸியில் அரைத்து விழுதை மாவில் கலந்து செய்தால் பக்கோடா 'கமகம' என்று வரும்.

- கே.திலகவதி, பெங்களூரு-58.

வடாம் செய்வதற்கு பழைய அரிசியைப் பயன்படுத்தினால், காய்ந்த வடாத்தை பொரித்தவுடன் சிவந்து விடும். அதற்குப் பதிலாகக் கடையில் மாவு அரிசி என்று கேட்டு வாங்கினாலும் சரி அல்லது புது அரிசி மாவை உபயோகித்தாலும் வடாம் இட்டுப் பொரித்தவுடன் நன்கு வெண்மையாக இருக்கும். விலையும் குறைவு.

- புவனேஸ்வரி ரவிச்சந்திரன், ஆழ்வார்ப்பேட்டை.

உங்கள் சமையலை யாராவது குறைசொன்னால் அதற்காக அவரைக் கோபித்துக் கொள்ளாதீர்கள். என்ன குறை என்பதைக் கேட்டுத் தெரிந்துகொண்டு, அதைத் தவிர்க்க முயலுங்கள்.

- கே.கவிதா, குரும்பாளையம்.

கடைசி நாள், சலுகைத் தேதி வரை காத்திருக்காமல் ஆயுள் காப்பீடு பிரீமியத்தைக் கட்டி விடவும். உறவுகள் கைவிடினும் காப்பீடு கைவிடாது.

- பி.சுமித்ரா பிரேம்குமார், பெரம்பூர்.

பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளுக்கு 'டை' போடும் வழக்கத்தைக் கட்டாயமாக்கத் தேவையில்லை. நம் நாடு வெப்பமண்டலப் பகுதியில் இருப்பதால் அந்த விதிமுறையைத் தளர்த்தலாம். அந்தந்த பள்ளிக்குரிய சீருடை, அடையாள அட்டைகளை மட்டும் பயன்படுத்தினால் போதும். சம்பந்தப்பட்டவர்கள் கவனிப்பார்களா?

- எச்.ஹலிமா, கும்பகோணம்.

எந்த வகைப் பணியாரமானாலும் புதுப்பணியாரக் குழிகளில் ஊற்றுபவர்கள், புளிக்காத மாவில் ஊற்றிப் பழகினால், திருப்பிப் போட்டு எடுக்கும்போது ஈஷிக் கொள்ளாமல் எடுத்து விடலாம். அடுத்தடுத்து அழகாக சுடுவதற்கான ஐடியாவும் கிடைத்துவிடும்.

- இந்திராணி தங்கவேலு, மும்பை.

எந்தக்குழம்பிலும் வெங்காயம், பெருங்காயம் இரண்டையும் சேர்த்துப் போடக்கூடாது. ஏதாவது ஒன்றுதான் சேர்க்கலாம். ''இருகாயம் உடம்புக்குக் கெடுதல்'' என்று பெரியவர்கள் சொல்வார்கள்.

- லக்ஷ்மி கணபதி, கோவை.

கோயில்களில் தனித்தனியாக உள்ள சன்னிதிகளை பதினொரு சுற்றுகள் வீதம் சுற்றி வந்தால் மனதுக்கு உற்சாகத்துடன் உடலுக்கு நல்ல பயிற்சியும் கிடைக்கும்.

- என்.ரத்னா, சைதாப்பேட்டை.

ரயிலில் முன்பதிவு செய்யும்போது இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் என்றால் தேதி போடுவதில் கவனமாக இருக்க வேண்டும்.

- இந்திரா சந்திரன், திருச்சி.

# மாபெரும் சிறப்புச் சலுகை 01.06.10 முதல் 30.06.10

1.51 ct வைர நெக்லஸ்
18.00 gm தங்கத்தின் எடை
விலை ரூ. 1,08,000
சலுகை விலை
ரூ. 92,000



1.00cts வைரத்தோடு
தங்கத்தின் எடை 5 கிராம்
~~67,000~~
தள்ளுபடி விலை
57,000



0.84 ct
வைர வளையல்
12.00 gm
தங்கத்தின் எடை
விலை
ரூ. 71,000
சலுகை விலை
ரூ. 63,000

- வைர நகைகளுக்கு Perct 4000 தள்ளுபடி
- 7 கல் வைரத்தோடு - 25000 முதல்
- வைர மூக்குத்தி 1700 முதல்
- பேன்சி வைரமோதிரம் 4500 முதல்
- பேன்சி வைரதோடு 4500 முதல்
- பேன்சி டாலர் 4500 முதல்
- அனைத்து வைரங்களும் V V S E F கலர்
- திருப்பி தரும்பொழுது வைரத்திற்கு மட்டும் 100% அன்றைய மார்கெட் விலை
- 500 முதல் 5000 வரை மாத சீட்டு + இரட்டிப்பு போனஸ்
- 25000 மேல் வாங்கும் அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் நகை பெட்டி வழங்கப்படும்.

## Sri Palsani Jewels

110, Dr. Radha Krishnan Road, (Near Sri Krishna Sweets) Chennai - 4
**Phone: 2811 1737, 2811 7036 | www.sripalsanijewels.net**

Shivaa

# வளர்ந்த குழந்தை!

''அனுராதா ரமணனை ஹாஸ்பிடல்ல சேர்த்திருக்காங்களாம். கவலைக்கிடமா இருக்காங்களாம்!'' என்ற செய்தி வந்தபோது, 'அவங்களுக்கு மருத்துவமனை என்பது வீக் என்ட் ரிஸார்ட் மாதிரி; சீரியஸா போவாங்க. சிரிச்சுக்கிட்டே வந்துடுவாங்க. திங்கள்கிழமை ஃபோன்போட்டு, கதையோ, கட்டுரையோ கேட்டால் 'டாண்'னு கொடுத்துடுவாங்க!' என்றுதான் தோன்றியது. ஆனால் இந்த முறை காலன், ஏமாறவில்லை!



அவர் நமது மங்கையர் மலரில் எழுதிய, 'மீண்டும் மீண்டும் (உற்சாகமாய்) உயிர்த்தெழலாம்!' கட்டுரைத் தொடரை வாசித்துப் பாருங்கள்... தோள்பட்டை முறிவிலிருந்து பக்கவாதம் வரை, எத்தனைவிதமான நோய்களைத் தாங்கியிருக்கிறார் என்பது புரியும். அத்தனைக் கஷ்டத்தையும், சிரிக்கச் சிரிக்க எழுதுவதற்கு அவரால்தான் முடியும்!

''என் பொண்ணுங்க அமெரிக்காவுக்குப் போகும் நாளில் கண்ணுல அழகா மையிட்டிருப்பேன். ஏர்ப்போட்டில் பிரியும்போது அழுகையா வரும். கண் மை கரைஞ்சுடுமேன்னு ஒரு நினைப்பை வரவழைச்சுக்கிட்டு, கண்ணீரை அடக்கிப்பேன்'' என்றார் ஒருமுறை. அதுதான் அனுராதா ரமணன்!

'இப்படிக்கு நான்' என்ற தலைப்பில் சுய விமர்சனம் செய்யுமாறு கேட்டிருந்தேன். அதற்கு, 'நான் இன்னும் கன்னிதான்! என்ற ஆரம்ப வரியுடன், பல பக்கங்களுக்கு எழுதிக் கொடுத்தார். ஆனால் சில பல காரணங்களால் அதை வெளியிட முடியவில்லை. அது குறித்து சிறு வருத்தம் எனக்குண்டு.

அவருக்கு மிக உயர்ந்த ரசனைகள் இருந்தன. நல்லா டிரஸ் பண்ணுவார். நன்றாக சமைப்பார். ரசித்து சாப்பிடுவார். கர்நாடக சங்கீதத்தில் மிகுந்த நாட்டம். பாடுவார். ஓவியம் வரைவார். நல்ல நகைச்சுவை உணர்வு கொண்டவர். சிரிக்காமல் அவரால் பேசவே முடியாது. ஒருநாள் அவரது டைரியை காட்டினார்... ரோஜா நிற தாளில் கரிய நி[illegible] அழகான எழுத்துக்க[illegible] சித்திரங்களும் கவின[illegible]யுமாக அசத்தலா[illegible] இருந்தன.

அவரது ரிங்டோனில் ஒலிக்கும் பாட்டு எது தெரியுமா? 'காற்றின் மொழி ஒலியா... இசையா...? என்ற பாடல்'.

அனுராதா ரமணன் என்ற வளர்ந்த குழந்தையின் சாதனை... இலக்கியமா? இனிய மனமா?

**வி மிஸ் யு மேம்!**

● அனுராதா சேகர்

# கலை ரசிகைக்கு நல் வாய்ப்பு!




“

**மங்கையர் மலர் வாசகியர்களே...**

பெண்கள் என்றாலே, கலா ரசிகைகள்தான்! எந்த ஒரு விஷயத்தையுமே கலை நயத்தோடு, பார்க்கக்கூடிய திறன் படைத்தவர்கள். பெண்களுக்குப் பிடித்தமான வகையில் சேலைகளை வழங்கிக் கொண்டிருக்கும் எங்கள் 'ஸ்ரீ பாலம் சில்க்ஸ் சாரீஸ்' பெண்களின் ரசனையை, திறமையை வெளிக்கொணரும் வகையில் ஒரு போட்டியை நடத்த எண்ணினோம். ஸ்ரீ பாலம் சில்க்ஸ் புடவை டிஸைன் போட்டி உருவாகி விட்டது.




மங்கையர் மலர் வாசிகளுக்காக மட்டும் மிகவும் பிரத்யேகமாக நடத்தப்படும் போட்டி இது. தங்களுடைய கைத்திறன் மற்றும் கலைத்திறன் வெளிப்பாட்டில் அபரிமிதமான நம்பிக்கை எங்களுக்கு உண்டு. பரிசுக்காக தேர்ந்தெடுக்கப்படும் டிஸைன்கள், கைத்தறி மற்றும் காஞ்சிபுரம் பட்டுக்களை அலங்கரிக்கப் போகின்றன!



மங்கையர் மலர் வாசகிகளாகிய நீங்கள், எப்படிப்பட்ட டிஸைன்களையும் தாராளமாக வரைந்து அனுப்பலாம். குறிப்பிட்ட இந்தப் பகுதியில் வரைந்து அனுப்ப வேண்டும் என்பது கட்டாயம் இல்லை. ஒரு முழு நீள வெள்ளைத் தாளில்கூட உங்களுடைய டிஸைன்களை வரைந்து அனுப்பலாம். ஆனால், எதிரே கொடுக்கப்பட்டுள்ள படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து தங்களுடைய டிஸைன் தாளுடன் இணைத்து அனுப்ப வேண்டும். ஒருவர் எத்தனை டிஸைன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் நகல் படிவங்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. அதைப் போலவே புடவையின் எந்தப் பாகத்துக்கான டிஸைனாக அது இருந்தாலும் நாங்கள் அதை இருகரம் தட்டி வரவேற்கிறோம்.

மங்கையர் மலருடன் இணைந்து, பாரம்பரியமும் புதுமையும், புத்துணர்ச்சியும் பூரிப்பும் உள்ளடக்கிய ஒரு போட்டியை முதன்முதலாக அறிமுகப்படுத்துவதில் எங்களுக்கும் பெருமகிழ்ச்சி. பிரமாதமான படைப்புகளை உங்களிடமிருந்து ஆவலுடன் எதிர் நோக்கியிருக்கும் உங்கள்

**அன்புச் சகோதரி**
**ஜெயஸ்ரீ ரவி**

”

புடவை டிஸைன் போட்டி விவரங்கள் எதிர் பக்கத்தில்...

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

# ஸ்ரீ பாலம் சில்க் சாரீஸ்




இணைந்து வழங்கும்



## டிஸைன் புதுசு... புடவை பரிசு!

**புடவை டிஸைன் போட்டி!**

பெயர் :

முகவரி:

செல்

இ.மெயில்

நீங்கள் விரும்பும் புடவை டிஸைனை மேலே உள்ள இடத்திலோ அல்லது A4 ஷீட்டிலோ வரைந்து இப்பக்கத்துடன் இணைத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

கடைசித் தேதி 30.06.2010

புடவை டிஸைன் போட்டி
ஆசிரியர் மங்கையர் மலர், கல்கி பில்டிங்க்ஸ்,
47NP, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

டிஸைனை வரைந்து, இந்தக் கூப்பனை நிரப்பி ஸ்கேன் செய்து இ. மெயில் மூலமாகவும் அனுப்பலாம்.
இ.மெயில் முகவரி : mangayarmalar@kalkiweekly.com; deskjmd@kalkiweekly.com

## வாசகர் பூமராங்!

# ஆயிரம் கோடி பொன்!

'மே' மாத மங்கையர் மலரில் வெளியான 'ஒரு வார்த்தை' உண்மையில், ஒரு வார்த்தையில்லை. ஆயிரம் ஆயிரம் கோடி பொன்னுக்குச் சமமான வார்த்தை. எப்படித்தான் உங்களுக்கு இந்த எண்ணம் தோன்றியதோ! இதைப் படித்ததும் உண்மைச் சம்பவம் என்று என் ஞாபகத்தில் வந்தது.



என்னுடைய விதவைத் தாயார், ஒரு சமயம் முக்கியமான விஷயத்துக்காக, நல்ல பதவியிலிருந்த என் அண்ணனிடம் பண உதவி கேட்டிருந்தார். கூடவே இருந்த மனைவி ஏதாவது சொல்வாளோ என நினைத்து, உன்னை கல்லூரியில் படிக்க வைத்த உரிமையில் கேட்கிறேன் என்று எழுதிவிட்டார்.

என் அண்ணன், என்ன பதில் போட்டிருந்தார் தெரியுமா?

''எனக்காக நீங்கள் காலேஜ் பீஸ், மற்றும் ஹாஸ்டல் செலவுக்காக அனுப்பிய பணம்... இவ்வளவு ரூபாய் என எழுதிவிட்டு, நான் உங்களுக்கு மாதா மாதம் அனுப்பிய பணத்தின் செக் நம்பர், அனுப்பிய தேதி, எவ்வளவு பணம் என்ற விவரங்களை ஒன்றுவிடாமல் (மறக்காமல்) பட்டியலிட்டு எழுதி, கடைசியில் நீங்கள் செலவழித்ததைவிட இதுவரை 44 பங்கு அதிகம் அனுப்பியிருக்கிறேன் என்றும் எழுதியிருந்தார்.

இக்கடிதத்தைப் பார்த்துவிட்டு, என் தாயார், குமுறி குமுறி அழுததை என்னால் இன்றும் மறக்க முடியவில்லை. என் தாயார் இறந்து நாற்பது வருடங்களாகின்றன. என் அண்ணனும் இறந்து ஐந்து வருடங்களாகின்றன. அவர்கள் உயிரோடு இருந்திருந்தால், இந்த மங்கையர் மலர் 'ஒரு வார்த்தை'யைக் காட்டியிருக்கலாமே என என் மனம் பலவாறாக எண்ணியது. மங்கையர் மலருக்கு நன்றி!

– ஏ. லக்ஷ்மி, சென்னை



பக்தியுடன் ஒரு துளசி இலையை அளித்தால்கூட எம் பெருமான் மகிழ்கிறான். கம்பத்தைப் பிடித்துக் கொண்டு சுற்றும் சிறுவனைப் போல் இறைவனைப் பிடித்துக்கொண்டு செயல்புரிந்தால் ஆபத்தில்லை!

– சுவாமி விவேகானந்த

தகவல்: கே.கவிதா, நெல்வா

ஏஞ்சல்ஸ்®
ince 1991) அட்வான்ஸ்ட் கிளினிக் (பி) லிட்
ஹேர், ஸ்கின் & பாடி கேர்

# Angels®
(Since 1991) Advanced Clinic Pvt. Ltd.
**HAIR, SKIN & BODY CARE**

**COSMETIC CLINIC**

## OVER WEIGHT, TUMMY, SKIN TIGHTENING & FIGURE CORRECTION



ல் எடையை குறைப்பதற்காக அல்ட்ரா
ம் செல்லுலைட் தெரபி, பாடி பாலிஷ்,
ட்டின் தெரபி மூலம் ஆண்கள் மற்றும்
ர்களின் உடல் எடையை குறைத்து
லாம். இச்சிகிச்சையினால் உங்கள்
லம் மேலும் மெருகேறும் மற்றும்
திலும் பாதுகாப்பானது. சிலருக்கு
று பகுதி சரியாக இருக்கும். ஆனால்
ின் தொடை பகுதி மிக பருமனாக
க்கும். இவர்களுக்கு Figure Correction
ம் அக்குறையை நிவர்த்தி
துவிடலாம்.

## SOLUTION FOR UNWANTED HAIR AT ANGELS
**(Ex. UpperLip, Chin, Cheeks, Abdomen, Chest, Ears)**



ஏஞ்சல்ஸ் தருகிற ND-YAG Long Pulsed லேசர் சிகிச்சை Advanced Technology மூலம் தேவையற்ற ரோமங்களை குறைந்த சிட்டிங்கில் நிரந்தரமாக நீக்கி விடலாம். இது பெண்களுக்கு மேல் தாடை – கீழ் தாடை – அக்குள் – வயிறு – மார்பகம் போன்ற பகுதிகளிலும் தேவையற்ற ரோமங்களை நீக்கிவிடலாம்.

## GOOD BYE TO BALD HEAD WITHIN ONE HOUR THRU SILICON SYSTEM®



பாதி வழுக்கை, பாரம்பரிய வழுக்கை, வியாதிகளால் உதிர்ந்த உங்கள் தலை முடியை *சிலிகான் சிஸ்டம்* என்ற நவீன தொழில் நுட்பத்தின் மூலம் தலைமுடியை ஒழுங்கு படுத்திவிடலாம்.

## COLOUR IMPROVEMENT & PIGMENTATION



ஏஞ்சல்ஸின் Imported Inhibitors சிகிச்சையை உபயோகிப்பதன் மூலம் உங்கள் சருமத்தில் ஓவர் ஆக்டிவேட் ஆன மெலனின் பிக்மெண்டுகளை லைட்டாக்கலாம். இதன் மூலம் நிறத்தை மேம்படுத்தலாம்.

## HAIR FALL CONTROL & REGROWTH IS POSSIBLE FOR LADIES thru PHOTO LASER THERAPY



பெண்களுக்கு அடர்த்தி தன்மையற்ற தலைமுடிக்கு ஃபோட்டோ லேசர் தெரபி என்ற அதிநவீன சிகிச்சையின் மூலம் தலைமுடியை வளர செய்யலாம். இது 100% பாதுகாப்பான சிகிச்சை.

DURAI: Veeyar Nilayam, No.171, KK Nagar, Opp. A.R. Hospital. Ph: 0452-4395859, 2583738.
CHY: Neptune Towers, No.B-11/1, Thillai Nagar. Ph: 0431-4311569, 2765859
NNAI: AA1, 1st Cross St., 3rd Main Road, RVR Towers, 2nd Floor, Annanagar.
044-26212547 / 26213468, 42176679. Cell: 98400 46599.
MBATORE: RR Complex, V.O.C. Road, R.S.Puram. Ph: 0422 - 6547577, 2547889. Cell: 92444 15899
derabad - (040)23222111, 66368999 ● Bangalore - (080)41153995, 41153996, 09845566799
விவரங்கள் அறிய பிரதி புதன் கிழமை மற்றும் சனிக்கிழமை VIJAY TV - யில் காலை 10.30 முதல் 11.00 மணி வரை காணத்தவறாதீர்கள்.
angelsgroup.co.in
Under Doctor's Supervision
*Conditions Apply




**ந**மது உடம்பில் பி-12, இரும்புச்சத்து, புரதச்சத்து இம்மூன்றும் குறைந்தால், இளநரை ஏற்பட வாய்ப் புள்ளது.

எனவே, முதல் காரியமாக, கேரட், தக்காளி, பீட் ரூட், தர்பூசணி, மாதுளம் பழம் போன்ற சிவப்பு நிறமுடைய காய்கனிகளை ச் சாப்பிட ஆரம்பிங்க.

காலேஜ் லஞ்சுக்கு கறிவேப்பிலைத் துவையலை 'மஸ்ட்' ஆக்குங்க! கைப்பிடியளவு ஃப்ரெஷ்ஷான கறிவேப்பிலையுடன் இரண்டு டேபிள் ஸ்பூன் வறுத்த உளுத்தம்பருப்பு, புளி, உப்பு வைத்து அரைத்து, சாதத்துடன் பிசைந்து சாப்பிடுங்க. இப்படி ஒரு மாதம் சாப்பிட்டுப் பாருங்க. இளநரை மறைந்து விடும்.

உடல் சூட்டினாலும் இளநரை அதிகமாகும். இதற்கு அதிக அளவில் நீரோ, மோரோ, இள நீரோ குடிக்கவும். நேரத்தோடு தூங்கவும்.

'கிரான்ட்மாஸ் ஓல்டுஃபாஷன்' என்று ஒதுக்காமல், வாரம் ஒரு தடவை நல் லெண்ணெய் தேய்ச்சுக் குளிக்கணும். நல்லெண்ணெய்யை 'பரபர' என்று தேய்த்து, ஷாம்பூ போட்டுக் குளித்து விடக் கூடாது. நல்லெண்ணெயை இலேசாக சூடுபடுத்தி, இளம் சூட்டோடு, உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை இதமாகத் தடவி, ஒ[illegible] மணி நேரமாவ[illegible] ஊற வேண்டு[illegible] பின்பு சீய காய்த் தூ[illegible] கலந்து குளி[illegible]தால், உடல் சூடு தணியு[illegible] இளநரை மறையும்.

முளை கட்டிய தானியங்க[illegible] பேரீச்சம்பழம், அத்திப்பழ[illegible] முருங்கைக்கீரை, கேழ்வர[illegible] வெந்தயம் இவற்றை அ[illegible] அளவில் உணவில் சேர்த்து கொண்டாலும் இளநரை ஏற்பட[illegible] மேனியும் ஹால்மார்க் தங்க போல தகதகக்கும்.

**பிரச்னை : இளநரை**

**ஏஜ் க்ரூப் : டீனேஜ்**

**தீர்வு : சத்துணவு + எண்ணெய் குளியல்**

### இளநரை தீர எண்ணெய்!

முளை கட்டிய வெந்தயம் - 50 கிராம்
தேங்காய் எண்ணெய் - கால் கிலோ
ஏலாதி கீரம் - இரண்டு
(ஏலக்காய் இலைகள்)

செக்கில் ஆட்டப்பட்ட தேங்காய் எண்ணெயில், முளை கட்டிய வெந்தயம், ஏல இலைகளைப் போட்டு, பெரிய கொட்டாங்குச்சியில் நாள் முழுவதும் வெயிலில் இட்டு அவற்றிலேயே பராமரிக்கவும். இந்த எண்ணெயைப் பூசி வர, இளநரை 'டாடா' சொல்லிவிடும்!

# என்றும் 16!

**புதிய பகுதி ஆரம்பம்**



Dabur Amla Nelli Hair Oil

Dabur

# "கருப்புதான் அழகு!"

- நடிகை சினேகா.

## சினேகா அவர்கள் எந்தத் தேங்காய் எண்ணெய் உபயோகிக்கிறார்?

சினேகா சிரித்துக் கொண்டே, "தேங்காய் எண்ணெய்யா? அதைவிட்டு நான் எவ்வளவோ நாள் ஆச்சு. நான் டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில் மட்டுமே உபயோகிக்கிறேன்".

சாதாரணத் தேங்காய் எண்ணெய்யால் இத்தகைய கண்கவர் கருப்பழகை தரமுடியாது. டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலால் அது முடியும். இதில், நூற்றாண்டுகளாக போஷாக்கைத் தரும் நன்மை உள்ளது. இது கண்கவரான கருப்பழகைப் பெற உதவுகிறது".



டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில், கூந்தலை வெயில், மாசு போன்ற கடுமையான பாதிப்புகளிலிருந்து பாதுகாக்கிறது. இல்லையேல் கூந்தல் பொலிவற்றதாகவும், வலுவற்றதாகவும் ஆகிவிடும்.



மொத்தத்தில் டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில் கூந்தலுக்கு கண்கவரான கருப்பழகையும், உறுதியையும் தருகிறது*.

## சினேகா ஏதாவது கேசப் பராமரிப்பு முறையை பின்பற்றுகிறாரா?

"ஆமாம்! தினமும் இரவு ஒரு கையளவு டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலை எடுத்து உச்சந்தலையில் மென்மையாக மசாஜ் செய்வேன். பின்பு முடியின் நுனி முதல் வேர் வரைத் தடவுவேன். முடியை நன்றாக வாரிவிட்டு, பின்னலிட்டுக் கொண்டு தூங்கச் செல்வேன்.

காலையில் மென்மையான ஹெர்பல் ஷாம்பூவால் முடியை அலசுவேன். இயற்கையாக கூந்தலை உலரவிட்டு, பின்பு நன்றாக வாருவேன்.

பிறகு சிறிது டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலைத் தடவுவேன். இதனால் என் கூந்தல் பொலிவையும், பளபளப்பான கருப்பழகையும் பெறுகிறது."

நீங்களும் இந்த முறையை சில மாத காலம் பின்பற்றிப் பாருங்கள். டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலை தினமும் உபயோகித்து கண்கவரான கருப்பழகைப் பெறுங்கள், சினேகாவைப் போல.







மேலும் விவரங்களுக்கு இமெயில் consumercell@dabur.com • தொலைபேசி 0120-4181100 • இணையதளம் www.dabur.com



# ரூ.5,000 பரிசு சுற்றுலா போட்டி-4 பரிசுபெறும் அதிர்ஷ்டசாலிகள்!

1. டி.பானுமதி, சென்னை
2. எம். ரதிப்ரியா, பழனி
3. பி. உமா, சேலம்
4. ஹிமயா, பொன்மலை
5. ஜெ. மணிமேகலை, வேதாரண்யம்
6. டி. தாரிணி, கும்பகோணம்
7. பி.சர்மிளா பானு, கரட்டடிபாளையம்
8. என். சாந்தா, நாகர்கோவில்
9. என்.பி.லக்ஷ்மி, பழங்கானத்தம்
10. ஜே.கமலகுமாரி, ஈரோடு
11. சாரதா செல்வராஜ், தர்மபுரி
12. கா. காந்திமதி, பென்னாத்தூர்
13. அ.பியூலா, திருச்சி
14. எஸ். நாச்சியார், சங்கரன்கோயில்
15. மு.கஸ்தூரி, ஹைதராபாத்
16. ஜெயலக்ஷ்மி, பெங்களூர்
17. எஸ்.சந்தானலக்ஷ்மி, சிவகங்கை
18. லக்ஷ்மிநாகேஸ்வரன், பெருந்துறை
19. ஜே. ஸ்ரீநிவாஸன், பொள்ளாச்சி
20. எஸ்.சுதாசுப்புலக்ஷ்மி, வீரவநல்லூர்

## மே 2010ல் வெளியான சுற்றுலா போட்டி-4 விடைகள்

*விடைகள்:*

*1. காஞ்சி 2. மலேசியா 3. மதுரை 4. காஷ்மீர் 5. ஜெர்மெனி 6. ஊட்டி 7. மெட்ராஸ் 8. மெல்பர்ன் 9. மதுரா 10. அந்தமான்*

## கூல் கும்மா!

கோடை வெயிலை சமாளிக்க என்ன செய்யலாம் என எல்லோரும் தவிப்பார்கள். நம் உடல் நலம் காப்பதில் தலைக்கு மிகவும் முக்கிப் பங்கு உண்டு.

❋ வாரத்தில் ஒரு நாள், வேப்பிலையையும் சிறிது தேங்காய்த் துருவலையும் சேர்த்து அரைத்து, தலையில் தேய்த்து பத்து நிமிடம் ஊறவைத்துக் குளித்தால், உடல் குளிர்ச்சி பெறும். பொடுகு தொல்லை தீர்ந்துவிடும்.

❋ வேப்பிலையுடன் சிறிது வெந்தயம் சேர்த்து அரைத்து, சிறு வில்லைகளாக்கி



வெயிலில் காய வைத்து, தேங்காய் எண்ணெயில் போடவும். இந்த எண்ணெயை தினமும் தலைக்குத் தடவி வந்தால் முடி உதிர்தல் நின்று, அரிப்பு, பேன் தொல்லையும் நீங்கிவிடும்.

❋ வேப்பிலையுடன் ஊற வைத்த பாசிப்பயறு சேர்த்து அரைத்து, தலையில் தேய்த்து குளிக்கலாம். அதையே உடலில் பூசிக் குளித்தால் சருமம் அழகாகும் வேர்க்குரு வராது.

*- எம்.மாலதிமணியன், பாண்டிச்சேரி*

# கிக் ஏற்றும் விஜய் மேஜிக்!

**'சுறா' விஜய்யின் 50வது படம்! அதை விருப்பத்தோடு பிரித்து மேய்கிறது, கலகல யூத் டீம் ஒன்று!**

**பொட்டானிக்கல் கார்டனையே வெக்கிறாங்களே!**

**சுவாதி:** விஜய்யோட ஐம்பதாவது படம். ரொம்பவே எதிர்ப்பார்ப்போட போனால், புதுசா ஒண்ணுமில்லே! அதே பஞ்ச் டயலாக், பில்ட் - அப் காட்சிகள், பறந்து பறந்து அடிக்கிற ஸ்டண்ட் காட்சிகள்!

**நிஷாந்த்:** டைட்டில் கார்டு போட்டதுலயிருந்து, 'வணக்கம், நீங்க வீட்டுக்குக் கிளம்பலாம்'னு சொன்னதுவரை, 'ஆ'ன்னு ரசிச்சுப் பார்த்துட்டு... என்னம்மா சீன் காட்டுது பாரேன்..!

**அஸ்வினி:** குப்பத்தை ஆக்ரமிச்சு, தீம் பார்க் கட்ட நினைக்குற வில்லனைத் தீர்த்துக் கட்டுகிறார் மீனவ இளைஞன் சுறா! ஒரு வரி கதையை நல்ல கலர்ஃபுல் என்டர்டெயின்மென்டா கொடுத்திருக்காரு டைரக்டர் எஸ்.பி. ராஜகுமார்.

**அருண்:** 'சுனாமியும் சூறாவளியும் சேர்ந்தே வருது', 'எனக்குப் பின்னாடி ஒரு கூட்டமே இருக்கு...' 'ஒவ்வொருத்தரும்

சிங்கக் குட்டிங்க... சிறுத்தைக் குட்டிங்க!', 'அடி.. இல்ல இடி!'' இது மாதிரி டயலாக்கை இன்னும் எத்தனை நாளைக்குத்தான் விஜய் பேசுவாரோ! அவருக்கே போரடிக்கலையா?

**சுவாதி:** சி.எம் ஆறதுக்கு விஜய் இப்பவே பிளான் பண்ற மாதிரிதான் இருக்குது!

**நிஷாந்த்:** ஆனாலும் அண்ணன் அம்பர்லாவாக வடிவேலு பண்ற காமெடி ஒவ்வொண்ணும் ஜாலியாதானே இருக்கு!

**அஸ்வினி:** வடிவேலு நல்ல ஃபார்ம்ல இருக்காரு. கான்ஃபிடன்டா காமெடி பண்ணி, கலக்கிடறாரு! குறிப்பா, என் கவுன்ட்டர் கைதிக்கு 'உபசாரம்' செய்யும் காட்சி, சிரிக்க வைக்குது.

**சுவாதி:** பதினாறாவது படகுப் போட்டிக்கு, பந்தாவா கிளம்பிப் போவாரே! அதுதான் இன்னும் ஓவர்ட்டி!

**அருண்:** தமன்னாவைப் பத்திப் பேசுங்கப்பா!

**நிஷாந்த்:** கலர் கலர் காஸ்ட்யூமில், ஜாலி ஆட்டம் போடுகிறார். 'ஓ... கடல் மாதாவே... என்னை ஏத்துக்க!' என்று அவர் கடலுக்குள் ஸ்டைலாக நடந்துபோவது ரசிக்க வைக்குது!

**அஸ்வினி:** ஏழை மீனவரான விஜய், லேப்- டாப் இயக்குகிறார். 'ஆடி' காரை ஓட்டுகிறார். கோர்ட்டில் வாதாடுகிறார். ஹலோ... இன்னாங்கப்பா நடக்குது? காதுல பொட்டானிக்கல் கார்டனையே வைக்கிறாங்களே! அதைஅப்படியேமறந்துட்டு, வடிவேலுவையும், தமன்னாவையும் பத்தி பேசிக்கிட்டு இருந்தா எப்படி?

**அருண்:** குப்பத்து ஜனங்களின் ரேஷன் கார்டுகளை வாங்கிப் பாதுகாத்து வைக்கிறாரே! அது ஒண்ணுதான் கொஞ்சம் புதுசு! மற்றபடி எல்லாமே எம்.ஜி.ஆர். ஃபார்முலாதான்!

**ஸ்வாதி:** மணி சர்மா மியூஸிக் எப்படி?

**அஸ்வினி:** 'பொம்மாயி!' பாட்டுக்குத் தியேட்டரே மூவ்மென்ட் கொடுக்கிறது. மற்றவை எல்லாமே விஜய் ஸ்பெஷல் மசாலா மிக்ஸ்!

**அருண்:** அப்புறம், மூடுக்கு ஏற்ப வேகம் காட்டியுள்ள ஏகாம்பரத்தின் கேமிரா படத்துக்கே ப்ளஸ்! பம்பரமாகச் சுழன்று, வண்ணங்களை அழகாகக் கொட்டியுள்ளது.

**நிஷாந்த்:** லாஜிக் இருக்கோ இல்லையோ... ஒரு விறுவிறுப்பான கிக் இருக்குல்லையா? அது போதும்! விஜய் மேஜிக்... இட் ராக்ஸ்!

**- மங்களேஸ்வரி**




படங்கள்
ஸ்ரீஹரி

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

# Senior Care Beyond Compare



## The Retreat - Soundaryam

## Soundaryam @ Idigarai

**Covai Property Centre** has been involved in creating quality comfort and retirement homes for senior citizens for the past five years in Coimbatore. Our Comfort and Retirement Homes are like resorts, designed to provide care to the senior citizens.

Soundaryam, Santhosham & Shenbhagam are exclusive Senior Care Projects developed by us and we will have over 400 dwellings by 2012 in Coimbatore.

Covai Property Centre now presents yet another destination for Senior Citizens to enjoy care, comfort and absolute peace. Soundaryam @ Idigarai is being launched in July 2010 at Coimbatore.

- Specially designed 170 dwellings of single, double & three bedroom apartments as well as Villas.
- Spread over five acres, Soundaryam @ Idigarai is located just 3 kms from Thudiyalur on Mettupalayam Road
- Thudiyalur is a buzzing suburb of Coimbatore with many residential projects, schools, colleges, hospitals, shopping centres etc
- Mettupalayam Road will be a four lane road and the work has begun



# We are also planning for similar facilities in other cities. Please take part in the survey in our website.



## Choice of Designs

- **Studio apartment (600 sqft), 2 BHK (900 sqft), 3 BHK (1420 sqft) and Villas (1650 sqft)**
- **Common amenities and infrastructure will be similar to Soundaryam, Santhosham and Shenbhagam Comfort and Retirement Homes**
- **Access to Assisted Care Centre, Centre for Alzheimer and Nursing Care being set up adjacent to Soundaryam-Santhosham Complex.**

## Attractive & Affordable Cost

- **Rs.15 lacs for Studio, Rs.23 lacs for 2 BHK, Rs.35 lacs for 3 BHK and Rs.55 lacs for the Villa.**

(This is only indicative basic cost)

*Conditions apply

For details of Senior Care and our plans, please visit Senior Care Section in our web site

www.covaiprop.com

An ISO 9001 : 2008 certified Company



• Member-CPDA •




An Ex- Serviceman's Enterprise

727, Damu Nagar, Puliakulam Main Road, Coimbatore - 641 045.
Ph : 91-422-2312367, +91-422 6572625,
Mob: 9894317841. Fax: +91-422-2312367.
E-mail: covaiprop@vsnl.net (or) covaiprop@airtelmail.in

**REGISTER YOUR NAME WITHOUT ANY PAYMENT**

எஸ்.ராஜேஸ்வரி, மேற்கு மாம்பலம்

*சிறுவயதில் உங்கள் சொந்த வீடு எப்படியிருக்க வேண்டும் என்று கனவு கண்டது உண்டா அனுஷா?*

பெண்ணாய்ப் பிறந்துவிட்டு அதை யெல்லாம் கனவு காணாமல் இருக்க முடியுமா? குளிர் பிரதேசத்தில் சின்னக் குன்று. அதில் சிறிய பள்ளி. அதன் ஆங்கில ஆசிரியை நான். நடந்து செல்லும் தூரத்தில் எங்கள் வீடு! வர்ணம் எதுவும் தேவையில்லாத வெள்ளைச் சுண்ணாம்பு பூசிய ஓட்டு வீடு! அதற்கு காம்பவுண்ட் சுவர்கூட இல்லை. மஞ்சள், சிவப்பு, வெள்ளை, ஆரஞ்சு என கலர் கலராகப் பூத்துச் சொரியும் போகன்வில்லா கொடி படர்ந்த வேலிதான்!

ஆனால், நிஜத்தில் அதெல்லாம் நடக்கவில்லை! வெயில் வறுத்தெடுக்கும் சென்னையில், பத்திரிகைப் பணி! எளிய ஆனால் சௌகரியமான ஃப்ளாட்! நான் அதனுடன் தினமும் பேசுகிறேன். வெளியே போகும்போது, 'பத்திரமா இரு!'' என்கிறேன். நவராத்திரி பஞ்சமி தினத்தன்று, எங்கள் ஃப்ளாட்டுக்குப் பிறந்த நாள் கொண்டாடுகிறேன். பூஞ்சரங்களால் அலங்கரித்து, முன் வாசல் கதவை, சுவர்களை அணைத்து, முத்தமிட்டு, ''ஹாப்பி லாங் லைஃப்!' என்று கொஞ்சுகிறேன். என் வீட்டில் இருக்கும் போது கவியும் நிம்மதியும் சந்தோஷமும் வேறு எங்கும் கிடைப்பதில்லை.

*கனவில் கண்டது போகன்வில்லா வீடு!*

*நிஜத்தில் உள்ளது சோகம் இல்லா கூடு!*



## திடீர் சமையல்



சந்திரா, மயிலாப்பூர்

*உங்களுக்கு இந்தக் காலத்துப் பெண்களைப் போல 'திடீர் சமையல்' செய்யத் தெரியுமா அனுஷா?*

ஏன் தெரியாது! ஒரு ரெஸிபியே தருகிறேன், பாருங்கள்.

**தேவையானவை:-**

மெதுவடை : 10






தயிர் :
2 கிண்ணங்கள்
உப்பு ; சிறிது
மளிகைக் கடையில் விற்கும் தயிரை வாங்கி, ஒரு கிண்ணத்தில் இட்டு, உப்பு கலக்கவும். அதில் மெதுவடைகளை ஊறப் போட்டு, பரிமாறவும். ருசியான திடீர் தயிர் வடை தயார்!

பலகாரக் கடைக்கு உங்கள் மகனை அனுப்புங்க. ஊறப் போட்டுப் பரிமாறும் வேலையை உங்கள் கணவரிடம் கொடுத்து விடுங்க. அப்புறமென்ன... சிரமமில்லாமல் திடீர் தயிர் வடை செய்த உங்கள் ஐடியாவைப் பிரசுரித்துத் திடீர்ப் பரிசும் தர, நாங்க ரெடி!

அ.முரளிதரன், மதுரை - 3

*விஜய் டீ.வி.யில் ஜூனியர் சூப்பர் சிங்கர் நிகழ்ச்சியைப் பார்ப்பதுண்டா?*

எஸ்.ஜானகி, எஸ்.பி.பி, ஹரிஹரன் போன்ற ப்ரொஃபஷனல் பாடகர்கள் ஒத்திகை பார்த்து, பல டேக்குகள் எடுத்து, பிட்டு பிட்டாகப் பாடி உருவாக்கிய பாடல்களை, நண்டு, சிண்டு, வாண்டுகள் ஜஸ்ட் லைக் தட், ஒரே மூச்சில் பாடி அசத்துகிறார்கள்...அந்தத் திறமையும் தன்னம்பிக்கையும் பலே! குறிப்பாக ரோஷன், அல்கா, இருவரின் குரலும் ரேஷன் அல்கா!



# தெரியுமா?

## அனுஷா நடராஜன்

வி.ஸ்ரீவித்யா, குடந்தை - 1

*நீங்கள் சிறு வயது முதல் இப்போது வரை எந்த விஷயத்தில் உறுதியாக இருக்கீங்க அனுஷா...?*



குழந்தைகளை அடிக்கக்கூடாது என்பதில் தான். குழந்தை என்பது இளங்காலை சொப்பனம்; பேசும் அதிசய பூ! ஆனால், சில வீடுகளில் பெற்றோர்கள் தங்கள் கோபத்தை, இயலாமையை மடைமாற்றுகிற வாய்க்கால்களாக குழந்தைகளை ஆக்கிவிடுகிறார்கள். நமது கோபத்தை எவர்சில்வர் பாத்திரங்களிடம் காட்டினால், அவை வளைந்து

நெளிந்து பயனற்றுப் போகும்... குழந்தைகளிடம் காட்டினால் அவர்கள் மனமும் அது போலத்தான்... பின்பு எப்படித் தட்டிப் பார்த்தாலும், விழுந்த 'டொக்கு' சீராகாது.

இதன் காரணமாகத்தான் நான் என் பெற்றோரிடமோ, ஆசிரியர்களிடமோ அடி வாங்கியதில்லை. என் மகனையும் ஒருஅடி கூட அடித்ததில்லை!

கு.தேவிகுமார், ஸ்ரீரங்கம்

*சமீபத்தில் உங்களை ஆனந்தம் அடையச் செய்தவர் யார்?*

ஆனந்தேதான்! முப்பது ஆண்டுகளாக சதுரங்க ராஜாவாகத் திகழும் விஸ்வநாத் ஆனந்தின் சாதனைகள் வியக்கவும், பெருமைப்படவும் வைக்கின்றன!

சிறுவயதில் ஒருமுறை, ஆனந்த், டில்லியில் ஒரு செஸ் டோர்ன்மென்ட்டில், மிக அபத்தமான மூவ் செய்து தோற்றுவிட்டாராம். உடனே அவரது தாயார், ஒரு ஆர்ச்சீஸ் காமிக்ஸ் புத்தகத்தை வாங்கித் தந்துத் தேற்றினாராம். அதைப் படித்து, தனது 'மூடை' மாற்றிக் கொண்டாராம் ஆனந்த். இப்படிப்பட்ட அம்மாக்கள் எங்கும் இருந்தால், ஆனந்தத்துக்குக் குறைவேது?



எஸ்.விஜயா சீனிவாசன், திருச்சி - 13

*வாசகியர்களிடமிருந்து 'டோஸ்' வாங்குவதுண்டா அனுஷ்?*

எக்கச்சக்கமா! 'மே' மாத மங்கையர் மலரில் 50ம் பக்கம் வெளியான ஆஹா 50! பற்றிய ஏகப்பட்ட விமர்சனக் கணைகள் என்மீது பாய்ந்துவிட்டன!

'மாமியாரானவர் மருமகளிடம் மிடுக் கோடு இல்லாமல் வாழ்க்கை அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளலாம். இதனால் இருவருக்குமிடையேயான உறவு அன்போடு பலப்படும்'ன்னு ஒரு டிப்ஸ் கொடுத்துட்டீங்க! இந்தக் காலத்துப் பெண் எவளாவது, மாமியாரிடம் சகஜமாகப் பேசிப் பழகுகிறாளா? இரண்டு வார்த்தைகளைப் பேசிவிட்டு, மூன்றாவது வார்த்தையை ஆரம்பிக்கும் போதே, ஏளனப் பார்வையை அல்லவா வீசுகிறார்கள்?' என்று ஒரு வாசகியும், ''என்னுடைய பழைய கதைகளை ஏதோ ஜோரில் சொல்லிவிட, என் மருமகள் என்னை பைசாவுக்கு மதிப்பதில்லை!'' என்று ஒரு சகோதரியும் ''போதும் உன் புராணம்; தொணக்காதே! வாயை மூடு!'' என்று மகனே எரிந்து விழுவதாக ஒரு பாட்டியும் புலம்பித் தீர்த்து விட்டார்கள்.

இவர்களுக்கு நான் சொல்ல என்ன இருக்கிறது, ''வெரி ஸாரி!'' என்பதைத் தவிர!

காளீஸ்வரி காளிதாசன், நீர்விளங்குளம்

*கணவனைவிட மனைவிக்கு அதிக சம்பளம் - சங்கடமா? சந்தோஷமா?*

சங்கஷம்!

*பெண்கள் எல்லோரும்*
*ஆண்களுக்குப் பிடித்தமானவர்களே!*
*அவரவர் தம் மனைவியாக*
*இல்லாதபோது!*

*- ராதிகா ரவி, கடலூர்*

# நகைகளில் நேற்றும்... இன்றும்... நாளையுமான பல்சானி...!
# ஒருமுறை வாருங்கள்....
# புதுமையாக திரும்புங்கள்!

சிறப்புச் சலுகை
01.06.10
முதல்
30.06.10

**1 கிராம் செயின் 2 வாங்குபவர்களுக்கு ½ கிராம் செயின் இலவசம்!**

**Temple Jewels**

விலை ரூ.1250 முதல் ஆரம்பம்

## அமெரிக்கன் டைமண்ட் நகைகள்

விலை ரூ. 1000/- முதல் ஆரம்பம்...

## 1 கிராம் தங்க முலாம் பூசப்பட்ட நகைகள்

விலை ரூ.800 முதல்...

## அமெரிக்கன் டைமண்ட் வளையல்கள்

விலை ரூ.1100 முதல் ஆரம்பம்

• உங்கள் கண்களை கவரும் Temple Jewels, பல வண்ணங்களில், பலவித டிசைன்களில் உங்கள் பல்சானி ஜுவல்லர்ஸ்-ல் மிகமிக குறைந்த விலையில் அறிமுகமாகி உள்ளது.

• இளைய தலைமுறைகளை சுண்டியிழுக்கும் வெள்ளியில் பதித்த அமெரிக்கன் டயமண்ட் நகைகள், அழகான டிசைன்களில்.... குறைந்த விலையில்! பாலீஷ் போய்விடுமோ என்ற கவலை வேண்டாம். மீண்டும் பாலீஷ் செய்து கொள்ளலாம். இதன் விலை ரூ. 1000/- முதல் ஆரம்பம்.

• உங்கள் வாழ்க்கையில் வளம் பெற, வியாபாரத்தில் செழிக்க, கண்களை கவரும் விலை உயர்ந்த ஒரிஜினல் ராசிக்கற்களை வெள்ளியில் பதித்து 350 ரூபாய்க்கு குறைந்த விலைக்கு விற்பது நாங்கள் மட்டும்தான் இது தவிர 22 கேரட் ராசிக்கல் மோதிரம் உண்டு. அதுவும் 100 சதவிகிதம் உத்திரவாதத்துடன்.

• ஒருவித ஸ்பெஷல் உலோகத்தின் மேல் கிராம் அல்லது 1 கிராம் தங்கம் 'கோட்' செய்யப்பட்டு உருவாக்கும் தங்க நகைகள்தான். இன்றைய பேஷன் உலகின் நவநாகரீக மங்கைகளின் உள்ளத்தில் நம்பர் ஒன் இடத்தை பிடித்திருப்பது!

• நீங்கள் வாங்கிச் செல்லும் மூக்குத்தி தோடுகளை தோடுகள் மேல் தோடாகவும் அல்லது குழந்தைகளுக்கு தோடாக அணிவித்தும் அழகுபடுத்தலாம். பரவசப்படுத்தும் எண்ணற்ற வண்ணங்களில் 22 கேரட் தங்கத்தால் தயாரிக்கப்பட்ட மூன்று மூக்குத்தி வாங்குபவர்களுக்கு ஒரு Silver Coin இலவசம்.

• நீங்கள் வாங்கிச் செல்லும் கிராம் தங்க நகையை உபயோகப் படுத்திய பின் ஆறு மாதத்துக்குள்ளும், ஒரு கிராம் தங்க நகையை உபயோகப்படுத்திய பின் ஒரு வருடத்திற்குள்ளும் எங்களிடம் திருப்பித் தந்தால், 50 சதவீதம் தள்ளுபடி செய்து வேறு புதிய நகையை எங்களிடம் பெற்று மீண்டும் நீங்கள் ஜொலிக்கலாம்.

• பல்சானி ஜீவல்ஸ் நகைகளை ஆன்லைன் மூலமாகவே வாங்கலாம்! எங்களுடைய புதிதாக ஆரம்பிக்கப் பட்டுள்ள இணையதளம் www.sripalsanijewels.com மூலம் நகை வாங்குபவர்களுக்கு டெலிவரி சார்ஜில் 50% சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும்.

**சிறப்புச் சலுகைகள்:**

1 gm மற்றும் American Diamond நகை வாங்குபவர்களுக்கு மட்டும்

உங்கள் நகைகளுக்கு 100% உத்திரவாதம் உண்டு.

ரூ. 100 முதல் ரூ. 1000 வரை மாத சீட்டு உண்டு.

ரூ. 500 முதல் ரூ. 1000 வரை வாங்குபவர்களுக்கு ஒரு ஜோடி American Diamond கம்மல் இலவசம்

ரூ. 1,500/- முதல் ரூ. 2,500/- வரை வாங்குபவர்களுக்கு 5 Per கம்மல் இலவசம்

ரூ. 2,500/-க்கு மேல் வாங்குபவர்களுக்கு ஒரு American Diamond Necklace set இலவசம்

**Sri Palsani Jewels**
110, Dr. Radha Krishnan Road
(Near Sri Krishna Sweets) Chennai - 4
**Phone: 2811 1737, 2811 7036**

**www.sripalsanijewels.net**

Shiva

ஒரு பக்கத்துக்கு ஜோக்ஸ். படித்துச் சிரித்து, வயிரே புண்ணாய்ப் போச்சு! இதுகூட நல்லாதான் இருக்கு. இனி வரும் இதழ்களிலும் இது தொடரட்டும்.

- பி.கோகுல், அண்ணாமலைநகர்

'நியூஸ் மார்ட்' பகுதியில் டெல்லியில் கார்களுக்கு கட்டுப்பாடு கொண்டுவருவது போல், சீனாவில் வீடுகளுக்கு கட்டுப்பாடு கொண்டு வந்துள்ளது போல் இந்தியாவிலும் வீட்டுக்கு கட்டுப்பாடு கொண்டு வந்தால் நல்லது.

-பி. ஜெயலக்ஷ்மி, சென்னை

'நட்சத்திரக் கோயில்கள்' தொகுப்பு அனைவரும் பத்திரப்படுத்த வேண்டிய அரிய பொக்கிஷம்.

- என்.காளிதாஸ், சிதம்பரம்

'அன்புவட்டம்' பகுதியில் வெளியான 'அம்மா' சிறப்பு ஸ்டில், ஒரு கவித்துவமான விஷுவல் ட்ரீட்! அனுஷா அக்காவுக்கு நன்றிகள் பல!

- எஸ்.கௌரிலக்ஷ்மி, ஸ்ரீரங்கம்

தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து முதியோர் இல்லங்களும் சரியான தேர்வு என்பதை, அந்த இல்லங்களில் தங்கியிருக்கும் முதியோர்களின் வாக்குமூலமே 'பளிச்' என சொல்கிறதே! முதியோர் இல்லங்களில்கூட ஆத்ம சுகத்தோடு வாழ முடியும் என்பதை தங்கள் சேவையின் மூலம் நிரூபித்திருக்கும் மேற்படி இல்லங்களுக்கு நெஞ்சார்ந்த வாழ்த்துகள்.

-கே.பி.ஜெயந்தி, மதுரை

'திரைப்படம் ஓடியும் அன்னையர் தேடு' கட்டுரையில் ஒரு தவறு. நடிகை அஞ்சலிதேவி படத்தில், 'அன்பில் மலர்ந்த நல் ரோஜா' என்றுதான் பாடுவார். 'அந்தி மலர்ந்த நல் ரோஜா' எனப் பாட மாட்டார்.




அதோடு ரோஜா காலையில்தான் மலரும். இதை அகிலா கார்த்திகேயன், கவனிக்கவில்லை போலும்.

- கே.மகாலக்ஷ்மி, திண்டுக்கல் - 1

ஓவியர் வேதாவின் ஓவியத்தில் தன்னம்பிக்கை கொண்ட ஒரு தாயின் பாசம் ஜொலித்தது. அதன்மூலம் 'அன்னையர் தினச் சிறப்பிதழ்!' பக்கத்துக்குப் பக்கம் பிரகாசித்தது.

-ராமசுப்பிரமணியன், பெங்களூர்

அன்புள்ள அனுஷா, அக்ஷய திருதியைக்கு தங்கம் கிடைக்கும் என்று ஆவலாக இருந்த என் ஆசையில் இப்படி உப்பை அள்ளிக் கொட்டி விட்டாயே. 'உன் அபிமான மங்கையர்மலர் அனுஷாவே சொல்லிவிட்டார்' என்று என் கணவர், பையும் கையுமாக உப்பு

வாங்க புறப்பட்டு விட்டார்.

- பானு, சென்னை-88

## சொல்ல விரும்புகிறோம்

'அபி'யாக அனைவரையும் கவர்ந்த தேவயானி 'அம்மா'வாக அளித்த சிறப்புப் பேட்டி சூப்பர். அன்னையர் சிறப்பிதழுக்கே வைர மகுடம் சூட்டியது.

- எஸ்.பத்மலக்ஷ்மி, நாகேஸ்வரம்

வெற்றிச் சின்னத்தைக் காட்டி புன்னகைக்கும் தேவயானியைப் பார்த்ததும் மனதுக்குள் புது உத்வேகம் உண்டானது!

-எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி - 1

மங்கையர் மலர் புத்தகம் எங்கள் ஊருக்கு மட்டும் ஏன் மிகவும் தாமதமாக வருகிறது? இதனால் போட்டியில் கலந்து கொள்ள சிரமமாக இருக்கிறது. ஒவ்வொரு மாதமும் முதல் தேதியிலேயே வருமாறு பார்த்துக் கொண்டால் நலம். செய்வீர்களா?

- வி.எம்.ராம்குமார், அல்சூர்

'சம்மர் கிராஃப்ட்' பகுதி என் போன்ற சுட்டீஸ்களுக்கு மிகவும் பயன் தருகிறது.

- ஜி. மஞ்சரி, கிருஷ்ணகிரி - 1

தங்களுடைய தலையங்கம் படித்தால், ஏதோ நூலகத்தில் நுழைந்து, வெளிப் பட்டதுபோல் மனசு நிறைவு கொள்கிறது.

நான் படித்துவிட்டு, பக்கத்தில் இருக்கும் வடநாட்டுப் பெண்களுக்கும் கதை, கட்டுரைகளை மொழி பெயர்த்துச் சொல்வதால், அவர்களும் ஆவலாக, 'மங்கையர் மலரை' எதிர்பார்க்கிறார்கள். 'மங்கையர் மலர்' எல்லா மொழிக்காரர்களையும் கவர்ந்திருக்கிறது. எனக்குப் பெருமையாக இருக்கிறது.

- இந்திரா ராகவன், புனே

முகப்பு அட்டையை ரசித்**தேன்.**
'ஒரு வார்த்தை'யில் உள்ளம் கசிந்**தேன்.**
முதியோர் இல்ல செயல்பாட்டை
அறிந்**தேன்!**
'கவிதை'களிலே நனைந்**தேன்.**
'சிறுகதை'களில் சிலிர்த்**தேன்!**
'குக்கரி க்விஸில்' ருசித்**தேன்!**
'நேயர்களின் பகிர்வில்' நெகிழ்ந்**தேன்!**
என் அம்மாவின் நினைவில் கரைந்**தேன்!**
மொத்தத்தில் எல்லாமே
**தேன்! தேன்! தேன்!**

- பாலசாந்தி, கோவை - 41

# கொட்டிய உப்பு!



'அம்மா நான் தோத்துப் போயிட்டேன்' கதை அருமை. சரிதாவின் கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது போல என் கண்களிலிருந்தும் கண்ணீர் கொட்டியது.

- டி.மங்கை, கரூர்

# காப்பாற்றப்படுவது உங்

## அறுவை இல்லா

நம் வாழ்க்கை முறையில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் காரணமாக உடல் உழைப்பு குறைந்து விட்டது என்பது அனைவரும் அறிந்த உண்மை. இது போன்ற சூழலில் ஒரு சிலரால் மட்டுமே உயரத்திற்குத் தகுந்த உடல் எடையை கட்டுக்குள் வைத்திருக்க முடிகிறது. பலரால் முடிவதில்லை.

தேவையை விட 20 விழுக்காடு எடை கூடும்போதே மாரடைப்பு தோன்றும் அபாயம் 2 அல்லது 3 மடங்கு அதிகரித்துவிடும். இது போதாதென்று இவர்களிடம் உயர் இரத்த அழுத்தம் சர்க்கரை நோய் கொலஸ்ட்ரால் அதிகரிப்பு ஆகியவையும் இலவச இணைப்பாக வருவதற்கு வாய்ப்புகள் அதிகம்.

இவற்றில் குறிப்பாக இரத்தத்தில் கொலஸ்ட்ராலின் அளவு அதிகரிக்கும் போது கொரனரி இரத்த நாளங்களில் கொலஸ்ட்ரால் போன்ற இரத்தக் கொழுப்புச் சத்துக்கள் படிந்து, (Atherosclerosis) சிறிது சிறிதாக அடைப்பை ஏற்படுத்தும் இதன் விளைவாக உண்டாகும் நோய்களும் கேடுகளும் எவ்வித முன்னெச்சரிக்கையுமின்றி திடீரெனத் தாக்கக்கூடும்.

மாரடைப்பு முன்னெச்சரிக்கையின்றி திடீரென ஏற்படலாம். இதற்கு, கொரரி இரத்த நாள நோய்கள் தோன்றி நெடு நாட்களாகியுள்ளதே பெரும்பாலும் காரணமாகும்.

''ஆஞ்ஜைனா'' (Angina) என்றழைக்கப்படும் நெஞ்சுவலி ஏற்படுவதே ஒரு முக்கி அறிகுறியாகும். நெஞ்சுவலி, நடுமார்பில் தோன்றி, அங்கிருந்து பரவி கழுத்து, தாடை, இருகைகள், முழங்கை அல்லது மணிக்கட்டு வரை செல்லக்கூடும். இதயம் அதிக இரத்தம் வேண்டி ''அழும் குரலே'' இவ்வலியாகும். அதிக உடல் உழைப்பில் ஈடுபடும் போதும் (Physical exertion), உள்ளம் உணர்ச்சி வசப்படும் போதும் (Emotional upset), வயிறு நிறைய உண்ட பின்பும் இவ்வலி பெரும்பாலும் தாக்கக்கூடும். அப்பொழுது ஓய்வு கொண்டாலோ அதற்குரிய மாத்திரையை நாக்கிற்கு அடியில் வைத்து சப்பிக் கொண்டாலோ, வலி நீங்கிவிடும். ''ஆஞ்ஜைனா'' வலி மாரடைப்பல்ல. இதயத்தசை, தற்காலிகமாகத் தேவையான அளவு பிராண வாயுவைப் பெற முடியாத நிலையில், தனக்குப் பழுது ஏற்பட்டுவிடாமல் காக்க வேண்டி பிராண வாயுவைப்பெற இதயம் மேற்கொள்ளும் முயற்சியே இவ்வலியாகும் ''ஆஞ்ஜைனா'' வலியால் பாதிக்கப்பவர்கள், உரிய மருத்துவ ஆலோசனை பெற வேண்டும். சில நேரங்களில் ஓய்வு கொள்ளும்போதும். இது மிகவும் ஆபத்தான நிலையாகும்.



மாரடைப்பு (coronary Attack, Myocardia. Information) ''ஆஞ்ஜைனா'' வலி போன்ற வலி அல்லது மார்பில் இறுக்கமான ஓர் உணர்வு ஏற்பட்டு இந்நில 15 நிமிடங்களுக்கு மேல் நீடிக்குமானால் மாரடைப்பு ஏற்பட்டுள்ளதாக கருதலாம். அதாவது இதயத் தசையில்ஒரு பகுதி போதிய பிராண வாயுவைப் பெற முடியாமல் சிதைந்து விட்ட என்பதாகும். கொழுப்பு படிந்து தடித்துவிட்ட கொரனரி இரத்த நாளங்களில் போதிய இரத்த இதயத்திற்கு பாய்வதில்லை. மற்றும், இரத்த நாளங்களில் இரத்தம் உறைந்து கட்டியாகிவிடும் இந்த இரு காரணங்களினால் மாரடைப்பு ஏற்படுகிறது. இரத்த நாளங்களில் கொழுப்புப் படிந்து ஏற்கனவே தடித்திருப்பதால் அவற்றில் இரத்த உறைந்து எளிதில் கட்டியாகிவிடுகிறது இது, இரத்த ஓட்டத்தின்வேகம் குறையும் பொழுது ஏற்படக் கூடும்.

இரத்தக் கட்டி ஏற்படுவதற்குரிய காரணங்கள் இதய இயக்கத்தில் மாற்றம் (Rhythm Disturbance இரத்த ஓட்டத்தில் தொய்வு (Sluggish blood flow புகை பிடித்தல், மன உளைச்சல், பெண்க கருத்தடை மாத்திரை உட்கொள்ளுத முதலியனவாகும்.

இவ்வாறு இதய இரத்த நாளங்களில் ஏற்பட்டுள் அடைப்பை நீக்குவதற்காக, ஆஞ்சியோபிளாஸ் அல்லது பேபாஸ் சர்ஜரி ஆகியவைதான் தீர்வு என பல பெரிய மருத்துவ நிபுணர்களும் கருதுகின்றன ஆனால் இதற்கு இலட்சக் கணக்கில் செலவு செ வேண்டும்.

# கள் இதயம் அல்லவா!

## நவீன சிகிச்சை (ESMR)

தற்போது இதய இரத்த நாளங்களில் ஏற்பட்டுள்ள அடைப்புப் பிரச்சனைக்குத் தீர்வுகாண ஜெர்மனியில் ஓர புதிய அருத்துவ அறிவியல் சார்ந்த சிகிச்சை முறையை உருவாக்கியுள்ளனர். அதற்கு ESMR என்று பெயர் அதாவது (Extra Corporeal Shock Wave Myocardial Revascularisation) என்பதின் சுறுக்கமே ESMR.

இந்த புதிய சிகிச்சை முறையின்படி அறுவை சிகிச்சை எதுவும் தேவையில்லை. பல நாட்களுக்கு மருத்துவமனையில் தங்கி தவம் கிடக் வேண்டிய அவசியமும் இல்லை. மேலும் இது சிக்கனமான முறையும் கூட.












எல்லாம் சரி இந்த சிகிச்சைக்காக ஜெர்மனிக்கா போகமுடியும் என நீங்கள் நினைப்பது புரிகிறது. இதற்காக நீங்கள் எந்த நாட்டுக்கும் போக வேண்டாம் இந்த சிகிச்சை தற்பொழுது தமிழ்நாட்டில் நியோமெட் மருத்துவமனையிலேயே செய்யப்படுகிறது. சென்னை, மதுரை, திருச்சி, சேலம் ஆகிய ஊர்களில் உள்ள நியோமெட் மருத்துவமனைகளில் சிகிச்சை பெற்று இதய நலம் காக்கலாம்.

**NEOMED HOSPITAL**

SPECIALITY & RESEARCH CENTER

Timing : Weekdays 9 am to 6 pm. Sunday Holiday

**CHENNAI :**
2181, L-Block, 12th Main Road, Anna Nagar,
Chennai - 40. Ph: 044-26201147, 26200882.

**MADURAI :**
11, Lakeview Road, Opp.Sundaram Theatre,
K.K.Nagar, Madurai - 625 020.
Ph: 0452-2581414, 2581515.

**TRICHY :**
New No. 52, General Bazaar Street, Thennur,
Trichy, Phone : 0431-2791051, 2791052

**SALEM :**
127/1, 'Varalakshmi Towers', Gandhi Road,
Salem - 7. Ph: 0427-2311818, 2311819.

www.neomedhospitals.com www.esmrindia.com

சங்கீதா, பி.காம், இரண்டாமாண்டு கே.எஸ்.ஜி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சிங்கா நல்லூர், கோவை







# சபாஷ் சங்கீதா!

**ப**டிப்பு, நடனம், இசை, கட்டுரை, பேச்சு, ஓவியம், கோலம் வரைவது, சமையல், க்விஸ், பூங்கொத்துகள் தயாரித்தல், பொம்மைகள் செய்தல் என எல்லா வற்றிலும் சங்கீதா, நம்பர் ஒன்தான். இதுவரை 87 சதவிகிதம் மதிப்பெண்கள் பெற்று வரும் இவரது, கடுமையான முயற்சிகள் அடுத்த இலக்கான தங்கப் பதக்கத்தை பல்கலைக் கழக அளவில் பெற வேண்டும் என்பதே. ''சங்கீதாவால் நிச்சயம் முடியும்'' என்கிறார். இவரது துறைத் தலைவரான ஆறுமுகசாமி.

இவர் கல்லூரி வாலி பால் டீமின் கேப்டன் தடகளப் போட்டிகளில் சேம்பியன். இது மட்டுமல்ல இவரது தந்தை சின்ன இசைக்குழு ஒன்றை நடத்தி வருகிறார். அதிலும் சங்கீதா தனது திறமையைக் காட்டி அசத்துகிறார். ஆடல், பாடல் இரண்டுமே சங்கீதாவுக்கு கைவந்த கலை கல்லூரியின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இவரது நடனம் இருக்கும். வீடு முழுக்க வைக்க இடமில்லாமல் பதக்கங்களும், சான்றிதழ்களும், கோப்பைகளும் நிறைந்துள்ளன.

''என் தந்தையின் வருமானம் குறைவுதான். கல்லூரிப் படிப்பு வெறும் கனவாகவே நின்றுவிடுமோ எனப் பயந்து இருந்த எனக்கு, கே.எஸ்.ஜி கல்லூரியின் சேர்மன் கீதா மேடமும் முதல்வரும் ரொம்பவும் சலுகை கொடுத்து எனது படிப்பைத் தொடர வைத்தார்கள்.

''எதிர்காலத்தில் நல்ல திறமை வாய்ந்த ஒரு ஆடிட்டராக உருவாக வேண்டும் என்பதே என் இலட்சியம். அதை நான் நிச்சயம் அடைவேன்'' என்கிறார் சங்கீதா.

- ஆர்.பாலா

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!



மாங்காய் ஊறுகாய் போடும் போது புளிப்பு இல்லாமல், தோல் கனமாக உள்ள மாங்காயில் ஊறுகாய் செய்தால், ஒரு வருடம் வரை கெடாமல் இருக்கும்.

*- பத்மா சம்பத், சென்னை*

கல்யாணம் மற்றும் விசேஷங்களுக்கு சிறு சிறு எவர்சில்வர் பாத்திரங்களை அன்பளிப்பாகக் கொடுக்கிறார்கள். மிகச் சிறியதாக இருந்தாலும் மூடி போட்ட பாத்திரமாக இருந்தால் மிளகு, சீரகம், பெருங்காயம் போன்ற சமையல் பொருள்களைப் போட்டு வைக்கலாம். விலையும் குறைவாகதான் இருக்கும்.

*- வத்சலா சதாசிவன், சென்னை - 64*

புல் மார் துடைப்பம் வாங்கி பெருக்கும்போது, அவற்றிலிருந்து புல் உதிர்ந்து கொண்டே இருக்கும். இதைத் தடுக்க விளக்குமாறை வாங்கியதும் தண்ணீரில் நனைத்து, நன்கு காய வைத்து ஒரு தட்டு தட்டினால், புல் எல்லாம் உதிர்ந்துவிடும்.

*- எஸ். சங்கர், திருப்பரங்குன்றம்*

பெருங்காயத்தைப் பொரித்துப் பொடி செய்து மோரில் கலந்து குடித்தால் வயிற்றுப் பொருமல் சரியாகும்.

*- கே.விஜயலக்ஷ்மி, வேடந்தாங்கல்*

சமீபத்தில் நடைபெற்ற எனது உறவினர் இல்லத் திருமணத்தில், அன்பளிப்பாக கைப்பை வழங்கப்பட்டது. அதில் நன்றி தெரிவிக்கும் விவரம் பையின் அடிப் பாகத்தில் இருந்தது. கடையில் வாங்கிய பை போல் பார்க்க அழகாக இருந்தது. மற்றவர்களும் இதைப் பின்பற்றலாமே!

*- அமுதா, தேரழுந்தூர்*

கொள்ளு ரசம் தயாரித்து கொஞ்சம் மிளகு தூவி, சூடாகக் குடித்தால் நெஞ்சில் கட்டிய சளி கரையும்.

*- நாகலக்ஷ்மி கருணாநிதி, வந்தவாசி*

வேர்க்குரு இருப்பவர்கள், நாட்டு மருந்துக் கடையில் இருக்கும் சைனாக் களிமண் வாங்கி, சிறு உருண்டைகளை எடுத்து நீரில் போட்டு கரையுங்கள். இரவில் வேர்க்குரு மேல், இந்தக் களிமண் கரைசலை தடவுங்கள். மறுநாள் வேர்க்குரு போயே போச்சு.

*- அர்ச்சனா குமார், சென்னை - 116*

நீரிழிவு நோய் உள்ளவர்கள், அத்தி மரப்பட்டையைத் தட்டிப் போட்டு கஷாயம் வைத்து, குடித்து வர நோய் குணமாகும். அத்தி இலையைத் தளிராக பறித்து மென்று வந்தால் வாய்ப்புண் நீங்கும்.

*- வள்ளி ராமகிருஷ்ணன், திருவனந்தபுரம் - 2*

---

# சாரதா

தீராத நோயோடு போராடும் ஒரு பெண்ணின் தன்னம்பிக்கை ததும்பும் உண்மைக் கதை!

வாசகியர் கேள்விகளுக்கு சாரதா பதிலளிக்கிறார்

● கம்பீர்யாவின்

கேள்வி 1:

உங்களுக்கு மட்டும் எப்படி இவ்வளவு தன்னம்பிக்கை வந்தது?

என் வாழ்க்கை எனக்குக் கற்றுத் தந்த விலையுயர்ந்த பாடம், தன்னம்பிக்கை. இயற்கையில் நான் அப்படி இல்லை. சவால்கள் வர வர, அவற்றை சமாளிக்கும் தன்னம்பிக்கையும் தானாகவே வளர்ந்தது. என் நோயின் இடர்பாடுகளைத் தாண்டி, தாய் என்ற பாத்திரத்தை செவ்வனே செய்து முடிக்கவும், என் குடும்பம் திக்கு முக்காடாமல் இருக்கவும் என்னை நானே உத்வேகப் படுத்திக் கொள்ளும் நிர்பந்தம் தோன்றி

# பேசுகிறேன்!

யது. அந்த வெறி தான் தன்னம்பிக்கையை என்னுள் வளர்த்தது. அதோடு, என் அம்மாவும், எப்படியும் என் கடமையை நான் செய்ய வேண்டும் என்று திரும்பத் திரும்ப வலியுறுத்திய பாடம் இதில் முக்கியப் பங்கு வகித்தது.

சூழ்நிலை எப்படி இருந்தாலும் அதை எதிர்நோக்குகிற முறையில் தான் வித்தியாசப் படுகிறோம் இல்லையா? நான் இன்னும் வாழ்ந்து கொண்டிருப்பதில் எனக்கு பெரிய மகிழ்ச்சி, தெம்பு. அழுது புலம்பி, வருத்தப்படுவதில் எந்தப் பலனும் இல்லை என்பதை உணர்ந்தவள் நான்.

**கேள்வி 2: தங்கள் மனபலம் பலமுறை எங்களை ஆச்சர்யப்படுத்தியிருக்கிறது. எங்களைப் போன்ற சாதாரண குடும்பத் தலைவிகளுக்குத் தங்கள் ஆலோசனை என்ன?**

மனித வாழ்க்கை நமக்கு ஒரு வரப் பிரசாதம். இதை நாம் கொண்டாட வேண்டும். மனித வாழ்க்கை கிடைத்ததற்கு நிறைவு கொள்ள வேண்டும். அது புரியாமல், பல பேர் சின்னக் குறைகளையெல்லாம் பூதாகாரமாக்கி, தாங்களும் வருத்தப் பட்டு, மற்றவர்களையும் வருத்துவதைப் பார்க்கிறேன். தான் ஆசைப்பட்ட புடைவையை கணவர் வாங்கித் தரவில்லை, மாமியார் மூத்த மருமகளுக்கு அல்வா செய்து கொடுத்துவிட்டு தனக்கு மட்டும் ஒன்றும் தரவில்லை என்பதெல்லாம் சில பேருக்குப் பிரச்னையாக இருக்கிறது. இரண்டு நாட்களில் மாயமாக மறைந்து விடும் இடுப்பு வலியும், இருமலும் கூட புலம்பலுக்குக் காரணமாய் அமைகின்றன.

இந்தச் சிந்தனைகள் எல்லாம் நேரத்தையும் வாழ்க்கையையும் விரயமாக்கக் கூடியவை. இதற்கு பதிலாக, இருப்பதைக் கொண்டாட முயற்சி செய்ய வேண்டும். பிரச்னைகளுக்குத் தீர்வு காண முயல்வது தான் மனோபலம். எல்லா இன்பங்களும் பொருந்திய வாழ்க்கை யாருக்குமே அமையாது என்பதைப் புரிந்துகொண்டு வாழ்க்கையை சரியாக்கிக் கொள்ள முயல்வது தான் மனோபலம். மகிழ்ச்சியைப் பிறரிடமிருந்து எதிர்பார்க்காமல் மகிழ்ச்சியாய் வாழ முடியும் என்ற மனமுதிர்ச்சி இருந்து விட்டால், மனபலம் வந்துவிட்டது என்று அர்த்தம்.

**அஸ்தினாபுரம் கலாவதியின்**
**கேள்வி 1:**
**இத்தனை வேதனைகளை அனுபவித்து நம்பிக்கையோடு நோயை எதிர்கொண்டு வரும் நீங்கள், விரைவில் குணமடைய வேண்டும் என்று விரும்பும் பல வாசகியரில் நானும் ஒருத்தி. சின்ன காயத்திற்கே பதற்றப்படும் ஒரு சிலருக்கு தங்கள் அறிவுரை என்ன?**

எனக்கு இந்த நோயிலிருந்து பூரண குணம் எப்போது கிடைக்கும், எனக்கு அது கிடைக்குமா என்பதெல்லாம்

**உஷா ராமகிருஷ்ணன்**

எனக்குத் தெரியாது. ஆனால் ஸ்லீயுட னேயே நான் சந்தோஷமாக வாழ்வேன் என்பது மட்டும் தெரியும். இது போன்ற விசித்திர நோயோடும் மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்பதைப் புரிய வைப் பதற்காகவே கடவுள் எனக்கு இதைத் தந்திருக்கிறார் என்று தான் நினைக்கிறேன்.

கம்பி மேல் ஏறி நடப்பது என்று முடிவாகி விட்டால், பின் வாங்காமல் போய்க்கொண்டே இருக்க வேண்டும் என்பது தான் என் பாலிஸி. தரையிலிருப் பவர்கள் சுகம் புரியாமல் குதிப்பதைத் தான் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அந்தப் பாதையைக் கடந்து வந்தவள் என்ற முறையில் அவர்கள் பயத்தை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அதே நேரத்தில், கம்பி மேல் ஏறிவிட்டால், அடுத்த கட் டத்துக்கு நகரும் துணிவும் வந்துவிடும்.

மனைவியாகப் பார்ப்பதால் கலவரப் படுகிறார். என்னுடைய உடல் நலம் சரிவடைந்தால் ஆடிப் போகிறார். ஒரு மருத்துவராய் அவருக்கு இருக்கும் தெளிவு குறைகிறது. அப்படிப்பட்ட தருணங்களில், பாதிப்பு என்னால் என்பதால், என் நிலைமைக்கு நானே பொறுப்பேற்றுக் கொண்டு அவருக்குத் தைரியம் சொல் கிறேன். நான் தைரியமாக இருக்கிறேன் என்ற நம்பிக்கையை அவருக்குத் தருகிறேன்.

அதே நேரத்தில், அவர் மருத்துவராக இருப்பதால் என் உடல் இருக்கும் நிலையைத் துல்லியமாக என்னால் தெரிந்து கொள்ள முடிகிறது. அவரைத் துருவிக் கேட்டு உண்மையை வரவழைத்து விடு வேன். எனக்கு எது சரியென்று படுகிறதோ அந்த முடிவை நானே எடுத்து அவரிடம்

**வாழ்வியல் வல்லுநர் மற்றும் ஆன்மிக குரு சுவாமி சுகபோதானந்தாவிடம் சாரதாவுக்கு ஏற்பட்ட மன ரீதியான சில பிரச்னை களுக்கு தீர்வுகள் காணும் பொருட்டு தொலைபேசி**



**✱ கேள்வி 2: உங்கள் கணவர் மருத்துவர் என்பதால் உங்கள் நோயைப் பற்றிய விவரங்களை தெளிவு படுத்தினாரா? நோயால் நீங்கள் அவதியுறும் போது உங்கள் பிள்ளைகள் உதவுவார்களா?**

என் கணவர், என்னை நோயாளியாகப் பார்க்காமல்

ஊர்ஜிதமாகச் சொல்லி விடுவேன். உதாரணத்துக்கு, மூச்சுத் திணறல் ஏற்படும்போது, அதற்கு மருந்து கொடுப்பதற்கு முன், ''இந்த மருந்தின் பக்க விளைவாக உடல் வலி அதிகமாகத் தோன்றும்'' என்று அவர் எச்சரிக்கை விடுப்பார். அந்த சமயம் அதை ஏற்றுக் கொள்ள உடலும் மனமும் ஒத்து ழைக்காது என்று தோன்றி னால், மூச்சுத்திணறலை மருந்தில்லாமல்

சமாளிப்பதாகச் சொல்லி விடுவேன். அந்த முடிவை மதித்து, மாற்று சிகிச்சையை தாமதம் செய்வார்.

என் குழந்தைகளைப் பொறுத்த வரையில், அவர்களுக்கு நூறுக்கு ஆயிரம் மதிப்பெண்களை சற்றும் யோசிக்காமல் கொடுப்பேன். என் நிலையைப் புரிந்து கொண்டு, என்னிடமுள்ள எதிர்பார்ப்பைக் குறைத்துக் கொள்வார்கள். ''நான் ப்ராக்ரஸ் ரிப்போர்ட் வாங்க பள்ளிக்கூடம் வராதது வருத்தமா?'' என்று என் மகனிடம் ஒரு முறை கேட்டேன். ''அதுதான் பாட்டி வந்து ரிப்போர்ட் வாங்கினாரே, அப்புறம் என்ன?'' என்று சொல்லி விட்டு சிரித்துக்கொண்டே ஓடிய அவனது போக்கு என்னை வியக்க வைத்திருக்கிறது. மலைப்பிரதேசத்திற்கு சென்று மூச்சு விடத் திணறியபோது, ட்ரெக்கிங் போக முடியாமல் போனதைஒரு பொருட்டாகவே மதிக்காமல் என் மகள், எனக்கு ஆறுதல் சொன்னதை எப்போது நினைத்தாலும் நெகிழ்ந்து போவேன்.

**மூலம் கேள்விகள் கேட்கும் வாய்ப்பு சாரதாவுக்கு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டது. அடுத்த இதழில் அவற்றை உங்களிடம் பகிர்ந்து கொண்டு, விடை பெறுகிறார் உங்கள் சாரதா.**

சுற்றி பத்து பேர் இருக்கும் போது, உடல் பிரச்னையால் என் முகத்தில் மாற்றம் தெரிந்தால், கலங்காமல் என்னை நாசுக்காக அங்கிருந்து கிளப்பிக் கொண்டு போய், ''அம்மா, ஆர் யூ ஓகே?'' என்று கேட்டு தெம்பூட்டுவார்கள். நான் அவர்கள் மேல் வைத்திருக்கும் பாசத்தைப் புரிந்து கொண்டு, அவர்களும் என் மேல் பாசத்தைப் பொழிகிறார்கள்.

✱ பெயர் வெளியிட விரும்பாத வாசகியின் கேள்வி:

உடல் பரிசோதனை முடிவுகளை டாக்டரிடம் காட்டும் முன்பே இன்டர்நெட்டில் பார்த்து வியாதிகளைக் கற்பனை செய்து கொண்டு தன்னையும் துன்புறுத்திக் கொண்டு மற்றவர்களையும் கலங்க அடிப்பவர்களுக்கு உங்கள் அறிவுரை என்ன?

வேறு வழியேயில்லை, இதைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியம் என்றால் ஒழிய இணைய தளங்களைப் பார்ப்பதைத் தவிர்ப்பது நல்லது. ஏனென்றால் ஒன்று, நீங்கள் பார்ப்பது ஆதாரப் பூர்வமான தளமா என்பது தெரியாது. இரண்டாவது, உங்களுக்கு உண்மையிலேயே வந்திருப்பது என்னவென்று தெரியாத நிலையில் தேவையில்லாத செய்தியை உள்வாங்கிக் கொண்டு குழம்புவானேன். டெஸ்டைக் கொடுத்து விட்டு ரிப்போர்டுக்காக காத்திருக்கும் ஒரு வாரத்தில் இன்டர்நெட்டைப் பார்த்து, பயந்து, நிம்மதியை இழக்க, இறுதியில் உங்களுக்கு ஒன்றுமே இல்லை என்று டாக்டர் சொல்வார். இடைப்பட்ட அந்த ஒரு வார மன உளைச்சல் அவசியமா? போன அந்த ஒரு வார வாழ்க்கை திரும்பக் கிடைக்குமா? அந்த நேரத்தில் அதைப் பற்றியே யோசிக்காமல் இருப்பது தான் சிறந்தது.

என் நோயான ஸ்லீயைப் பொறுத்த வரையில், மருத்துவர்களுக்கே இதன் சிகிச்சை சவாலாக இருக்கும் நிலையில், உலகெங்கிலும் நடக்கும் ஆராய்ச்சி பற்றியும், மற்ற நோயாளிகளின் வாழ்க்கை முறை பற்றியும் தெரிந்து கொள்ள எனக்கு இணையதளம் பெரிய பலமாக இருக்கிறது என்பதும் உண்மை.

**(அடுத்த இதழில் நிறைவுறும்)**

# இருதய நோய்க்கு

சென்னையில் வசிக்கும் சிசிலியா மேரியாகிய எனக்கு 50 வயதாகிறது. கடந்த 10 வருடங்களாக இரத்த அழுத்தம் மற்றும் சர்க்கரை நோய் உள்ளதால் எனது இருதயத்தில் உள்ள இரத்த நாளங்கள் பாதிக்கப்பட்டு விட்டதாக மருத்துவர்கள் கூறினர். இதற்காக பல வருடங்களாக பல மருத்துவர்களிடம் சிகிச்சை எடுத்ததுமில்லாமல், சென்னையில் பிரபல மருத்துவமனையில் "ஆஞ்ஜியோகிராம்" டெஸ்ட் செய்தார்கள். அதில் இருதயத்தில் மூன்று இரத்தக் குழாய்களிலும் 80%, 90% மற்றும் 100% அடைப்பு உள்ளதாகவும் உடனடியாக பைபாஸ் அறுவை சிகிச்சை செய்தால்தான் உயிரோடு இருப்பேன் என்றும் என்னிடமும், என் குடும்பத்தினரிடமும் கூறிவிட்டனர். இதனால் நாங்கள் மிகுந்த மன வேதனைக்கும், குழப்பத்திற்கும், பயத்திற்கும் ஆளாகிவிட்டோம். ஏனென்றால் சில மாதங்களுக்கு முன்புதான் என் கணவருக்கு (Mr. Ambrose P.F. Officer, Chennai) இதே மருத்துவமனையில் ஆஞ்ஜியோகிராம் மற்றும் அறுவை சிகிச்சை செய்து இன்றளவும் பாதிக்கப்பட்ட நிலையில் உள்ளார்.



அந்த நிலை எனக்கும் வரக்கூடாது என்று எண்ணி, மாற்று சிகிச்சைக்கான வழிமுறைகளை தேடிய போதுதான் ஜெயா டிவியில் ஆக்ஸிமெட் மருத்துவமனையின் அறுவை சிகிச்சை இல்லாத மாற்று சிகிச்சை முறை பற்றி டாக்டர். அயாஸ் அக்பர் (இயக்குநர்) எடுத்துரைப்பதை பார்த்தோம்.

மேலும் அறுவைசிகிச்சையில் குணமடையாதவர்களும், அறுவை சிகிச்சைக்கு பயப்படுவர்களும். ஆக்ஸிமெட்டில் சிகிச்சை எடுத்து பயன்பெற்றதை தகவல்கள் மூலம் அறிந்து, நம்பிக்கையோடு டாக்டர். அயாஸ் அக்பர் அவர்களை அணுகினோம். "நீங்கள் எதற்கும் பயப்பட தேவையில்லை. அறுவை சிகிச்சை இல்லாமல், ரத்தம் சிந்தாமல், வலியில்லாத சிகிச்சை முறையில் உங்கள் மனைவியின் உயிரை நான் காப்பாற்றித் தருகிறேன்" என்று டாக்டர் ஆணித்தரமாக கூறினார். அதன்படி எனக்கு 40 நாட்கள் சிகிச்சை அளிக்கப்பட்டது.

சிகிச்சையின் போது டாக்டரின் கனிவான பேச்சும், அணுகுமுறைகளும், மற்ற மருத்துவர்களின்

# இதமான சிகிச்சை

வனிப்பும், ஒவ்வொரு நர்சுகளின்
ணிவிடைகளும் மற்றும்
தவியாளர்களின் ஒத்துழைப்பும் நான்
நாயாளி என்ற எண்ணத்தை அறவே
றக்கச்செய்தது.

கிச்சையின் முடிவில் எனது இரத்தக்
ழாயில் இருந்த அடைப்புகள்
ற்றிலும் நீங்கிய நிலையில்,
ரிபூரணசுகம் பெற்றதை
ணர்ந்தேன்.

மலும் நான்
ந்த நோய்
ருவதற்கு
ன்பு எவ்வளவு
ரோக்கியமாக
ருந்தேனோ
தே போன்று
புசுறுப்போடு
ருப்பதாக
ணர்கிறேன்.



பபோது நடந்தால் மூச்சுவிட சிரமம்
ல்லை, இடது தோள்பட்டை வலி,
ர்பு வலி, கை கால் சோர்வு
ல்லாமல் சந்தோஷத்துடன்
நக்கிறேன்.

ன் தனியாகவே எனது
னிகளுடன், குடும்பத்தினரின்
வைகளையும் செய்தவற்கு
ரணம் டாக்டர் அயாஸ் அக்பர்
பர்களின் சிறப்பான சிகிச்சைதான்
பதில் ஐயமில்லை. ஆக்ஸிமெட்
மருத்துவமனையில் மிகக் குறைந்த
கட்டணத்திலேயே சிறந்த
சிகிச்சையை புறநோயாளியாக வைத்து
அளிப்பது பாராட்டுதற்குரியது.

மேலும் திருமதி. சோனியாகாந்தி
அவர்களால் பாராட்டப்பட்ட டாக்டர்
அயாஸ் அக்பரிடம் சிகிச்சை
பெற்றதை நினைத்து பெருமை
படுகிறேன்.

என்னைப்
போன்று
இருதய
நோயால்
அவதிப்படு
பவர்கள் இந்த
சிறந்த
சிகிச்சையை
பெற்று
குணமடைய
வேண்டும்
என்ற எண்ணத்தில் என்னுடைய
தொலைபேசி எண்ணைக்
கொடுத்துள்ளேன்.

**9843730111**

**மேலும் விவரங்களுக்கு**

# குக்கரி க்வீன்

## கான்செப்ட் சமையல் போட்டி

**தேவையான பொருள்கள்:**

பாசுமதி அரிசி - 1 கப்
குடை மிளகாய், வெங்காயம் - தலா 1
பச்சை மிளகாய் - 4
அன்னாசிப் பழம் - 1 கப்
அன்னாசிப் பழச்சாறு - ½ கப்
உலர் திராட்சை - 1 டேபிள் ஸ்பூன்
முந்திரிப் பருப்பு - 10 (அ) 12
சீரகம் - ½ டீஸ்பூன்
நெய் - ½ கப்
உப்பு - தேவையான அளவு
டூட்டி ஃப்ரூட்டி - 1 டீஸ்பூன்
பனீர் துருவல் - 1 டேபிள் ஸ்பூன்



பைனாப்பிள் வித் கேப்சிகம் புலாவ்

**செய்முறை:**

அரிசியை சுத்தப்படுத்தி தண்ணீர் விட்டு வேக வைத்து வடித்தெடுக்கவும். அதை நெய் சேர்த்துப் பிசறி உதிரியாகப் பரத்தி ஆற விடவும்.

வாணலியில் நெய் விட்டு அதில் முந்திரி, உலர்ந்த திராட்சையை வறுத்து எடுக்கவும். பிறகு சீரகம், பச்சை மிளகாய், நறுக்கிய வெங்காயம், நறுக்கிய குடை மிளகாய் ஆகியவற்றை போட்டு நன்கு வதக்கவும்.

அதனுடன் அன்னாசித் துண்டுகளை இலேசாக வதக்கி, உப்பு சேர்த்து அன்னாசிப் பழச்சாற்றையும் ஊற்றி நன்கு கொதிக்க விடவும்.

பரத்தி வைத்த சாதத்தில் இக்கலவையைப் பிசறவும். புலாவ் மீது பனீர் துருவலைத் தூவி, டூட்டி ஃப்ரூட்டியை அங்கங்கே பதிக்கவும்.

தக்காளி சாஸ் மற்றும் ஜெல்லியுடன் லஞ்ச் பேக் செய்யவும்.

- ம. காயத்ரி
அன்னபூரணி,
ஈரோடு

குட்டீஸ் லஞ்ச் பாக்ஸ் ரெஸிபி

# ரூ. 300/- பரிசு பெறும் ரெஸிபிகள்!

தேவையான பொருள்கள்:

இட்லி - 4
உருளைக் கிழங்கு - 1
மைதா - 2 டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு
எண்ணெய் - பொரிப்பதற்கு
ப்ரெட் தூள் - 1 கப்

**ஃபில்லிங் செய்ய...**

பனீர் துருவியது - 4 டேபிள் ஸ்பூன்
துருவிய சீஸ், துருவிய காரட், துருவிய குடைமிளகாய் - தலா 2 டேபிள் ஸ்பூன்
வெங்காயம் - 1
மிளகாய்த் தூள், கொத்தமல்லி, சாட் மசாலா - தேவையான அளவு.

செய்முறை:

இட்லியை உதிர்த்துக் கொள்ளவும். இத்துடன் வேக வைத்த உருளைக் கிழங்கு, மைதா, உப்பு சேர்த்து நன்கு பிசைந்து உருண்டை செய்து வைத்துக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு பொடியாக நறுக்கிய வெங்காயம், குடைமிளகாய், காரட் துருவல் போட்டு இலேசாக வதக்கவும். தேவையான உப்பு, மிளகாய்த் தூள், சேர்த்து வதக்கி, பனீர், சீஸ், சாட் மசாலா, கொத்தமல்லி தூவி ஆற விடவும்.

இட்லி உருண்டையை கிண்ணம் போல் செய்து பனீர், சீஸ் கலவையை உள்ளே வைத்து, உருண்டை பிடிக்கவும். இதை ப்ரெட் தூளில் புரட்டி பொன்னிறமாக பொரித்து எடுக்கவும். டிபன் பாக்ஸில் வைக்கும்போது இரண்டாக


இட்லி குளோப்

வெட்டி வைத்தால் உள்ளே கலர்புல்லாக இருக்கும். சத்தான க்ளோப் இது.

குழந்தைகளுக்குப் பிடிக்கும் வகையில் பீட்ரூட், முளை கட்டிய பயறு (மசித்து) பொடியாக நறுக்கிய கீரை இவற்றைச் சேர்த்தும் வைக்கலாம்.

- பத்மா கலைமணி,
பாண்டிச்சேரி



குக்கரி க்வீன் போட்டிக்கு வந்து குவிந்த சமையல் குறிப்புகளை பொறுமையாக அலசி, சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்துத் தந்த **ஆதிரை வேணுகோபாலு**க்கு நன்றி!

## ஃப்ரூட் சேமியா கிச்சடி

தேவையான பொருள்கள்

சேமியா - 1 கப்
சிறு துண்டுகளாக நறுக்கிய அன்னாசிப் பழம் - ½ கப்
கறுப்பு திராட்சை - 6
சிறு துண்டுகளாக நறுக்கிய ஆப்பிள் - ¼ கப்
சிறு துண்டுகளாக நறுக்கிய பப்பாளி - ½ கப்
முந்திரிப் பருப்பு - 10
நெய் - 2 டீஸ்பூன்
பச்சை மிளகாய் - 2
இஞ்சி - ஒரு சிறு துண்டு
கேசரிப் பவுடர் - 2 சிட்டிகை
கடுகு - ½ டீஸ்பூன்
எண்ணெய், உப்பு - தேவையான அளவு



**செய்முறை:**

வாணலியில் நெய் விட்டு சேமியாவை பொன் நிறமாக வறுத்துக் கொள்ளவும். பிறகு அதில் எண்ணெய் விட்டு கடுகு போட்டு வெடித்ததும், துருவிய இஞ்சி, நறுக்கிய பச்சை மிளகாய் போட்டு வதக்கி, முந்திரியை உடைத்துப் போட்டு சிவந்ததும் தேவையான அளவு தண்ணீர் விட்டு, கேசரிப் பவுடர், உப்பு சேர்க்கவும். தண்ணீர் நன்கு கொதிக்க ஆரம்பித்ததும் சேமியாவைப் போட்டுக் கிளறவும். சேமியா வெந்து கெட்டியானதும் பழ வகைகளைப் போட்டுக் கலந்து, உடனே இறக்கி விடவும்.

ஒரு கிண்ணத்தில் நெய் தடவி, இந்த ஃப்ரூட் சேமியா கிச்சடியை அதனுள் வைத்து, ஒரு கரண்டியால் சமமாகப் பரப்பி, ஒரு தட்டில் கவிழ்த்துவிட்டு, கிண்ணத்தை எடுத்து விடவும்.

குட்டீஸ் விரும்பும் சுவையோடு ஃப்ரூட் சேமியா கிச்சடி தயார். அவர்கள் லஞ்ச் பாக்ஸுக்கு ஒரு சத்தான உணவு. இதற்கு தொட்டுக் கொள்ள எதுவும் வேண்டாம். சீஸனில் கிடைக்கும் மாம்பழத்தையும் இதனுடன் சேர்க்கலாம்.

**- சந்திரா ராஜசேகரன், புதுச்சேரி**

## த்ரீ இன் ஒன் குட்டீஸ் ரெஸிபி



**தேவையான பொருள்கள்:**

சர்க்கரை இல்லாத பிளெயின் கோவா - 100 கிராம், முந்திரிப் பருப்பு - 20, பாதாம் பருப்பு - 20, காய்ந்த திராட்சை - 10, கொப்பரைத் துருவல் - ஒரு கப், கோதுமை மாவு, தண்ணீர், உப்பு, சர்க்கரைத் தூள், எண்ணெய் - தேவையான அளவு.

**பூரணம் தயாரிக்கும் முறை:** கோவா, பொடியாக நறுக்கிய முந்திரி, பாதாம், காய்ந்த திராட்சை, கொப்பரைத்துருவல், சர்க்கரைத் தூள் எல்லாவற்றையும் ஒரு

பாத்திரத்தில் போட்டு கலந்துவிட்டால் பூரணம் ரெடி.

**தயாரிக்கும் முறை (முதல்):** கோதுமை மாவில் உப்பு போட்டு, தண்ணீர் விட்டு சப்பாத்தி மாவு பதத்துக்குப் பிசைந்து கொள்ளவும். சிறிய சப்பாத்திகளாக இட்டு, அதனுள் பூரணத்தை வைத்து மூடி மீண்டும் சப்பாத்தி இட்டு, கல்லில் நெய் விட்டு, சுட்டு எடுக்கவும்.

**இரண்டு:** சிறிய பூரிகளாகத் தேய்த்து, அதனுள் பூரணத்தை வைத்து, பூரிகளாக இட்டு பொரித்தெடுத்து, மேலே சிறிது சர்க்கரைத் தூளை தூவி விடவும். குட்டீஸ்களுக்கு இந்தச் சப்பாத்தியோ, பூரியோ லஞ்ச் பாக்ஸில் வைத்துக் கொடுத்தால், பாக்ஸ் காலியாகத்தான் திரும்பும்.

பின்குறிப்பு: நேரம் கிடைக்கும் போது, ஃப்ரிஜ்ஜில் இந்தப் பூரணத்தை செய்து வைத்துக் கொண்டால், தேவையான போது மாவின் உள்ளே வைத்து சப்பாத்தியோ, பூரியோ செய்து விடலாம்.

**- விஜயா ராமகிருஷ்ணன்,**
**குஜராத்**

## த்ரீ லேயர் ஹெல்த்தி ப்ரெட்



**தேவையான பொருள்கள்:**

ப்ரெட் ஸ்லைஸ்கள் - 4
கொட்டையில்லா பேரீச்சை,
உலர் திராட்சை - 4 கப்
முந்திரி, பாதாம் - தலா 10
ஆப்பிள்,
வாழைப்பழம் - தலா பாதி அளவு
பழுப்புச் சர்க்கரை அல்லது பொடித்த வெல்லம், தேன் - 2 டீஸ்பூன்

**செய்முறை:**

பேரீச்சை, திராட்சையை ஒரு டீஸ்பூன் தேனுடன் மிக்ஸியில் மசித்துக் கொள்ளவும்.

பருப்புகளைத் துருவியோ அல்லது மிக்ஸியில் கரகரப்பாகப் பொடித்தோ வைக்கவும்.

ஆப்பிளைத் துருவி, வாழைப்பழம், பழுப்புச் சர்க்கரையுடன் நன்கு கையால் பிசைந்துக் கொள்ளவும்.

இப்போது ப்ரெட் ஸ்லைஸ் ஒன்றை எடுத்து, அதன்மீது பேரீச்சை கலவையைத் தடவும். அதன்மேல் இரண்டாவது ஸ்லைஸ் வைத்து ஒரு டீஸ்பூன் தேன் தடவி, பொடித்த பருப்புகளைத் தூவவும். மூன்றாவதாக ஒரு ஸ்லைஸ் ப்ரெட் வைத்து, அதில் ஆப்பிள் கலவையைப் பரத்தவும். மேலே ஒரு ஸ்லைஸ் ப்ரெட்டை வைத்து மூடவும்.

இப்போது நீளவாக்கிலோ அல்லது முக்கோணங்களாகவோ கட் பண்ணி, லஞ்ச் பாக்ஸில் வைக்கவும். குழந்தைகளின் வளர்ச்சிக்குத் தேவையான அனைத்துச் சத்துக்களும் இதில் இருப்பதால் மிகவும் நல்லது.

**- பூங்குழலி நித்யகுமார்,**
**சென்னை**

நம் நாட்டில் பல்வேறு விஷயங்களுக்காக ஏராளமான சட்டங்கள் இருக்கின்றன. காலத்துக்கேற்ப பல புதிய சட்டங்களும், பழைய சட்டங்களில் திருத்தங்களும் கொண்டுவரப்பட்டுள்ளன. அப்படி பொதுமக்களின் நலன் கருதி கொண்டு வரப்பட்ட சட்டங்களுள் ஒன்றுதான் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம். இந்தச் சட்டம் நுகர்வோர்களுக்குப் பாதுகாப்பு வழங்கவும், நஷ்டஈடு வழங்கவும் கொண்டு வரப்பட்டது. 'தி கன்ஸ்யூமர் புரொட்டக்‌ஷன் ஆக்ட் 1986' என அழைக்கப்படும் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் 1986ம் ஆண்டு டிசம்பரில் கொண்டுவரப்பட்டது.

### நுகர்வோர் என்பவர்...

பிராக்டிகலாகப் பார்த்தால் நாம் அனைவருமே நுகர்வோர்தான்! பணம் கொடுத்து ஒரு பொருளை வாங்குகிறோம்; அல்லது கட்டணம் செலுத்தி ஒ சேவையைப் பெறுகிறோம். அப்படி நாம் வாங்குகி பொருளிலோ, சேவையிலோ குறைபாடு இருக்குமானா நாம் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டத்தின்படி நுகர்வே நீதிமன்றத்தை அணுகலாம். நாம் வாங்கும் பொருளே சேவையோ, நம் சொந்த உபயோகத்துக்காக இருக் மானால், நாம் நுகர்வோர்தான் என்கிறது சட்டம். வணி நோக்கத்துக்காகவோ, மறு விற்பனைக்காகவோ வாங் கிறவர், நுகர்வோர் என்ற வரையறுக்குள் வர மாட்டா

### வழக்கு போட வேண்டுமா?

குற்றவியல் நீதிமன்றம், சிவில் நீதிமன்றம் ஆகியவற் லிருந்து நுகர்வோர் நீதிமன்றம் மாறுபட்டது. நுகர்வே

# நாம் அனைவருமே






**பாலா நடராஜன்**

# நுகர்வோர்தான்!

பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் வருகிற வழக்குகளை மட்டுமே நுகர்வோர் நீதிமன்றத்துக்குக் கொண்டு போக முடியும். இதற்காகவே ஒவ்வொரு மாநில அரசும் தங்கள் மாநிலங்களில் அனைத்து மாவட்டங் களில் மாவட்ட நுகர்வோர் குறைதீர் மன்றங்களை ஏற்படுத்தி உள்ளன. பொதுவாக பதவியில் இருக்கும் அல்லது ஓய்வு பெற்ற நீதிபதி ஒருவர் மாவட்ட நுகர்வோர் குறைதீர் மன்றத்தின் தலை வராகவும், இன்னும் இரு உறுப்பினர்களும் மாவட்ட மன்றத்தில் இருப்பார்கள். அதே போல பணியிலிருக்கும் அல்லது ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதியைத் தலைவ ராகக் கொண்டு மாநில அளவில் மாநில நுகர்வோர் ஆணையம் அமையும். இதன் அடுத்த கட்டம் தேசிய அளவிலான நுகர் வோர் ஆணையம் இதன் தலைவராக, பணியில் உள்ள அல்லது ஓய்வு பெற்ற உச்ச நீதிமன்ற நீதிபதி நியமிக்கப்படுவார். அவரைத் தவிர நான்கு உறுப்பினர்கள் இருப்பார்கள்.

### வழக்குக்கான பணம்...

மாவட்ட நுகர் வோர் நீதிமன்றத்தில் ஒரு வழக்கு போட வேண்டும் என்றால் அதிக பட்சமாக ஐந்நூறு ரூபாய் கட்டினால் போதும்; மாநில, தேசிய கன்ஸ்யூமர் கோர்ட்கள் என்றாலும் கட்டணம் மிகவும் குறைவுதான். மாநில கன்ஸ்யூமர் கோர்ட் என்றால் நான்காயிரம் ரூபாய் வரை கட்ட வேண்டும். தேசிய ஆணையம் என்றால் ஐந்தாயிரம் வரை கட்டணமிருக்கும்.

### எங்கே வழக்கு போட வேண்டும்?

இருபது லட்சம் மதிப்பு வரையிலான மதிப்பு கொண்ட பொருள்கள் அல்லது சேவை அல்லது கேட்கும் நஷ்ட ஈடு இருக்குமானால், மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்தில் வழக்கு தொடரலாம். இருபது லட்சம் ரூபாய் மதிப்புக்கு மேல் ஒரு கோடி ரூபாய் வரை என்றால் மாநில நுகர்வோர் நீதிமன்றத்துக்குப் போக வேண்டும். அதற்கு மேல் என்றால் தேசிய நுகர்வோர் ஆணையத்துக்குப் போக வேண்டியதுதான்.

எங்கே வழக்கு போட வேண்டும் என்றும் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எதிர் மனு தாரரின் வணிக அலுவலகம் எந்த மாவட்டத்தின் எல்லைக்குள் உள்ளதோ அல்லது வழக்கின் ஆதாரம் எந்த மாவட்டத்தில் துவங்கியதோ அந்த மாவட்டத்தின் நுகர்வோர் நீதிமன்றத்தில் வழக்கு போட வேண்டும். மனு, ஏற்றுக் கொள்ளப்பட்ட இருபத்தொரு நாட் களுக்குள் புகார் மனு எதிர் மனுதாரருக்கு அனுப்பி வைக்கப் படும். எதிர்மனுதாரர், முப்பது நாட்களுக்குள் தன் தரப்பு பதிலைத் தாக்கல் செய்ய வேண்டும் என்று நீதிமன்றம் உத்தரவிடும். அதன்படி நீதிபதி வழக்கினை உரிய முறையில் விசாரித்து, தீர்ப்பு வழங்குவார்.

நுகர்வோருக்கு நஷ்ட ஈடு வழங்க வேண்டும்; வழக்கு செலவுக்கான தொகையைக் கொடுக்க வேண்டும்; அவருக்கு ஏற்பட்ட குறையைத் தீர்த்து வைக்க வேண்டும் என்று எப்படி வேண்டுமானாலும் தீர்ப்பு அமையலாம். சிலசமயங்களில் சில புகார்கள், நுகர்வோர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் வராது;




## நாணயமற்ற வணிகப் பழக்கம்...

'பத்திரிகைகளிலும், வானொலி, டீ.வி.யிலும் ஏராளமான விளம்பரங்கள் வருகின்றன. மக்கள் அவற்றைப் பார்த்து, கவர்ந்து இழுக்கப்பட்டு அவற்றில் சொல்லப்படும் விஷயத்தை அப்படியே நம்பி, அந்தப் பொருளை வாங்கி விடுகிறார்கள். மக்களின் இந்த மனோபாவத்தை சில வியாபாரிகள் தவறாகப் பயன்படுத்த முற்படுவதுண்டு. பொய்யான வாக்குறுதிகள் தந்து நுகர்வோரை ஏமாற்றிவிடுகிறார்கள். இத்தகைய போலியான விளம்பர யுக்திகள்தான் 'நாணயமற்ற வணிக பழக்கம்'. இத்தகைய ஏமாற்றுப் பேர்வழிகளை கன்ஸ்யூமர் பாதுகாப்பு சட்டத்தின் மூலம் தண்டிக்க முடியும்.

'எதிர்மனுதாரர் நுகர்வோர் சட்ட வரையறைக்கு உட்பட்டவர் அல்ல; புகாரில் உண்மை இல்லை' என்பன போன்ற காரணங்களுக்காக புகாரே தள்ளுபடியும் செய்யப்படலாம்.

### மேல் முறையீடு...

மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்தின் தீர்ப்பால் பாதிக்கப்பட்டவர் அத் தீர்ப்பை, எதிர்த்து அதே மாநில ஆணையத்தில் தீர்ப்பு வழங்கப்பட்ட முப்பது நாட்களுக்குள் மேல்முறையீடு செய்யலாம். அவசியமானால், ஒரு மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்தில் நடக்கும் வழக்கை வேறு மாவட்டத்துக்கு மாற்றி விசாரிக்க வேண்டும் என்று உத்தரவிடும் அதிகாரம் மாநில ஆணையத்துக்கு உண்டு. மாநில நுகர்வோர் நீதிமன்றத் தீர்ப்பையும் எதிர்த்து தேசிய ஆணையத்தில் மேல்முறையீடு செய்யலாம்.

தகுந்த காரணங்கள் இருந்தால் ஒரு மாநில நுகர்வோர் நீதிமன்றத்தில் நடக்கும் வழக்கை, வேறு மாநிலத்துக்கு மாற்றி உத்தரவிடவும், தேசிய நுகர்வோர் ஆணையத்துக்கு அதிகாரமுண்டு.

தேசிய நுகர்வோர் ஆணையத்தி[ன்] தீர்ப்பை எதிர்த்து உச்சநீதிமன்றத்தி[ல்] அப்பீல் செய்யவும் சட்டம் வழி செய்கிறது

### கால அவகாசம்...

குறை நிகழ்ந்துள்ளதாக அறிந்த நா[ளி]லிருந்து இரண்டு வருடங்களுக் குள்[ள] மாவட்ட, மாநில அல்லது தேசிய அள[வி]லான நுகர்வோர் நீதிமன்றத்தில் வழக்[கு] போட வேண்டும். இரண்டாண்டுகளுக்கு[ப்] பிறகு வழக்குப் போட்டால் காலதாமத[த்]துக்கு ஏதாவது ஏற்கத் தகுந்த காரண[ம்] இருந்தால் தாமதத்தை மன்னித்து, வழக்கை ஏற்றுக் கொள்ளும் அதிகாரமும் நீதிமன்ற[த்]துக்கு உண்டு.

### வழக்கறிஞரா? நுகர்வோரா

நுகர்வோர் நீதிமன்றங்களில் பாதிக்க[ப்]பட்ட நபரே நேரில் வந்து வாதாடலா[ம்] அல்லது நுகர்வோர் பாதுகாப்பு அமைப்[பு]கள் மூலமாக வழக்கறிஞர் வைத்து நடத்தலாம். சமீபகாலமாக மனுதாரர் 'ப[வர்] ஆஃப் அட்டர்னி' மூலம் ஒரு ஏஜெண்டை நியமித்து, அவர் மூலமாகவும் வழக்[கு]களை நடத்துகிறார்கள்.

**எழுத்து வடிவம்: எஸ்.சந்திரமௌ[லி]**



நீங்கள் வீட்டிற்கு வெளியே செல்லும்
ஒவ்வொரு தடவையும் உங்கள்
சருமம் தாக்கப்படுகிறது.
உங்கள் சருமத்தை ஸின்த்தால்
உபயோகித்து காத்திடுவீர்.
நீங்கள் வீட்டிற்கு வெளியே செல்லும்போதெல்லாம் உங்கள் சருமம் தொடர்ந்து சூடு, தூசு மற்றும் புகையினால் தாக்கப்படுகிறது. அது முகப்பருக்கள், ராஷ்கள், மருக்கள் மற்றும் இதர சரும பிரச்சினைகளை உண்டாக்குகிறது. 92%*-க்கு மேல் டாக்டர்கள் சரும பாதுகாப்பிற்கு ஸின்த்தாலை சிபாரிசு செய்கிறார்கள். ஸின்த்தால் மூலம் உங்களுடைய அன்றாட சரும பாதுகாப்பைப் பெறவும்.
ஸின்த்தால் - டாக்டர்களினால் சிபாரிசு செய்யப்படும் சரும பாதுகாப்பு.
Godrej
CINTHOL
CINTHOL

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!



தரமான தின்பண்டங்கள் கிடைக்கும் கடைகளில் உடைந்த முறுக்கு, தட்டை போன்றவை பாதி விலையில் கிடைக்கும். அதை வாங்கினால் கணிசமாக இருப்பதுடன் செலவும் குறையுமே!

- சீனு சந்திரா, சென்னை - 4

எண்ணெய்ப் பசையுள்ள சருமம் உள்ளவர்கள், பழுத்த வாழைப்பழத்தில் சில துளிகள் எலுமிச்சைச் சாறைக் கலந்து நன்றாக மசியுங்கள். இதை முகத்தில் பேக் போட்டு பதினைந்து நிமிடங்கள் கழித்து முகம் கழுவி வர, முகம் 'பளிச்' என மின்னும்.

-கே.பி.ஜெயந்தி, மதுரை

பாகல், வெண்டை, குடை மிளகாய் இவற்றில் ஊறுகாய் மசாலாவை வைத்து ஸ்டஃப் செய்து, புதுமையான ருசியுள்ள காய் செய்யலாம்.

- அனுஜெய், கோவை

முன்பெல்லாம் ரேஷன் கடைகள் ஞாயிற்றுக்கிழமை இயங்கி வந்தது. இது வேலைக்குச் செல்பவர்களுக்கு வசதியாக இருந்தது. மீண்டும் அதேமுறை நடைமுறைக்கு வந்தால் நன்றாக இருக்கும். சம்பந்தப்பட்டவர்கள் கவனிப்பார்களா?

- இ. சந்திரா இளங்கோ, சென்னை

பித்த வெடிப்பு உள்ளவர்கள்... இரவில் படுக்கப் போகும்போது போரிக் பவுடரைத் தேங்காய் எண்ணெயில் குழைத்து, வெடிப்புப் பகுதியில் பூசுங்கள். காலையில் குளிக்கும்போது அந்த இடங்களை நன்றாகத் தேய்த்துக் குளியுங்கள். வெடிப்பு நீங்கும். மாமரத்தில் இருக்கும் மாம்பிசினை எடுத்து வெடிப்புகளில் தடவினாலும் குணமாகும்.

- ஆர். ஸ்ரீதேவி, குண்டக்கல்

தட்டைப் பயரை ஊற வைத்து, கரகரப்பாக அரைத்து வெங்காயம், உப்பு சேர்க்கவும். இந்த விழுதை உருட்டி வெயிலில் காய வைத்து எடுத்தால், சூப்பரான கறிவடாம் ரெடி!

- தாரா, கோவை - 18

துளசிச் செடியின் அடிபாகத்தைச் சுற்றி, குங்குமம், மஞ்சள் தடவினால் எறும்புகள் வராது.

- குமுதினி வேணுகோபால், கோவை - 2

# பூஞ்சாரல் 2009-2010

## ஆட்டம்... பாட்டம்... கொண்டாட்டம்!



சிறப்பு விருந்தினர்

M. கருணாநிதி

**மண்டலம் : சேலம்**

இடம் : ஸ்ரீவிவேகானந்தா பெண்கள் கல்லூரி, திருச்செங்கோடு

தேதி : 15.9.2009

- திருச்செங்கோடு ● விவேகானந்தா தகவல் மற்றும் நிர்வாகக் கல்வி மையம் - திருச்செங்கோடு ● விவேகானந்தா மகளிர் தொழில் நுட்பக் கல்லூரி - திருச்செங்கோடு ● விவேகானந்தா பிஸியோதெரபி கல்லூரி - திருச்செங்கோடு

**ஃபேஷன்:**

*வின்னர்:* **விவேகானந்தா தகவல் மற்றும் நிர்வாகக் கல்வி மையம் - திருச்செங்கோடு**

*ரன்னர்:* **விவேகானந்தா மகளிர் கல்லூரி - திருச்செங்கோடு**

**ஃப்யூஷன்:**

*வின்னர்:* **தியாகராஜர் தொழில் நுட்பக் கல்லூரி - சேலம்**

*ரன்னர்:* **ஜெய்ராம் கல்லூரி - சேலம்**

**வாலிபால்:**

*வின்னர்:* **ஏ.வி.எஸ் கலை மற்றும் அறிவியல் கல்லூரி - சேலம்**

*ரன்னர்:* **தியாகராஜர் தொழில்நுட்பக் கல்லூரி - சேலம்**

**ஆல் ரவுண்டர்:**

*(இறுதிச் சுற்றுப் போட்டிக்குத் தேர்வாகிய கல்லூரிகள்)*

**தியாகராஜர் தொழில்நுட்பக் கல்லூரி - சேலம்**

**ஏ.வி.எஸ் கலை மற்றும் அறிவியல் கல்லூரி - சேலம்**




ஃப்யூஷன்

அன்றும் இன்றும் ரஜினி






# ரோஜா மலரே

சந்திப்பு : எஸ்.சந்திரமௌலி

சினிமாவில் எனக்கு சச்சு என்று பெயர் இருந்தாலும், என் ஒரிஜினல் பெயர் சரஸ்வதி. சினிமா உலகில் யாருக்குமே என் ஒரிஜினல் பெயர் தெரியாது; அப்படியே தெரிந்தவர்களாக இருந்தாலும் என்னை யாரும் அந்தப் பெயர் சொல்லி கூப்பிடமாட்டார்கள். ஆனால் நாகேஷ் மட்டும் என் ஒரிஜினல் பெயர், சினிமா பெயர் இரண்டையும் சேர்த்து, 'சச்சு என்கிற சரஸ்வதியே!' என்று நகைச்சுவையாகக் கூப்பிடுவார்.

நாகேஷுக்கு என் பாட்டியை ரொம்பவும் பிடிக்கும். ஒரு நாள்



படம்: ஸ்ரீஹரி

# ராஜகுமாரி!



என்னோடு ஷூட்டிங்குக்கு வந்திருந்த பாட்டி, 'பாவம்! பன் சாப்பிட்டுதோ இல்லையோ, பால் குடிச்சதோ இல்லையோ, குளிச்சுதோ குளிக்கலையோ தெரியலையே!' என்று தனக்குத் தானே புலம்பிக்கொண்டிருந்தார். பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த நாகேஷ் காதில் விழுந்துவிட்டது. உடனே அவர், ''யார் பாட்டி? சச்சு பன் சாப்பிட்டாளா? பால் குடிச்சாளான்னா கவலைப்படறீங்க? சச்சு, இன்னைக்கு குளிக்கலையா? பல்லாவது தேய்ச்சாளா? அதுவும் இல்லையா?'' என்று கலாய்க்க ஆரம்பிச்சுட்டார். பாட்டியும் அதை படு சீரியஸாக எடுத்துக்கொண்டு, ''இல்லைடாப்பா! நான் சொன்னது சச்சுவை இல்லை; எங்க வீட்டுல வளர்க்கிற நாய்க் குட்டியை'' என்று சொல்ல நாகேஷ், விழுந்து விழுந்து சிரித்தார்.

இந்த சம்பவம் வெறும் வாயை மென்றுகொண்டிருந்த நாகேஷுக்கு அவல் கிடைச்ச மாதிரியானது. யாரைப் பார்த்தாலும், 'சச்சுவோட பாட்டியை உங்களுக்குத் தெரியுமா?' என்று ஆரம்பிச்சு, அந்த நாய்க் குட்டி ஜோக்கை சொல்லத் தவறமாட்டார்.

'தேன்மழை' படத்தில் நாகேஷுக்கு ஜோடியாக மனோரமாவும், சோவுக்கு ஜோடியாக நானும் நடித்தோம். அப்போதுதான் சோ, சினிமாவில் நடிக்க ஆரம்பித்திருந்தார். படம் முடிகிறபோது இரண்டு ஜோடிகளுக்கும் கல்யாணம் நடப்பதாக வரும். அந்தக் கல்யாணக் காட்சியில் சோ, எனக்கு மாலை போடுவதுபோல நடிக்க ரொம்ப வெட்கப்பட்டு, அந்தக் காட்சியில் நடிக்க மறுத்தார். டைரக்டர் எப்படி அந்தக் காட்சியை எடுப்பது என்று யோசித்துக் கொண்டிருந்த நேரத்தில் நாகேஷுக்கு சட்டென்று ஒரு ஐடியா தோன்றியது. அதை அவர் டைரக்டரிடம் சொல்ல அவர் உடனே, ''வெரி குட் ஐடியா! அப்படியே எடுத்துவிடலாம்'' என்று சொல்லி, எடுத்துவிட்டார்.



நாகேஷ் கொடுத்த ஐடியா என்ன தெரியுமா? மாலை மாற்றச் சொன்னவுடன், சோவும், நாகேஷும் வெட்கப்பட்டு நெளிவார்கள். தலையைத் திருப்பி வேறு பக்கம் பார்த்துக்கொண்டே கைகளை மட்டும் நீட்டி, மாலையைப் போடுவார்கள். ஆனால், நாகேஷ் தன் கையில் இருந்த மாலையை சோவின் கழுத்தில் போட்டிருப் பார். அதே போல சோ வைத்திருந்த மாலை நாகேஷின் கழுத்தில் இருக்கும். இந்தக் காட்சிக்கு தியேட்டரில் பலத்த கைத்தட்டல் கிடைத்தது.

சிவாஜிகூட நடிப்பது என்றால் பல நடிகர், நடிகையருக்கும் சிம்ம சொப்பனம்தான். அவர் நடிக்கிற படத்தின் ஷூட்டிங் குக்குச் சென்றாலே ஏதோ சிங்கத்தின் குகைக்குள்ளே போவது போல ஒரு நடுக்கம் ஏற்படும். இத்தனைக் கும் நான் குழந்தை நட்சத்திரமாக அவ ருடன் சகஜமாகப் பழகியவள். அவரும் என் துடுக்குத்தனமான பேச்சை மிகவும் ரசிப்பார்.

'கலாட்டா கல்யாணம்' படத்தில் நடித்துக்கொண்டிருந்த சமயத்தில் ஒருநாள் நான் செட்டுக்குள்ளே நுழைந்த சமயம், அங்கே சிவாஜி உட்கார்ந்து கொண்டிருந் தார். அவரைப் பார்த்தவுடன் மரியாதை நிமித்தம் ''குட் மார்னிங்'' என்றேன். அவரோ என்னை ஒருமுறை முறைத்து விட்டு, ''குட் ஆஃப்டர் நூன்!'' என்றார் தனக்கே உரிய அழுத்தமான உச்சரிப்புடன். எனக்கு ஒரே அதிர்ச்சி! சட்டென்று என் கையில் கட்டி இருந்த கடியாரத்தைப் பார்த்தேன். சற்றே நிம்மதி அடைந்தேன். மணி 10.20 தான் ஆகியிருந்தது.

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''அண்ணே! நானும் உங்களைப் போலவே இன்றைக்கும் காலையில் சீக்கிரமாகவே ஷூட்டிங்கிற்கு வந்துட்டேன்'' என்றேன். ஆனால் அவர், ''வந்தவள் இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தே?'' என்று கேட்டார். ''வெளியில உட்கார்ந்துக்கிட்டு இருந்தேன்'' என்று சொன்னபோது அவர் முகத்திலே இலேசான கோபம்.

''நம்மளை மாதிரி ஆர்ட்டிஸ்ட்டுக்கெல் லாம் நடிப்பு தெய் வம் மாதிரி. ஸ்டு டியோவுக்கு வந்துட்டா, செட்டுக்கு வெளியில உட்கார்ந்துக் கிட்டு மத்தவங்க ளோட அரட்டை அடிக்கறது தப்பு. நாம இங்கே வர்றது நடிக்கத்தான்! சும்மா உட்கார்ந்து அரட்டை அடிக்க இல்லை'' என்றார்.


சிம்ம சொப்பனம்


பெரிய மனிதர்


சக்க என்கிற சரஸ்வதி

நான் நடு நடுங்கிப் போனேன். அதற்கப் புறம், நான் ஷூட்டிங்குக்குப் போனால், வெளியில உட்காராமல், செட்டுக்குள் ளேயே உட்கார்ந்து ஏதாவது படிச்சுக்கிட்டு இருப்பேன்; அல்லது, மற்ற ஆர்ட்டிஸ்ட் களின் நடிப்பை கவனித்துக் கொண்டிருப் பேன். அது சிவாஜியிடம் நான் கற்றுக் கொண்ட பாடம்.

'சுமதி என் சுந்தரி' படத்தின் ஷூட்டிங் தேக்கடியில் நடந்தது. அப்போது சிவாஜி-நாகேஷ் சம்பந்தப்பட்ட ஒரு சாதாரண காட்சி, எப்படி சூப்பரான ஒரு நகைச் சுவைக்காட்சியாகதிரையில் இடம்பெற்றது

என்பதை என்னால் மறக்கவே முடியாது. படத்தில் சிவாஜியும், நாகேஷும் குதிரையில் சவாரி செய்து கொண்டு போகிற காட்சி ஒன்று வரும். அதை எடுத்தபோது, சிவாஜியும், நாகேஷும் சவாரி செய்வதற்குத் தயாராக இரண்டு குதிரைகள் நின்றுகொண் டிருந்தன. இருவரும் அங்கே வந்தார்கள். சிவாஜி டக்கென்று குதிரையின் மேல் ஏறி அமர்ந்து கொண்டார். குதிரையைத் தட்டிவிட்டதும், அது வேகமாக நடக்க ஆரம்பித்தது. ஆனால் நாகேஷ் ஏறி உட்கார்ந்து, குதிரையைத் தட்டியதும் அது பின்னே நகர ஆரம்பித்தது.


* நகைச்சுவை நாயகன்

என்னுடன் அவுட்டோருக்கு வந்திருந்த என் அக்கா பெண் லதா, ''ஐயையே! நாகேஷ் குதிரை தோத்துப் போச்சு! ஷேம்.. ஷேம்!'' என்று கைத் தட்டி 'கலகல' என்று சிரித்து விட்டாள். ரிவர்சில் போன குதிரையையும், அதைப் பார்த்து குழந்தை லதா அடித்த காமெண்ட்டும் பார்த்து டைரக்டர் சி.வி.ராஜேந்திரன் உட்பட அங்கே இருந்தவர்கள் எல்லோரும் பலமாகச் சிரித்துவிட்டார்கள்.


* வெட்கப்பட்ட சோ

டைரக்டர் சி.வி. ராஜேந்திரன் சிரித்துவிட்டு சும்மா இருக்கவில்லை. அதை அப்படியே படத்திலும் ஒரு காட்சியாக்கி விட்டார். தியேட்டரில் இந்த நகைச்சுவைக் காட்சியை ரசிகர்கள் கைத் தட்டி ரசித்தார்கள்.

சிவாஜியின் எதிரே உட்கார பயந்தாலும், கலைவாணர் என்.எஸ்.கே. எவ்வளவு பெரிய மனிதர் என்பதை உணராமல், அவரை தவறாகத் திட்டிய சம்பவம் என் சிறு வயதில் நடந்தது. 'மதுரை வீரன்' படத்தின் நூறாவது நாள் விழாவுக்காக எம்.ஜி.ஆர்., டி.எஸ்.பாலையா, கலைவாணர், பத்மினி, குசலகுமாரி, ஈ.வி. சரோஜா, என் சகோதரி மாடி லட்சுமி என நாங்கள் எல்லோரும் குற்றாலத்துக்குப் போயிருந்தோம். கலைவாணருக்கு என் மீது தனி பிரியம். அவ்வப்போது என்னை செல்லமாகக் கிண்டல் செய்வார்.

எனக்குத் தண்ணீரைக் கண்டாலே பயம். அதனால் குற்றாலத்துக்குப் போனாலும், நான் அருவியில் குளிக்கவில்லை. ஐந்தருவி அருகில் ஆகாயத்திலிருந்து கொட்டுவது போல பெருத்த சத்தத்துடன் விழும் தண்ணீரையும், அதில் ஆனந்தமாகக் குளிப்பவர்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டே மங்குஸ்தான் பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். எனக்குப் பின் பக்கமாக வந்த கலைவாணர், என்னை அப்படியே அலாக்காகத் தூக்கி அருவிக்குள்ளே போட்டுவிட்டார். நான்பயந்துஅலறினேன். நாலைந்து தடவை தண்ணீரைக் குடித்து விட்டேன். நான் அருவியிலேசிக்கிக் கொண்டுவிட்ட பயத்தில், என்.எஸ்.கே. வைப் பார்த்து, ''அடேய்! சண்டாளா! படுபாவி! நீ உருப்படுவியா?'' என்று திட்டிவிட்டேன்.

நான் அலறியதைக் கேட்டுவிட்டு அங்கே ஓடிவந்த என் அக்கா, ''யாரைப் பார்த்து அப்படித் திட்டினே? அவர் எவ்ளோ பெரிய மனுஷர்? உன் மீதுள்ள பிரியத்தினால விளையாட்டுக்கு அப்படிச் செஞ்சா, அதுக்குப் போயி, இப்படியா திட்டறது?'' என்று என்னைக் கடிந்து கொண்டாள். அப்படி கலைவாணரைப் பார்த்துத் திட்டியது எவ்வளவு பெரிய தவறு என்பதை பின்னர் நான் உணர்ந்து கொண்டேன். ஆனால், அந்தப் பெரிய மனிதர், அதை எல்லாம் அந்த நிமிடமே மறந்து, என்னுடன் சகஜமாகப் பழகினார்.

**(அச்சு வெல்லம் இனிக்கும்)**

# என் செல்லமே!

ஆல்பம்



தாத்தா : ஜி. செல்வராஜ்
பாட்டி: ஆர். கஸ்தூரி
பேரன்: ஆர்.ஸ்ரீநிகேதன்



தாத்தா: ரா. நடராஜன்
பாட்டி: ந. வசந்தா
பேத்தி : ஸ்விதி



தாத்தா: எம். ஹாரூன் ரஷீத்
பாட்டி: நூர்னிசா பேகம்
பேத்தி : அலிஷா



தாத்தா: எம். சிவசங்கரன்
பாட்டி: டி.கே.விஜயலட்சுமி
பேத்தி : கே. சம்யுக்தா



தாத்தா: பி.லட்சுமணன்
பாட்டி: டி.எஸ்.நிர்மலா
பேத்திகள்: ஸன்ஸ் கிருதி, பிரகதி



தாத்தா : எஸ்.பக்தவச்சலம்
பாட்டி: ஜெம்பகலட்சுமி
பேரன்: ஜெ.ஸ்ரீஹரி




சென்னைக்கு மிக அருகிலேயே சிறுவாபுரி இருக்கிறது. சென்னை-கல்கத்தா நெடுஞ்சாலையிலிருந்து 33வது கிலோ மீட்டரில் இடது பக்கம் பிரியும் சாலையில் சிறுவாபுரி, பால சுப்பிரமண்ய ஸ்வாமியின் திருக்கோயில் தோரண வாயில் நமக்கு வழி காட்டுகிறது.

ஆலயம் நோக்கிச் செல்லும் பொழுது இருபுறமும் பசுமை படர்ந்த வயல்களும், வாழைத் தோட்டங்களும் குளுமையாகக் காட்சி தருகின்றன.

# அழகன்

இத்தலத்தில் பல கோயில்கள் இருக்கின்றன. அருணகிரிநாத பெருமான் தமது திருப்புகழில் 'ஆடகம் பயில் கோபுரம் மாமதில் ஆலயம் பல வீதியுமே நிறைவான தென் சிறுவாபுரி' என்று போற்றியுள்ளார். அதற்கேற்றாற்போல் இங்கு ஏராளமான கோயில்கள் உள்ளன.

நுழைவாயிலில் சப்த மாதர் கோயில், ஊரின் நடுவே அகஸ்தீஸ்வர் கோயில், மேற்கே பெருமாள் கோயில், இராமர் கோயில், பெருமாள் கோயிலுக்குப் பின்னால் விஷ்ணு துர்க்கை கோயில், விநாயகர் கோயில், ஜைனர் 22வது தீர்த்தங்கரர் பள்ளி, வடக்கு வாயு மூலையில் சிறு வாபுரி பால சுப்பிரமண்யர் ஆலயம் என்று பல கோயில்கள் உள்ளன.

# முருகனிடம்...

இவ்வூருக்குச் சின்னம் பேடு என்று ஒரு பெயரும் இருக்கிறது. அதற்கும் இராமாயணத்துக்கும் தொடர்புள்ளதாக வரலாறு.

அஸ்வமேத யாகம் செய்ய விரும்பினார் இராமபிரான். யாகப் பசுவாக குதிரையை அனுப்ப, அது வால்மீகி மகரிஷியின் ஆஸ்ரமத்துக்கு அருகில் வந்தது. அந்த ஆஸ்ரமம் சிறுவாபுரிக்கு அருகில் இருந்தது. அந்த ஆஸ்ரமத்தில் ஸ்ரீராமனின் குமாரர்கள் லவனும், குசனும் வளர்ந்து வந்தார்கள்.



அவர்கள் யாகக் குதிரையைக் கட்டிப் போட்டு விட்டார்கள். இச்செய்தியைக் கேள்விப்பட்ட ராமபிரான், குதிரையை மீட்டுவர லட்சுமணனை அனுப்பி வைத்தார். லட்சுமணனால் அக்குதிரையை அச்சிறுவர்களிடமிருந்து மீட்டுப் போக முடியவில்லை. குதிரையை மீட்க ராமபிரானே வந்தார்.

ராமனின் புதல்வர்களான லவனும், குசனும் சிவனை வழிபட்டு பின்பு இந்த இடத்தில் கோயில் கொண்டுள்ள பாலசுப்ரமண்யரை வழிபட்டு போர் புரிந்தனர்.

இதை அருணகிரி நாத பெருமான், 'சிறுவராகி இருவர் கரிபதாதி கொடுஞ் சொல் சிலை இராமன்வுடன் எதிர்த்து ஜெயமதான நகர்' என்று கூறுகிறார்.

சிறுவர் போர் புரிந்த இடமே 'சிறுவாபுரி' என்று பெயர் பெற்றது. இராமாயணத்தில் கூறப்பட்ட குசல புரியே இன்றைய 'சிறுவாபுரி' என்கிறார்கள். பேடு என்றால் அம்பு வைக்கும் கூடு; அதனால் சின்னம் பேடு என்ற பெயரும் நிலைத்துவிட்டது.

சிறுவாபுரி முருகனை தரிசிக்கப் போகலாமா?

முதலில் அழகான ஐந்து நிலை இராஜகோபுரம் நம்மை வரவேற்கிறது. 'ஐம்புலன்களையும், ஐம்பொறி களையும் அடக்கு' என்ற தத்துவத்தைக் கூறுவதுபோல் கம்பீரமாக அமைந்துள்ளது.

செல்லும் வழியில் அர்ச்சனை பொருள்கள் விற்கும் கடைகள், படங்கள் விற்கும் கடைகள், வாழைத்தண்டு, வாழைக்காய் விற்கும் கடைகள் என்று அனைத்தும் சுறுசுறுப்பாக இயங்குகின்றன. நாங்கள் ' சென்றது செவ்வாய்க்கிழமை என்பதால் ஜேஜே என்ற கூட்டம்... கார்கள் நிற்கத் தனியான இடம் என்று இருக்கிறது.

சென்னை, திருவள்ளூர், பொன்னேரி, ரெட்ஹில்ஸ் என்று பல இடங்களிலிருந்தும் நகரப் பேருந்துகள் கோயில் வாசல் வரையிலும் வருகின்றன.

பெரியபாளையம் கோயில் அருகில் இருப்பதால் அம்மாவைப் பார்க்க வரும் பக்தர்கள், பிள்ளையையும் பார்க்க வருகிறார்கள்.

உயரமான கொடி மரம். கொடி மரம் தாண்டி சதுரமான கூண்டில் 'மயிலுமாடி

லக்ஷ்மி ராஜரத்னம்

நீயுமாடி வர வேணும்' என்பது போல் மரகதப் பச்சை மயில் சிலா ரூபமாக கம்பீரத்துடன் காட்சியளிக்கிறது.

முருகப் பெருமானை முதுகில் சுமந்து ஆடி வரும் பெருமிதமான கர்வம் அதற்கு இருக்காதா என்ன? இத்தகைய மரகதப் பச்சை மயில் வாகனத்தை உலகில் வேறு எங்கும் காண முடியாது. அதனால்தானோ என்னவோ இதைப் பாதுகாப்பாக கம்பிக் கூண்டுக்குள் வைத்துள்ளார்கள்.

கூண்டுக்கு முன்னால் முருகனைப் பார்த்தபடி சாதாரண கல்லினாலான மயில் ஒன்றும் இருக்கிறது. மரகதப் பச்சை மயிலை ரசித்தபடி கோயிலை வலம் வரத் தொடங்குகிறோம்.

கோயிலின் தென்மேற்கு மூலையில் சூரியனார் ஒளி படும் வண்ணம் கிழக்கு நோக்கி மரகத கணபதி, காட்சி தருகிறார். ராஜ கணபதி என்று பெயர் கொண்ட இந்த மரகத விநாயகர், வேண்டுவன வெல்லாம் தருவேன் என்பது போல் அருள் பாலிக்கிறார்.



• மரகத விநாயகர்

அடுத்து ஆதிமூலவர் சன்னிதி. இவர் முன்னால் இருப்பது பாலசுப்ரமண்ய சுவாமி விக்கிரக மாகும். இவருக்கு சிறப்பான பூஜைகள் உண்டு.

சிறுவாபுரி முருகனை தரிசித்தால் புது வீடு கட்டும் பாக்கியம் கிடைக்கும் என்று பக்தர்கள் நடுவே பரவி வருகிறது. இதன் காரணமாகத்தான் பின் சுவரில் சின்னச் சின்னக் கற்களை வீடுகள் போல் அடுக்கி வைக்கிறார்கள். சில சிறுவர்கள் சின்னக் கற்களை வைத்து வியாபாரம் செய்கிறார் கள்.

அருணகிரி நாதரின் பாடல் பெற்ற தலம் சிறுவாபுரி. இத்தலத்தைப் போற்றி நான்கு திருப்புகழ்கள் பாடியுள்ளார். இதில் அர்ச்சனைத் திருப்புகழ் மிகவும் விசேஷம். இந்த நான்கு திருப்புகழ்களும் சுவரில் பதிக்கப்பட்டுள்ளன.

'அண்டர்பதி குடியேற' என்ற திருப்புகழ் வேண்டுவன தரும் திருப்புகழ். சொந்த வீடு வேண்டும் என்று விரும்பும் பக்தர்கள் இதைப் பாடுகிறார்கள். வீடு, தொழில், திருமணம், செல்வம், மோட்சம் என்று அனைத்தையும் தரும் திருப்புகழ்.

'சீதள வாரிஜ பாதா நமோ நம' என்பது அர்ச்சனைத் திருப்புகழ். அருணகிரிநாத பெருமான், ஆறு தலங்களுக்கு அர்ச்சனைத் திருப்புகழ் பாடி யுள்ளார். அதில் சிறுவாபுரி தலமும் ஒன்று. அடுத்து தீயவை நீக்கும் திருப்புகழாக 'வேல் இரண் டெனும்' என்ற திருப்புகழைப் பாடியுள்ளார்.

'பிறவியான சடமிரங்கி' என்ற வரம் தரும் திருப்புகழ் நான்காவது.

கார்த்திகை தினத்தன்று ஒவ்வொரு மாதமும் நகரத்தார் விடுதியில் அன்னதானம் சிறப்பாக நடப்பதாக பிரா காரத்தில் அறிவிப்புப் பலகை வைக்கப்பட்டுள்ளது.

பைரவர் சன்னிதியும் இருக்கிறது. இங்குள்ள நவ கிரகங்கள் ஒன்பதும் வாகனத்துடன் இருப்பதுதான் விசேஷம். இங்கு விளக் கேற்றி வழிபடு கிறார்கள்.

பலிபீடத்தின் அடியில் உப்பு, மிளகு போட்டு பிரார்த்தனை செய்து கொள் கிறார்கள்.

மூலவர் பாலசுப்ரமண்யரை தரிசிக்க உள்ளே நுழைகிறோம். கண் கொள்ளாக் காட்சி. 'பச்சை மயில் வாகனனே சிவ பாலசுப்ரமண்யனே' என்று பாடினாலும் மூலவர் முருகனுக்கு இங்கே மயில் வாகனம் இல்லை.

தேவர்கள் சேனாபதியான முருகனின் முன் வலக்கரம் அடியார்களுக்கு அபயம்

தொண்டை மண்டலத்தில் உள்ள கோயில்களில் பல்லவர்கள் காலச் சிறப்புப் படைப்புத் தான் இந்த பிரம்ம சாஸ்தா வடிவம். ஏன் இந்தக் கோலம் என்பதைக் கந்தபுராணத்தில் பார்க்கலாமே.

கயிலையங்கிரி. ஜனித்த புத்திரரில் இளையவனான முருகன், லட்சத்து ஒன்பது வீரர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது சிவனாரை வணங்கச் சென்ற பிரம்மா, குமரக் கடவுள் குழந்தை தானே என்றெண்ணி வணங்காமல் சென்று விட்டார்.

குழந்தை முருகன் ஞான பண்டித ஸ்வாமி. மறையும் மறைபொருள் தேடும் மன்னனான முருகனுக்கு ஞான வித்தகன் பிரம்மாவின் அலட்சியம் புரியாதா என்ன? தான் குழந்தை இல்லை என்பதைப் பாடம் புகட்ட எண்ணினார்.



• பிரம்ம சாஸ்தா

பிரம்மாவை அழைத்து அவர் செய்யும் தொழிலைப்பற்றிவிசாரித்தார். படைக்கும் தொழிலைச்செய்யும்அவரை அதற்கு அடிப்படையான பிரணவத்தின் பொருளைக் கூறும்படி கேட்டார்.

மாயைபிரம்மாவை மறைத்தது. பிரணவத்தின் பொருளைக் கூறத் தடுமாறினார். சினம் கொண்ட முருகன், பிரம்மாவைத் தலையில் குட்டி, சிறையில் அடைத்தார். படைக்கும் தொழில் ஸ்தம்பித்தது. கையில் ஜபமாலை, கமண்டலம் ஏந்தி தாமே படைக்கும் தொழிலை செய்யலானார்.

இந்தக் கோலம்தான் பிரம்ம சாஸ்தா கோலம். இந்தக் கோலத்துடன்தான் முருகன் சிறுவாபுரி தலத்தில் காட்சி தருகிறார்.

அளிக்க, பின் வலக்கரம் ஜெப மாலையை ஏந்தி இருக்க, முன் இடக்கரம் இடுப்பினும் பின் இடக்கரம் கமண்டலம் ஏந்தி பிரம்ம சாஸ்தா கோலத்திலும் காட்சி அளிக்கிறார்.

முருகப் பெருமானுக்குத் தெற்கே அண்ணாமலையார் மரகதப் பச்சை வைரமாகக் காட்சித் தருகிறார். இத்தனை பெரிய மரகத ஜோதி லிங்கம் வேறு எங்கும் இல்லை.

அபிதகுஜாம்பாள் என்னும் உண்ணாமலை அம்மையும் மரகதப் பச்சையான வடிவில் காட்சி அளிக்கிறார்.

அண்ணாமலை - உண்ணாமுலையம்மை திருமுன் வள்ளியம்மையார் நாணம் மேலிட, அரைக் கண் பார்வையால் அழகன் முருகனைப் பார்த்துக் கொண்டிருக்கும் திருமண வைபவ கோலத்தைக் காண ஆயிரம் கண்கள் போதாது.

இக்கோயில் விக்கிரகங்களில் ஆதி மூலவர், பாலசுப்ரமண்ய ஸ்வாமி, நவ கிரகங்கள் தவிர மற்ற விக்கிரகங்கள் பச்சைக் கல்லில் செய்யப்பட்டவை. எல்லா விக்கிரகங்களும் மரகதப் பச்சைக் கல்லில் உள்ளது போல் வேறு எந்தக் கோயிலிலும் கிடையாது.

அத்தனை வியப்புக்குரிய இத்தலத்து வள்ளி மணவாளப் பெருமானை வணங்கினால் வேண்டும் வரங்களைப் பெறலாம்.

(வலம் வருவோம்)

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

வழங்கும்

## சுற்றுலா புதிர் - 5

# ரூ. 5,000 பரிசு

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை இயற்கை அழகும் பாரம்பரியப் பெருமையும் கொண்டு, பார்ப்போரை வியக்க வைக்கிறது நமது இந்தியா! இந்தியா மட்டுமல்லாது சர்வதேச சுற்றுலா சம்பந்தப்பட்ட குறிப்புகளையும் தந்திருக்கிறோம். அடுத்த பக்கத்தில் உள்ள சுற்றுலாத் தலங்களின் பெயர்களை அடித்தல் திருத்தலின்றி பொருத்தமாகக் கட்டங்களில் நிரப்புங்கள்.






❖ மதுரை ❖ ஆக்ரா ❖ மதுரா ❖ காவலூர் ❖ காஷ்மீர் ❖ கஜுராஹோ
❖ கோவளம் ❖ டார்ஜிலிங் ❖ கஸிரங்கா ❖ பெங்களூர் ❖ கொல்கத்தா
❖ கன்யாகுமரி ❖ மகாபலிபுரம்

**தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்**

## போட்டி விதிகள் :

*சுற்றுலா சம்பந்தப்பட்ட விடைகளை நிரப்பி இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்களை வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.*

அனுப்ப வேண்டிய முகவரி : சுற்றுலா போட்டி - 5 மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.
கடைசித் தேதி : 15.6.2010

பெயர்: .................................... விலாசம்: ....................................
....................................................................................................
....................................................................................................
தொலைபேசி எண் : .............................. ஈ-மெயில்:..............................

# சிறுகதை







கதாநாயகியான
சுகுணா டீச்சர்,
உங்கள்
கற்பனையில்
எப்படியிருப்
பாங்க?
வெள்ளைத்தாளில் (A4 size)
வண்ணச் சித்திரமாகத்
தீட்டி, பெயர் முழு விலாசத்துடன்
அனுப்புங்க. மிகச்சிறந்த ஓவியம்
வரையும் வாசகி ஒருவருக்கும்,
மாணவர் (கல்லூரி அத்தாட்சி அவசியம்)
ஒருவருக்கும் முறையே பட்டுப் புடவையும்,
செல்ஃபோனும் பரிசாகக்
காத்திருக்கின்றன.

கடைசித் தேதி
30.6.2010

ஆசிரியரின் தீர்ப்பே
இறுதியானது.



"வணக்கம் டீச்சர்" என்று நாங்கள் கோரசாய் குரல் கொடுத்தோம்.

உள்ளே நுழைந்த சுகுணா டீச்சருக்குத் தான் இத்தனை மரியாதை.

டீச்சரின் முகத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டோம். வாய் அருகில் வீங்கியிருந்தது. டீச்சரின் முகமும் கலங்கியிருந்தது.

"என்ன டீச்சர்?" என்று பதறிப் போய் கேட்டோம்.

டீச்சர், சின்னப் புன்னகையுடன் சொன்னார்.

"விழுப்புண்கள்."

டீச்சருக்கு யாருடன் சண்டை? போர்?

"சரி, சரி, நேற்று மார்ட்டின் லூதர் கிங் பாடத்தை எந்த இடத்தில் நிறுத்தினோம்?" என்று கேட்டுவிட்டு, கணீரென்ற குரலில் பாடத்தைத் துவக்கினார்.

சுகுணா டீச்சர் என்றால், எங்கள் எல்லோருக்குமே பிடிக்கும். மற்ற டீச்சர்கள் மாணவர்களைத் திட்டும் போது, சுகுணா டீச்சர் வகுப்பில்தான் எங்களுக்குப் பாராட்டு மாலைகள் விழும்.

# சுகுணா டீச்சர்!






''வெறும் பாடப்புத்தகம் மட்டுமே வாழ்க்கையில்லை'' என்று அழுத்தமாக எங்கள் மனத்தில் பதிய வைக்க முயல்வார்.

''படிக்கும் பருவம்தான் பெண்களுக்கு சொர்க்கமான நாட்கள். பிறகு, கொஞ்சம், கொஞ்சமாக சுமைகள் ஏறத் தொடங்கிவிடும். சமூகத் தளைகள் அதிகமாகும். அதனால, என் வகுப்பிலே நீங்க சிரிக்கலாம், பேசலாம், பிடிச்சதுன்னா டான்ஸ்கூட ஆடலாம்'' என்பார் சிரித்துக் கொண்டே.

டீச்சரின் கணவரும் எங்கள் பள்ளியில் தான் ஆசிரியராய் வேலை பார்க்கிறார். கறுப்பாய், குள்ளமாய், முன் வழுக்கையுடன் இருக்கும் தமிழ்மணி சாரை, டீச்சரின் கணவர் என்று ஏற்றுக் கொள்ளவே எங்கள் மனது தயங்கும்.

டீச்சரின் அத்தை மகனாம் அவர். டீச்சர் பிறந்த உடனேயே, இரண்டு வீட்டுப் பெரியவர்களும் சேர்ந்துஎடுத்த முடிவால், இவர்கள் இணைந்ததாகக் கேள்விப்பட்டோம்.

சுகுணா டீச்சர் மாநிறம்தான் என்றாலும் மஞ்சள் பூசிய களையான முகம். யாரைக் கண்டாலும், முதலில்சிரிப்பு. அப்புறம்தான் பேச்சேவரும். அவரிடமிருந்துமாணவர்கள் ஏதும் தவறு செய்தால், அவர் தண்டிக்கும் முறையே வேறு மாதிரி இருக்கும்.

ஒருமுறை என் வகுப்பு மாணவன் அழகப்பன், பெண்கள் கழிவறையின் உள்ளே எட்டிப் பார்த்துவிட்டான். உள்ளே யாரும் இல்லைதான். ஆனால், அவன் எட்டிப் பார்த்ததை, கணக்கு சார் கவனித்துவிட்டார்.

தலைமை ஆசிரியர் அறைக்குக் கூட்டிப் போய் வெளுத்துவிட்டார். 'இனி பெண்கள் கழிவறையில் எட்டிப் பார்க்க மாட்டேன்' என்று ஆயிரம் தடவை எழுதச் சொல்லி, உபரி தண்டனை வேறு கொடுத்துவிட்டார்.

செய்தி கேள்விப்பட்ட சுகுணா டீச்சர், தலைமை ஆசிரியர் அறைக்குள்ஓடினார்.

அடி வாங்கிக் கொண்டிருந்த அழகப்பனைக் காப்பாற்றி, வெளியே அழைத்து வந்தார்.

''ஏன் சார், தண்டனைங்கற பெயராலே ஹிட்லர் மாதிரி நடந்துக்கறீங்க. ஆயிரம் தடவை எழுதறதுக்கு அது என்ன ஸ்ரீராம ஜெயமா?' அதை ஒவ்வொருமுறை எழுதும்போதும், இவன் மனசு என்ன பாடு படும்? வன்மம்தான் அதிகமாகும். குற்றவாளிகள் உருவாவதில்லை! உருவாக்கப் படுகிறார்கள்'' என்று சக ஆசிரியர் களைக் கண்டித்தார்.

**கிருஷ்ணா**

வலியால் அழும் அழகப்

பனை சமாதானப்படுத்தி, காரணம் கேட்டார்.

''எங்க வீட்டுலே எல்லோருக்கும் பொதுவான டாய்லெட்தானே டீச்சர் இருக்கு! பள்ளிக்கூடத்திலே மட்டும் தனித்தனியாய் இருக்கே, அது எப்படி இருக்கும்னு பார்க்க ஆசையாயிருந்துச்சு டீச்சர். அதான், யாருமில்லாதபோது, எட்டிப் பார்த்தேன். அதனாலேதான், அரை மணி முன்னமே ஸ்கூலுக்கு வந்தேன். ஆனாலும் மாட்டிக்கிட்டேன்'' என்று சொன்னான்.

சுகுணா டீச்சர் அவனை அணைத்துக் கொண்டார்.

''எல்லாத்தையுமே தெரிஞ்சுக்க, ஆராய்ந்து புரிஞ்சுக்க விரும்பறதுதான் மாணவப்பருவம். நீ செஞ்சது ஒரு வகையிலே பார்த்தால் தப்பே இல்லை. என்னோடு வா'' என்று அவனைக் கூட்டிப் போய் பெண்கள் கழிப்பறையைக் காண்பித்தார்.

இந்த விஷயம் ஊர் முழுக்கப் பரவி சிரிப்பாய் இருந்தது. கொஞ்ச நாள், அழகப்பன் பெயர்கூட 'டாய்லெட்' என்ற புனைப்பெயருடன் உலா வந்தது.

டீச்சரிடம் போய் அழுது, புகார் செய்த அழகப்பனை, டீச்சர்தான் தேற்றினார்.

''சின்னக் கோடாய் இந்தப் பிரச்னை ஆகணும்னா, பெரிய கோடாய்ப் போடணும். படிப்பில் சாதிச்சுக்காட்டு. மாவட்ட அளவிலே முதல் மாணவனாய் வா.''

அழகப்பன் ஐ.ஏ.எஸ் ஆனது பிந்தைய வரலாறு.

வகுப்பு முடிந்ததும் பானுமதிதான் இரகசியக் குரலில் சொன்னாள்.

''நம்ம டீச்சரை, சார் அடிச்சுட்டாராம்.''

டீச்சர் குடியிருக்கும் தெருவிலேயே இருக்கிறாள் பானுமதி.

''ஏன்டீ?''

''டீச்சர், நேற்று நம்ம பி.டி. சார் பின்னாடி உட்கார்ந்து ஸ்கூட்டரிலே போனாங்களாம். பி.டி. சாருக்கும், டீச்சருக்கும் நடுவிலே 'லவ்'வுனு தமிழ்மணி சார் சந்தேகப்பட்டு அடிச்சுட்டாராம்.''



சூப் செய்து இறக்குவதற்கு முன், நான்கில் ஒரு பங்கு என்ற அளவில், வடி கஞ்சியை ஊற்றி, இரண்டு நிமிடங்கள் அடுப்பில் வைத்து இறக்கவும். சூப்பின் சுவை சூப்பராவதோடு, சத்துக்களும் நமக்குக் கிடைக்கும்.

- வி. ரமாதேவி, நாகர்கோவில்

பத்தாவது படிக்கும் எங்களுக்கு, இந்தக் கிசுகிசு ஒரு பக்கம் அதிர்ச்சியாகவும், இன்னொரு புறம் கவலையாகவும் இருந்தது.

பி.டி.சார் உடற்பயிற்சி செய்து மெருகேறிய உடற்கட்டுடன், ஹீரோ போல் இருப்பார். ஆனால், டீச்சரைவிட வயது குறைவானவர். டவுனில் வளர்ந்தவர். எங்கள் பட்டிக்காடு கிராமத்துப் பள்ளிக்கு அவரின் வரவு ஆச்சர்யமான ஒன்றுதான்.

அன்று நான் பள்ளிக்கூடம் வந்து கொண்டிருந்தேன். கொய்யா மரத்து செட்டியார் வீட்டைத் தாண்டி, நடந்து வரும்போது, பதினோறாவது படிக்கும் சரவணன், சடக்கென என் முன் தோன்றி, என் கையில் எதையோ திணித்துவிட்டு, பக்கத்து சந்துக்குள் ஓடிவிட்டான்.

நான், அவன் கொடுத்தது நாலாய் மடிக்கப்பட்ட காகிதம் என்பதைக் கண்டு, பிரித்தேன்.

அதில் எழுதியிருந்ததைப் படிக்க ஆரம்பித்ததும், எனக்குள் படபடப்பும், குறுகுறுப்பும் எகிறியது.

முதன்முதலாய் எனக்கு லவ் லெட்டர். அதுவும் சரவணன் என்ற ஸ்மார்ட்டான வனிடமிருந்து.

வகுப்புக்குள் நுழைந்த பின்னும், என்



படபடப்பு அடங்கவில்லை. யாரிடமாவது என் ரகசியத்தைப் பகிர்ந்துக்கொள்ளத் துடித்தது மனசு.

என் தோழி மீனாட்சியை தனியாக அழைத்துசென்று, எங்கள் ஊர் மாரியம்மன் மேல் சத்தியம் வாங்கிக்கொண்டு, அவளிடம் லவ் லெட்டரைக் காண்பித்தேன். அவள் கண்களில் இருந்த பொறாமையைக் கவனிக்க மறந்துவிட்டேன்.

மதியம் மோர் சாதத்ததைச் சாப்பிட்டு முடித்து, கை கழுவும்போது, சுகுணா டீச்சர் அழைத்தார்.

எனக்குள் பயப் பந்து உருண்டது. வயிற்றில் ஏதோ பிசைந்தது. மீனாட்சியை முறைத்தேன்.

''சுகுணா டீச்சரைத் தவிர யாரிடமும் சொல்ல மாட்டேன்னு' மனசுக்குள்ளே சொல்லிக்கிட்டுத்தான் சத்தியம் செஞ்சேன்'' என்றாள், சாமர்த்தியமாய்.

சுகுணா டீச்சர் மட்டுமே அறையில் இருந்தார். அவரின் டிபன் பாக்ஸ் திறந்திருந்தது.

''வா, வா, சாப்பிடு, இந்தா'' என்றார்.

''இல்லை டீச்சர், இப்பத்தான் சாப்பிட்டேன்.''

''அது மதிய சாப்பாடுதானே? இதை ராத்திரி சாப்பாடாய் நினைச்சு சாப்பிடு'' என்றார்.

விழித்தேன்.

''முடியாதுதானே! அந்தந்த நேரத்துல தான் அதை, அதைச் செய்ய முடியும், சரியா நான் சொல்றது?''

''பலமாய்த் தலையாட்டினேன்.

''இது படிக்கற வயசு, பத்தாவது படிக்கிற பொண்ணு, இருபது வயசுக்கு மேலே செய்ய வேண்டிய காரியங்களில் ஈடுபடக் கூடாது. அதுவும், நீ நல்லாப் படிக்கற பொண்ணு. பட்டப் படிப்பு படிச்சு, நல்ல வேலையில சேர்ந்து, அப்புறம் இந்த காதல், கத்தரிக்காய் எல்லாம் பார்க்கலாம். சரியா?''

நான் டீச்சரையே வெறிதேன்.

''ஏதோ கேட்க நினைக்கற? கேளு'' என்றார் டீச்சர்.

மொத்த தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு கேட்டு விட்டேன்.

''நீங்க மட்டும் பி.டி. சாரை லவ் பண்றது சரியா டீச்சர்?''

டிபன் பாக்ஸிருந்து ஒரு கவளம் சோறு டுத்து, வாயில் போடப் போனவர், சட்டென நிறுத்திவிட்டார்.

அச்சத்துடன் பார்த்த என்னைப் பார்த்து புன்னகைத்தார்.

''யார் அப்படிச் சொன்னது?''

''பின்னே, பி.டி. சார் பின்னாடி ஸ்கூட்டரிலே உட்கார்ந்து போனீங்களாமே, அது என்னவாம்?''

என் கேள்விக்கு பெரிய சிரிப்பை, பதிலாய்த் தந்தார்.

''ஸ்கூட்டரிலே உட்கார்ந்து போனாலே, காதல்தானா? வேறு காரணம் ஏதும் இருக்க முடியாதா? அவசர காரியம் ஏதும் இருக்கக் கூடாதா?''

என் தலையில் குட்டிக் கொண்டேன், என் அறியாமையை நினைத்து.

''பின்னே சார் எதுக்கு உங்களை அடிச்சார் டீச்சர்?''

''பத்து வருஷம் கழிச்சு வந்து கேளு. அப்பத்தான் நான் சொல்லுகிற பதில் உனக்குப் புரியும். இப்ப எதுவும் புரியாது''

**ஊ**ற வைத்தப் பச்சரிசி யுடன் தேங்காய்த் துருவல், அவல் சேர்த்து நைசாக அரைக்கவும். தேவையான உப்பு, ஒரு சிட்டிகை சோடா சேர்த்துக் கலந்து, நான்கு மணி நேரம் கழித்து, ஆப்பம் செய்தால் ருசியாக இருக்கும்.

**தங்கம் ராமநாதன்,**
**திருவனந்தபுரம்**



உன் தைரியமான கேள்வி எனக்குப் பிடிச் சிருக்கு. இந்தத் தைரியத்தை எப்பவுமே விட்டுடாதே. ஒழுங்காய் படி'' என்றார்.

நுழையும்போது இருந்த பயமெல்லாம் ஓடிப்போக, சந்தோஷமாய் அறையிலிருந்து வெளியே வந்தேன்.

காலம் ஓடிப் போனது. இப்போது எனக்கு வயது இருபத்தெட்டு. அரசாங்க உத்யோகம். கணவன், இரண்டு வயதுக் குழந்தை என்று உருமாறிப் போனேன். ஊரும்தான். என் கல்லூரிப் படிப்புக்காக எங்கள் குடும்பமே சென்னையில் குடி யேறியதில், கிராமத்துடனான தொடர்புகள் அறுந்துப் போயின.

என் மைத்துனரின் திருமணம் நடத்த ஊருக்கு வந்தபோதுதான், என் கிராமமும், சுகுணா டீச்சரும் நினைவில் வந்தனர்.

இந்த டவுனிலிருந்து இருபது கிலோ மீட்டர் தொலைவில்தான் எங்கள் கிராமம்.

டாக்ஸியை அமர்த்திக்கொண்டு, என் கணவர், குழந்தையுடன் கிளம்பிவிட் டேன்.

சுகுணா டீச்சர் பற்றி விசாரித்தேன்.

''லீவுலே இருக்காங்க. சாருக்கு உடம்பு சரியில்லே. அவரைப் பார்த்துக் கறதுக்காக நீண்ட விடுப்பிலே இருக் காங்க'' என்று கேள்விப்பட்டதும் சுகுணா டீச்சர் வீடு நோக்கி டாக்ஸி பறந்தது.

வயதான பிறகும் டீச்சர் முகத்தில் அதே இளமைப் புன்னகை. நேர்த்தியாய் உடை உடுத்தியிருந்தார். கொண்டை போட்ட முகம், இன்னும் கம்பீரமாய் இருந்தது.

பக்கவாத நோயில் விழுந்து, படுத்த படுக்கையாய்க் கிடந்த தமிழ்மணி சாரைப் பார்க்கப் பாவமாயிருந்தது.

கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு கேட்டேன்.

''டீச்சர், நான் கேட்ட ஒரு கேள்விக்கு பத்து வருடம் கழிச்சு வந்து பாரு, பதில் சொல்றேன்னு சொன்னீங்க, ஞாபக மிருக்கா?''

தலையசைத்தார்.

''சாருடன் நான் நடத்திய தாம்பத்யம் ஒரு போர்தான். அதில் விழுப்புண்களும், வடுக்களும் நிறைய இருக்கு. ஆனா, இந்தப் போருக்கு பின்னால உள்ள காரணம் எனக்குத் தெரிஞ்சதாலதான் என்னால இவரை வெறுக்க முடியல.''

டீச்சரின் பார்வை இப்போது சார் படுத்திருந்த இடத்திலேயே நிலைத் திருந்தது.

''என்ன காரணம் டீச்சர்?''

''எனக்கு ஆண், பெண்ணுன்னு பேத மில்லாம எல்லோர் மேலும் பிரியம். ஆனா என் அத்தை மகனான இவருக்கு, என் மேல மட்டுமே அதீதப் பிரியம். எதுவுமே அதிக மானால் வலிதானே மிஞ்சும்'' என்றார்.

டீச்சர் மூலம், மற்றுமொரு வாழ்க்கை போதனை ஆசீர்வதிக்கப்பட்டதை உணர்ந் தேன்.

# பூஞ்சாரல் 2009-2010

## ஆட்டம்... பாட்டம்... கொண்டாட்டம்!



**சிறப்பு விருந்தினர்**

**ஸ்ரீ.கே.துளசிஜயா வாண்டையார்**



**மண்டலம் : தஞ்சாவூர்**
**இடம் : A.V.V.M. ஸ்ரீ புட்பம் கல்லூரி**
**தேதி : 10.2.2010**

ஃபேஷன்:

*வின்னர்:* ஏ.வீரிய வாண்டையார் நினைவு ஸ்ரீ புட்பம் கல்லூரி - பூண்டி

வாலிபால்:

*வின்னர் :* குந்தவை நாச்சியார் கலை மற்றும் அறிவியல் கல்லூரி - தஞ்சாவூர்

*ரன்னர்:* ஏ.வீரிய வாண்டையார் நினைவு ஸ்ரீ புட்பம் கல்லூரி - பூண்டி

ஆல் ரவுண்டர்:

*(இறுதிச் சுற்றுப் போட்டிக்குத் தேர்வாகிய கல்லூரிகள்)*

ஏ.வீரிய வாண்டையார் நினைவு ஸ்ரீ புட்பம் கல்லூரி - பூண்டி

இடையதாங்குடி ஜி.எஸ்.பிள்ளை கலை மற்றும் அறிவியல் கல்லூரி - நாகபட்டினம்



வாலி பால்








ஆல் ரவுண்டர்



# ஜெயஸ்ரீ ராஜ்

## நினைவுச் சிறுகதைப் போட்டி-2010

**முதல் பரிசு**
**ரூ.10,000**

**இரண்டாம் பரிசு**
**ரூ.7,500**

**மூன்றாம் பரிசு**
**ரூ.5,000**

**தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.2000 சன்மானம் பெறும்.**

மும்பை ஜெயஸ்ரீ ராஜ் கல்கி, மங்கையர் மலர் வாசகியருக்கு நன்கு அறிமுகமானவர். நல்ல எழுத்தாளர், சிறந்த பேட்டியாளர். மறைந்த ஜெயஸ்ரீயின் நினைவாக அவரது கணவர் திரு.ராஜகோபால், மங்கையர் மலர் வாசகியருக்கு கடந்த நான்கு வருடங்களாக சிறுகதைப் போட்டிகள் நடத்தி, பரிசுகளை அளித்து வருகிறார். நீங்கள் தந்த பேராதரவைக் கண்டு உற்சாகமடைந்த திரு. ராஜ், இந்த வருடமும், சிறுகதைப் போட்டியை நமது மங்கையர்மலர் வாசகியருக்காக நடத்த முன் வந்திருக்கிறார். நல்லதொரு வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்!

**கதைகள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : ஜூலை-6**

# வாசகியரே...
# உங்கள் படைப்புத் திறனை நிரூபிக்க மீண்டும் ஒரு வாய்ப்பு!



விதிமுறைகள்:

★ பெண்கள் மட்டுமே கலந்து கொள்ள வேண்டும். முழு முகவரி, புகைப்படம் தேவை.

★ மங்கையர் மலரில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.

★ சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ கையால் எழுதப்பட்ட அல்லது தட்டச்சு செய்யப்பட்ட கதைகள் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படும். ஜெராக்ஸ் பிரதிகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ தேர்வாகாத கதைகள் திருப்பி அனுப்பப்படமாட்டாது.

★ முதல் பரிசுக் கதை ஆகஸ்ட் இதழில் வெளியாகும்.

ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதைப் போட்டி - 2010
என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு அனுப்ப வேண்டிய முகவரி:
ஆசிரியர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

# இனிய வாக்...



சென்ற மாதம் சென்னைக்குப் போயிருந்தோம். நங்கநல்லூர் ஆஞ்சநேயரைச் சேவித்துவிட்டு வெளியே வந்தோம்.

கோயிலின் எதிரில் நெல்லிக்காய் மற்றும் மாகாணி கிழங்கு போன்றவற்றை வைத்து, ஒரு முதியவர் விற்றுக் கொண்டிருந்தார். அவரிடம் விலை விசாரித்து முதலில் அரைக் கிலோ வாங்கினோம். என் அக்கா, தனக்கும் ஓர் அரைக் கிலோ வேண்டும் என்றாள். எங்களுக்கு முன் அங்கு நின்றிருந்த பெண்மணி தனக்கும் அரைக் கிலோ கொடுக்கும்படி கூறினாள். ஆனால் அங்கு இருந்ததே மொத்தமாக ஒரு கிலோதான். உடனே அந்தப் பெண்மணி, ''பரவாயில்லை. நீங்க வாங்கிட்டு போங்க. நான் அப்புறமா வாங்கிக்கிறேன். எங்க வீடு பக்கத்துலதான் இருக்கு!'' என்று சகஜமாகப் பேச ஆரம்பித்தார்.

நான், ''அப்படியா? நீங்க ரொம்ப கொடுத்து வைச்சவங்க. தினமும் ஆஞ்சநேயரை தரிசிக்கலாம்'' என்றவுடன், அந்தப் பெண்மணியின் கண்கள் பனித்துவிட்டன.

என் கைகளைப் பிடித்துக்கொண்டு ''ரொம்ப சந்தோஷம், வெள்ளிக்கிழமையும் அதுவுமாய் என்னைக் கொடுத்து வைத்தவள் என்று சொன்னீங்களே... ரொம்ப சந்தோஷம்!'' என்றார்.

இந்த நிகழ்ச்சி என்னை பெரிதும் சிந்திக்க வைத்துவிட்டது. சாதாரணமாக சொன்ன ஒரு வார்த்தையே மற்றவர்களுக்கு, இவ்வளவு சந்தோஷத்தைக் கொடுக்கும் என்றால், நாம் ஏன் எப்போதும் நல்ல வார்த்தையாகவே பேசக்கூடாது?

-கே.ஆர். வனஜா ராஜ், பெங்களூரு 16



தேவிகா காளியப்பன், பாரம்பரிய, கிராமிய, சமையல் ருசியை இங்கே அறிமுகப்படுத்துகிறார்... இவருடைய 'கொங்கு நாட்டு சைவ சமையல்' புத்தகம் பெரும் வரவேற்பைப் பெற்றது. இவர் அழகுக் கலையிலும் தேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

# தலைவாழை

வாழை இலையில் சாப்பிடுவது ஆரோக்கியமானது. வாழை இலையில் 'பினாலிக்ஸ்' என்னும் இயற்கைச் சத்து உள்ளதால் வாழை இலையில் தொடர்ந்து சாப்பிட்டு வருபவர்களுக்கு இது நோய் எதிர்ப்பு சக்தியை அளிக்கிறது.

நம் வீட்டு விசேஷங்களில், வாழை இலை விருந்து என்றாலே ராஜ உபசாரம் என்றுதான் பொருள். தலை வாழை இலை நிறைய பரிமாறி இருப்பதைப் பார்ப்பதே தனி அழகுதான்!

முதலில் இலை நுனியில் உப்பு, ஊறுகாய் பரிமாறுவர். பிறகு காய்கறி பொரியல்களை இலையில் மேல் பாகத்தில் பரிமாறுவர்.

அடுத்து, சாதம் இலையின் நடுவிலும் அதன் பக்கத்தில் பருப்பு, நெய்யும் பரிமாறுவர். கலந்த சாதம் இலையின் இடப் பாகம் இடம் பெறும். பழம், அப்பளம், அவியல், வடை, கூட்டு, பச்சடி போன்றவற்றை இலையின் மேல் பாகத்தில் வைப்பார்கள். சாதத்தின் மேல் சாம்பாரும் நெய்யும் பரிமாறுவார்கள்.

சாம்பார் சாப்பிட்டபின் ரசம், பாயசம், தயிர் பரிமாறுவர். இதுதான் தலைவாழை இலையில் பரிமாறும் விதம். விருந்து சாப்பிட்டபின் தாம்பூலம் கண்டிப்பாக இருக்கும்.



முதலில் ஒரு இனிப்புடன் தொடங்குவோம். இந்த சீஸனில் பலாப்பழம் கிடைக்கிறது. அதில் ஒரு விசேஷ பாயசம் செய்வோம்.

## பலாப்பழ பாயசம்

**தேவையான பொருள்கள்:**

பலாச்சுளை - 20

பொடித்த வெல்லம், - 1 கப்

அடர்த்தியான தேங்காய்ப் பால் - 1 கப்

இரண்டாவது தேங்காய்ப் பால் - ¼ கப்

ஏலத்தூள் - சிறிது

வேக வைத்த பாசிப் பருப்பு - 1 டேபிள் ஸ்பூன் (தேவைப்பட்டால்)

கிராமிய மணம் கமழும் புத்தம் புதிய சமையல் பகுதி ஆரம்பம்!



பலாப்பழ பாயசம்

# சமையல்!

உடைத்த முந்திரி - 10

நெய் - 1 டேபிள் ஸ்பூன்

**செய்முறை:** பலாச்சுளையில் உள்ள கொட்டை, மடல் நீக்கவும். சுளைகளைப் பொடியாக நறுக்கவும். தண்ணீர் சேர்த்து வேக வைத்து மசிக்கவும். அடிகனமான வாணலியில் மசித்த பலாச்சுளை, பொடித்த வெல்லம் போட்டு நன்றாகக் கிளறவும். வேக வைத்த பாசிப் பருப்பைச் சேர்க்க, கையில் ஒட்டாமல் ஜாம் போல பழம் வந்த பின் இரண்டாவது தேங்காய்ப் பால் விட வும். ஒரு கொதி வந்ததும் திக்கான தேங் காய்ப் பால் விட்டு, பூத்து வந்தபின் இறக் கவும். முந்திரியை நெய்யில் வறுத்து, ஏலத் தூள் சேர்க்கவும். சூடாகப் பரிமாறவும்.

## பரங்கிக்காய் பொரியல்

(அரசாணிக்காய்) பொரியல்

இதை சிவப்புப் பூசணி, காய் களின் ராஜா எனச் சொல்வர். வாழைக்காயை மந்திரி என சொல் வர். அதனால்தான் இலையில் பரிமாறும்போது அரசாணிக்காயை முதலிலும் இரண்டாவதாக வாழைக்காயையும் பரிமாறுவர்.

**தேவையான பொருள்கள்:**

பரங்கிக்காய் (சிவப்புப் பூசணி) - 100 கிராம்

தேவிகா காளியப்பன்

உப்பு - தேவைக்கு
மஞ்சள்தூள் - ½ டீஸ்பூன்
தாளிக்க:
கடுகு - 1 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்
வரமிளகாய் - 2
கறிவேப்பிலை - சிறிது
தேங்காய்த் துருவல் - 1 டேபிள் ஸ்பூன்
சர்க்கரை - 1 டீஸ்பூன் (தேவைப்பட்டால்)
எண்ணெய் - 1 டீஸ்பூன்

செய்முறை:

பரங்கிக்காயைத் தோல் சீவி, விதை நீக்கி சிறிய துண்டுகளாக நறுக்கவும். தேவையான தண்ணீர், உப்பு, மஞ்சள் தூள் சேர்த்து நன்றாக வேக வைக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, உளுத்தம் பருப்பு, வரமிளகாய், கறிவேப்பிலை தாளித்து, வேக வைத்த பரங்கிக்காயைப் போட்டுக் கிளறி தேங்காய்த் துருவல், சர்க்கரை சேர்த்து இறக்கவும். சில சிவப்பு நிற காய்கள் இனிப்பாகவே இருக்கும்.



பரங்கிக்காய் பொரியல்

## கூட்டுச் சாறு (முருங்கைக்காய்)

முருங்கைக்காய் - 2
புளி - சிறிய எலுமிச்சை அளவு
உப்பு -தேவையான அளவு
மஞ்சள் தூள் - ½ டீஸ்பூன்

வறுத்து அரைக்க:

துவரம் பருப்பு - 2 டீஸ்பூன் (எண்ணெய் விடாமல் வறுக்கவும்.)

தனியா (கொத்தமல்லி விதை) - 1 டீ ஸ்பூன்

வரமிளகாய் - 2 அல்லது 5, எண்ணெய் கொஞ்சம் விட்டு தனியா, வரமிளகாயை வறுக்கவும்.

சிறிய வெங்காயம் தோலுரித்தது - ½ கப் (எண்ணெய் விட்டு வதக்கவும்.) மேற் சொன்ன எல்லாவற்றையும் கரகரப்பாக அரைக்கவும்.

தாளிக்க:

எண்ணெய் - 1 டீ ஸ்பூன்,
கடுகு, உளுத்தம்பருப்பு- தலா ½ ஸ்பூன்
வரமிளகாய் - 1
கருவடகம் - 2 டீஸ்பூன்
தட்டிய வெங்காயம் - 4 அல்லது 5

செய்முறை:

முருங்கைக்காயைக் கழுவிச் சிறிய துண்டுகளாக நறுக்கவும். இதனுடன் தேவையான தண்ணீர் விட்டு உப்பு, புளியைக் கரைத்துவிட்டுக் கொதிக்க விடவும். புளி, பச்சை வாசனை போக கொதித்ததும் அரைத்த விழுதை போட்டு நன்றாகக் கொதித்து இறக்கவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, வரமிளகாய், தாளித்து, கருவடகம் தட்டிய

வெங்காயம் வதக்கிப் போடவும். சுவையான கூட்டுச் சாறு, நாவைச் சுண்டியிழுக்கும்.



கூட்டுச்சாறு

## தட்டைப் பயறு + கத்தரிக்காய் குழம்பு

**தேவையான பொருள்கள்:**

தட்டைப் பயறு - 100 கிராம்
கத்தரிக்காய் - 100 கிராம்
புளி - எலுமிச்சம் அளவு
மஞ்சள் தூள் - ½ டீ ஸ்பூன்
உப்பு - தேவைக்கு
மிளகாய்த் தூள் - 2 டீ ஸ்பூன்
தாளிக்க - எண்ணெய் - 2 டீஸ்பூன்
கடுகு, உளுத்தம் பருப்பு - தலா ½ டீஸ்பூன்
வரமிளகாய் - 1
கருவடகம் - 2 டீ ஸ்பூன்


தட்டைப் பயறு குழம்பு

**செய்முறை:**

தட்டைப் பயறைக் கழுவி தேவையான தண்ணீர் சேர்த்து, குக்கரில் வேக வைக்கவும். கத்தரிக்காயை சிறிய துண்டுகளாக நறுக்கவும். ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொதித்தும் கத்திரிக்காய் போட்டு, புளித் தண்ணீர் விடவும். உப்பு, மஞ்சள் தூள், மிளகாய்த்தூள் போடவும்.

கத்திரிக்காய் வெந்ததும் வேக வைத்த பச்சைப்பயறு போட்டு, நன்றாகக் கலந்து விடவும். குழம்பு நன்றாகக் கொதித்ததும் இறக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, வரமிளகாய் கிள்ளிப் போட்டுத் தாளித்து சிவந்ததும் குழம்பில் கொட்டவும்.

இதேமுறையில் பச்சை பயறு + கத்தரிக்காய்

கறுப்புக் கொண்டைக்கடலை + கத்தரிக்காய் செய்யலாம்.

(கொண்டைக்கடலையை முந்தைய இரவு தண்ணீரில் ஊற வைத்து மறுநாள் குழம்புக்கு வேக வைக்கவும்.)

**(விருந்து தொடரும்)**

# கதவுகள் திறக்கட்டும்!






கோவை IT CORRIDOR-ல், அத்திபாளையம் ரோடு.
(குமரகுரு காலேஜ் ஆப் டெக்னாலஜி மற்றும்
சத்திரோடு அருகில்)

**43** Independent Villas
3 பெட் ரூம் 3000 Sq.ft.

**448** Luxury Flats
3 பெட் ரூம் 2043 - 2140 Sq.ft.
Rs. 54 - 57 lakhs

கோவை, சரவணம்பட்டியில் IT பார்க் அருகில் 20 ஏக்கரில் பசுமைச் சூழலில் ஸ்ரீவத்ஸா குளோபல் வில்லேஜ் என்ற புதியதோர் குடியிருப்பு உருவாகிறது. பள்ளிகள், கல்லூரிகள் மற்றும் Cognizant, Robert Bosch, Ford, KGISL முதலிய IT கம்பெனிகளும் வெகு அருகாமையிலேயே உள்ளன. இங்கிருந்து காந்திபுரம் 8 கி.மீ.-ம், விமான நிலையம் 9 கி.மீ.-ம், ரயில்வே ஸ்டேஷன் 8.5 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளன.

கோவை மற்றும் சென்னையில் பல்வேறு டவுன்ஷிப் மற்றும் அடுக்குமாடிக் குடியிருப்புகளை வெற்றிகரமாக உருவாக்கியுள்ள ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட் பி. லிட். நிறுவனம் தரத்திற்கும் நம்பிக்கைக்கும் பெயர் பெற்றது.

சிறப்பம்சங்கள் பல கொண்ட இந்த இல்லங்களை உடனே உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள்.

**சிறப்பம்சங்கள்**

■ நீச்சல் குளம் ■ டென்னிஸ் கோர்ட்டுகள் ■ கிளப் ஹவுஸ் ■ கம்யூனிட்டி ஹால் & ஜிம் ■ ஒருங்கிணைக்கப்பட்ட இன்டர்நெட், செட்டிலைட் ரேடியோ, செட்டிலைட் டி.வி. மற்றும் கண்காணிப்புக் கேமரா வசதி ■ குடிநீர் மற்றும் போர்வெல் தண்ணீர் வசதி ■ நகருக்குள் செல்ல அசோசியேஷன் நடத்துவுள்ள Bus shuttle சர்வீஸ் ஒவ்வொரு மணி நேரத்திற்கும்.

Member of










Architects
M/s. Sankar & Associates

Electrical Consultant
Mr. P.P. Subramaniam

Legal Consultant
Mr. P.R. Ramakrishnan



''சுயமா வியாபாரம் தொடங்கின பிறகு என் மகனுக்கு, சுத்தமா குளிர் விட்டுப் போச்சு...''

''அப்படியென்ன வியாபாரம் செய்றான்?''

'''கம்பளி' வியாபாரம்!''

- எஸ்.மீனலோசினி, திருத்தங்கல்

''எதுக்கு என் மேல தண்ணி தெளிக்கறீங்க?''

''உங்கப்பா உன்னை பூ மாதிரி பாத்துக்க சொன்னாரு!''

- வே.சித்ரா வேடியப்பன், திருவண்ணாமலை



ஜோக்ஸ்



''எனக்கு மூளையே இல்லைன்றா எம் பொண்டாட்டி. எவ்ளோ தைரியம் இருக்கும்?''

''விடுங்க ஸார்! இந்தப் பொம்பளைங்களே இப்படிதான் எல்லாத்தையும் ஒப்பனா பேசுவாங்க!''

- டி. சேகர், திருத்துறைப்பூண்டி

''நம் மன்னர் இலவசம் கொடுத்தே கஜானாவைக் காலி செய்துவிட்டார்!''

''அப்புறம்?''

''காலியான கஜானாவை ஒருத்தருக்கு இலவசமா கொடுத்துட்டார்!''

- எஸ். தமிழ்மணி, மன்னை





''சந்திரன்ல முதல் அடி வெச்சவரு ஆம்ஸ்ட்ராங்! புரிஞ்சுதா?''

''அங்கே போய் யாருக்கு மிஸ், முதல் 'அடி' வச்சாரு...''

- வே. தனசேகர், ஊதப்பூண்டி

# ஜூன் மாதம் எப்படி?

கணித்து
வழங்குபவர் :
சுவாமி கண்ணன்
பட்டாச்சார்யா

துல்லியமான கணிப்புகளும், எளிய பரிகாரங்களும்!

## கிரக நிலை

| | | | |
|---|---|---|---|
| குரு | | சூரியன் புதன். | கேது சுக்ரன் |
| | 1.6.2010 அன்று ராசி கிரகநிலை | | |
| சந்திரன் | | | செவ் |
| ராகு | | | சனி |

## மேஷம்

**அஸ்வினி, பரணி, கார்த்திகை 1 ஆம் பாதம்**

இந்த மாதம் தனஸ்தானத்தில் சஞ்சரிக்கும் சூரியன் மற்றும் புதனால் நன்மையும், தொல்லையும் சேர்ந்தே காணப்படும்.

உத்தியோகஸ்தர்கள், இடமாற்றம் பதவி உயர்வு பெற்று மகிழ்வீர்கள். தொழிற்பிரிவினர் முன்னேற்றமான போக்கைக் காணலாம். கூட்டுத்தொழில் புரிபவர்கள் கூட்டாளிகளுடன் சுமுகமாக நடந்து கொள்வது அவசியம்.

கலைஞர்கள் புதிய சில வாய்ப்புகளைப் பெறுவார்கள். மாணவமணிகள் படிப்பில் மிகுந்த கவனம் செலுத்தி, உற்சாகமாகக் காணப்படுவர். பெண்கள் மிகவும் சாமர்த்தியமாகக் குடும்பத்தை நிர்வகிப்பீர்கள். சிலருக்கு குடியிருக்கும் வீட்டை மாற்றும் நிலை ஏற்படலாம்.

சளி, இருமல் போன்ற சிறு உடல் உபாதைகள் ஏற்பட்டு குணமாகும். அரசு வழியில் சில அனுகூலங்களை எதிர்பார்க்கலாம். தந்தையின் உடல் நலத்தில் அக்கறை தேவை.

*பரிகாரம்:* **வியாழக்கிழமைகளில் தட்சிணாமூர்த்திக்கு கொண்டைக் கடலை நைவேத்தியம் செய்து வணங்கி வாருங்கள். சகல சௌபாக்யங்களும் ஏற்படும்.**

## ரிஷபம்

**கார்த்திகை, 2,3,4 ஆம் பாதங்கள், ரோகிணி மிருகசீரிஷம் 1,2 ஆம் பாதங்கள்**

இம்மாதம் இரண்டாம் இடத்தில் சஞ்சரிக்கும் ராசிநாதன் சுக்ர பகவான் அருளால் பிரச்னைகளிலிருந்து விடுபடுவீர்கள். எனினும் வீண் வம்புகளில் தலையிடாமல் இருப்பது நல்லது.

அரசியல்வாதிகள் பொறுப்பான சில பணிகளில் ஈடுபடவேண்டியிருக்கும். அலைச்சல் கூடுமாயினும் பொறுமையாக செய்து முடித்தால் மட்டுமே நற்பெயரை பெற முடியும். வியாபாரம் திருப்திகரமாக இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டிய இடமாற்றம் அமையக்கூடும். கலைஞர்கள் முன்னேற்றம் காண்பார்கள்.

குடும்பத்தில் சில சச்சரவுகள் ஏற்பட இடமுண்டு பெண்கள் பொறுமையாய் இருப்பதன் மூலமே அமைதி ஏற்படும். சொந்தத் தொழிலில் முன்னேற்றமான போக்கைக் காணமுடியும். செலவுகள் மிகுதியாகலாம்.

தந்தை வழி உறவினரின் ஒத்துழைப்பு கிட்டும். புனிதப் பணிகளில் ஈடுபாடு கூடும். வீடு, பூமி போன்ற பிரச்னைகளில் சிக்கல் ஏற்பட்டு நிவர்த்தியாகும்.

*பரிகாரம்:* **தினமும் முருகப் பெருமானை வழிபட்டு வருவதுடன் குலதெய்வத்தையும் வணங்குங்கள். உங்கள் துயரங்கள் குறையும். நற்பலன்கள் மேலோங்கும்.**

## மிதுனம்

**மிருகசீரிஷம் 3,4ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3ஆம் பாதங்கள்**

இந்த மாதம், மாத ஆரம்பத்தில் ஜென்ம ராசியில் சஞ்சரிக்கும் சுக்ர னால் சில நல்ல திருப்பங்கள் உண்டு. முக்கிய விஷயங்களில் நீங்களே நேரடி யாக ஈடுபடுவதன் மூலம் சங்கடங்களைத் தவிர்க்கலாம். சொந்தத் தொழில் செய் பவர்கள் ஓரளவு தேக்க நிலையைச் சந்திக்க நேரும். புதிய முயற்சி எதிலும் கவனம் செலுத்த முயலாதீர்கள். அரசியல்வாதிகள் பரபரப்பாக இயங்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். பெண்கள் ஆபரணங்களை வாங்கி மகிழ்வர். உத்தியோகஸ் தர்கள் இடமாற்றம், பதவி உயர்வு போன்றவற்றை பெறும் முயற்சியில் ஈடுபடலாம். விரைவில் பலன் கிடைக்கக் கூடும்

மனைவி வழி உறவினர்களின் ஒத்துழைப்பு, உங்கள் கூடுதல் செலவுகளைச் சரிகட்ட உதவியா யிருக்கும். தொழிற்பிரிவினர் போட்டி களை எதிர்கொண்டு வெற்றி காண்பர். மாணவமணிகள் பாடங்களில் கவனம் செலுத்துவது அவசியம். குடும்ப பிரச்னை களில் வேற்று மனிதர்களை அனுமதிக் காதீர்கள். வாகனங்களை ஓட்டும்போதும் இயந்திரங்களைக் கையாளும்போதும் கவனம் தேவை.

*பரிகாரம்:* **சனிக்கிழமைகளில் ஆஞ்சநேயரை வழிபட்டு வர, வாழ்வில் வளம் பெருகும்.**

## கடகம்

**புனர்பூசம் 4ஆம் பாதம், பூசம், ஆயில்யம்**

இந்த மாதம் உங்களுக்கு விரய ஸ்தானத்தில் சஞ்சரிக்கும் சுக்ர பகவான் படபடப்பை உண்டு செய்ய வாய்ப்பு உண்டு. கவ-னமாக இருந்தால் தொழிற் பிரிவினர் வளர்ச்சி நிலை எட்டலாம். உத்தி யோகஸ்தர்கள், பணிகளில் மிக வும் அக்கறையுடன் ஈடுபட வேண்டும். உணவகம், சிற்றுண்டிச்சாலைகளை நடத்துபவர்கள் ஆதாய மடைய இடமுண்டு. பால், வெண்ணெய் போன்ற திரவப்பொருள் வியா பாரம் திருப்தி தரும்.

பத்திரிகை, எழுத்து போன்ற துறையினர் மகிழ்ச்சியடைவார்கள். கலைஞர்கள் புதிய வாய்ப்புகளைப் பெற்று மகிழக் கூடும். மாணவமணிகளின் முன்னேற்றத்தில் தடை-எதுவும் இராது.

பெண்கள் ஆடம்பர பொருள்களை வாங்கு வதில் ஆர்வம் காட்டா மல் இருப்பது நல்லது. வீடு, வாகன யோகம் சில ருக்கு உண்டு. தெய்விகச் சிந்தனைகள் எழக்கூடும் என்பதால் ஆலய தரிசனம் கண்டு வர ஒரு சுற்றுப்பயணத்தை மேற்கொள்வீர்கள். பயணங்களின் போது எச்சரிக்கை தேவை. உடல் நலத் திலும், கவனம் செலுத்துவது அவசியம்.

*பரிகாரம்:* **திங்கட்கிழமைதோறும், மகா லக்ஷ்மியை வழிபடுவதுடன் பெருமாள் கோயிலுக்குச் சென்று கருட பகவானை தரிசித்து வரவும்.**

## கன்னி

## சிம்மம்

மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம்

இந்த மாதம் ஜீவன ஸ்தானத்தில் சஞ்சரிக்கும் புதனாலும், லாப ஸ்தானத்தில் சஞ்சரிக்கும் சுக்ரனாலும் அநேக திருப்பங்கள் உண்டு. உத்தியோகஸ்தர்கள் அலுவலக விஷயங்களில் திருப்திகரமான போக்கை எதிர்பார்க்க இயலாது. மாணவ மணிகளின் போக்கில் முன்னேற்றம் காணப்படும்.

வியாபாரம் லாபகரமாகவே இருந்து வரும் என்றாலும் உணவுப் பொருள்களை அளவுக்கு மேல் கொள்முதல் செய்யாமலிருப்பது நல்லது. அரசியல்வாதிகள் பொறுப்பானதும் சிரமமானதுமான சில பணிகளில் ஈடுபடுவார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்களுக்கு கூட்டாளிகளிடம் மனக் கசப்பு நேரலாம். பக்குவமாகச் சமாளிப்பது அவசியம். கலைஞர்கள் சில புதிய வாய்ப்புகளைப் பெறக்கூடும். குடும்பத்தில் சிறு சச்சரவுகள் ஏற்பட இடமுண்டு. என்றாலும் பெண்கள் சாமர்த்தியமாகச் சமாளித்து விடுவார்கள். நீரிழிவு, ரத்த அழுத்தம் போன்றவற்றால் அவதிப்படுபவர்கள் தூரப் பயணத்தைத் தள்ளி வைப்பது அவசியம். அரசு வழியில் அனுகூலங்கள் அமையும். புதியவர்களின் அறிமுகமும் அதன் மூலம் ஒத்தாசைகளும் கிடைக்கக்கூடும். மகான்களின் தரிசனம், ஆசி ஆகியன கிட்டும்.

*பரிகாரம்:* தினமும் காலையில் சூரிய பகவானை வணங்குவதுடன், 'ஆதித்ய ஹ்ருதயம்' படித்து வந்தால் பெரும் முன்னேற்றங்கள் உண்டாகும்.

**உத்திரம் 2,3,4 ஆம் பாதங்கள் அஸ்தம், சித்திரை 1,2ஆம் பாதங்கள்**

இந்த மாதம் ராசிநாதன் புதன் சூரியனுடன் சேர்ந்து ஒன்பதாம் இடத்தில் சஞ்சரிப்பதால் எதிர்பாராத வகையில் சில நன்மைகளை அடையலாம். வியாபாரம் நல்ல முறையில் நடைபெற்று வரும். நடனம், பின்னணி இசை ஆகிய துறைகளைச் சேர்ந்த பெண் கலைஞர்களுக்கு கூடுதல் வாய்ப்புகள் கிடைக்க இடமுண்டு. உத்தியோகஸ்தர்கள் இடமாற்றம், பதவி உயர்வு, போன்றவற்றை எதிர்பார்க்கலாம். தொழிற்பிரிவினர் முன்னேற்றத்தைக் காணமுடியும்.

மாணவர்கள் தீய நட்பை விலக்கி விடுவது அவசியம். குடும்பத்தில் குதூகலத்துக்குக் குறைவிராது. திருமண வயதை எட்டிய சில பெண்களுக்குத் திடீர் திருமண யோகம் வாய்க்கும். எழுத்து, பத்திரிகைத் துறையினர் மகிழ்ச்சியடைய இடமுண்டு. புத்திர வழியில் மருத்துவச் செலவு நேரலாம். வயிற்று வலி சிலருக்கு ஏற்பட்டு நீங்கும். திடீர் தனவரவு ஏற்படலாம். பிற மொழி பேசும் ஒருவரின் அறிமுகமும், ஆதரவும் கிட்டும்.

*பரிகாரம்:* தினமும் நவக்கிரக சன்னிதியை வலம் வந்து நவக்கிரகங்களை வழிபட்டு வாருங்கள். செழிப்பான சூழ்நிலை அமையும்.

## துலாம்

### சித்திரை 3,4 ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 ஆம் பாதங்கள்

இந்த மாதம் ராசிநாதன் சுக்ரன் பாக்யஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வதால் உத்தியோகஸ்தர்களுக்கு சக பணியாளர்களின் ஒத்துழைப்பு நல்ல முறையில் அமைந்திருக்கும். ஆனால், உயர் அதிகாரிகளின் நன்மதிப்பைப் பெறுவது கடினமாக இருக்கக்கூடும்.

தொழிற் பிரிவினர் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெற்றாலும் தொழிலை விரிவுபடுத்தும் திட்டத்தை இப்போது மேற்கொள்ளாதீர்கள்.

மாணவ மணிகள் படிப்பில் கூடுதலான அக்கறை செலுத்தி வருவார்கள். மருத்துவம், கெமிக்கல் போன்ற பொருள்களுடன் தொடர்புடைய பணியாளர்கள் சிறப்பான முன்னேற்றத்தைக் காண்பார்கள். கலைஞர்கள் உற்சாகமடையும் வகையில் புதிய வாய்ப்புகள் அமையும். பணப்புழக்கம் திருப்திகரமான முறையில் இருந்து வரும். சில முயற்சிகளில் தடங்கல் ஏற்படுமாயினும் தொடர்ந்து முயற்சித்தால் வெற்றி கிட்டும். அரசியல்வாதிகளின் செல்வாக்கு, மரியாதைகள் கூடும். சிறு உடல் உபாதைகள் நேரலாம். பெண்களுக்கு திடீர் திருமணயோகம் கைகூடலாம். வாகன வாய்ப்பு சிலருக்கு அமையக்கூடும். பூமி, மனை போன்ற அசையாச் சொத்துக்கள் அமையவும் இடமுண்டு.

*பரிகாரம்:* புதன்கிழமை தோறும் விஷ்ணு பகவானை வழிபட்டு வாருங்கள். வாழ்வில் சகல முன்னேற்றங்களும் உண்டாகும்

## விருச்சிகம்

### விசாகம் 4ஆம் பாதம், அனுஷம், கேட்டை

இந்த மாதம் பத்தாம் இடத்தில் சஞ்சாரம் செய்யும் ராசிநாதன் செவ்வாயால் உங்கள் செயல்வேகம் கூடுதலாகும். வியாதிகளின் பிடியிலிருந்து விடுபட்டு நிம்மதிப் பெருமூச்சு விடுவீர்கள். உத்தியோகஸ்தர்கள் இடமாற்றம், பதவி உயர்வு பெற்று உற்சாகம் கொள்வீர்கள். மாணவ மணிகளுக்கு கல்வியில் ஆர்வம் தோன்றும்.

வியாபாரம் நல்ல முறையிலேயே நடைபெற்று வரும். இரும்புப் பொருள்கள், உதிரிபாகங்கள் போன்றவற்றின் மூலம் கூடுதல் லாபம் பெற வழியுண்டு. கலைஞர்களுக்கு புதிய வாய்ப்புகள் அமைந்து, பொருளாதார வளர்ச்சிக்கும் வழிவகுக்கும்.

குடும்பத்தில் சச்சரவுகள் தோன்ற வழியில்லை என்றாலும் தாய் மாமன் வழியில் சில சங்கடங்கள் உண்டாக இடமுண்டு. திட்டமிட்டபடி பயணம் மேற்கொண்டு மகிழ்ச்சியடைவீர்கள். புத்திர வழியில் கவனம் தேவைப்படலாம். வேலைக்குப் போகும் பெண்கள் அதிக வேலைகளைத் தவிர்க்க வேண்டியது அவசியம். பெற்றோரின் உடல்நலத்தில் கவனம் செலுத்த வேண்டும்.

*பரிகாரம்:* நரஸிம்ம ஸ்வாமியையும், வெங்கடேசப் பெருமாளையும் வணங்கிவாருங்கள். சுபிட்சம் உண்டாகும்.

## தனுசு

மூலம்,
பூராடம் உத்திராடம் 1
ஆம் பாதம்

இந்த மாதம் சப்தம கேந்திரத்தில் சஞ்சரிக்கும் சுக்ரனால் அன்னிய மொழி பேசக்கூடியவர்களால் சிறு தொல்லைகள் ஏற்பட வாய்ப்புண்டு. மேலும் நன்மையும், தீமையும் கலந்து நடக்கும். எதிலும் நிதானப் போக்கைக் கடைப்பிடிப்பதன் மூலம் பெரும்பாலான சிக்கல்களைத் தவிர்த்து விடலாம். சக கலைஞர்களிடமும் சுமுகமாக நடந்து கொள்வது நல்லது.

உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம், பதவி உயர்வு போன்றவை இப்போது அமைய வாய்ப்பில்லை. பெண்களுக்கு ஆடை, ஆபரணச் சேர்க்கை உண்டு.

அரசியல்வாதிகள் மிகவும் பரபரப்பாக இயங்க வேண்டியிருக்கும். கேளிக்கைளில் ஈடுபட மனம் விரும்பும். செல்வந்தர்கள் ஆதரவு கிட்டும். தீய பழக்கம் உள்ளவர்களின் நட்பை விலக்கி விடுவது நல்லது. பணப்புழக்கத்தில் சிறு தேக்கநிலை ஏற்படலாம். பிள்ளைக்கு மருத்துவச் செலவு செய்ய நேரும். காணாமற் போன ஒரு பொருள் திரும்பக் கிடைத்து மகிழ்வீர்கள். சகோதர வழியில் ஒத்துழைப்பை எதிர்பார்க்கலாம்.

*பரிகாரம்:* **தினமும் காலையில் சூரிய பகவானை வணங்கி வரு-வதுடன் திங்கட்கிழமைகளில் சிவபெருமானை வணங்கி வருவதும், உங்கள் வாழ்வில் செழிப்பை உண்டாக்கும்.**

## மகரம்

### உத்திராடம் 2,3,4 ஆம் பாதங்கள் திருவோணம் அவிட்டம் 1,2ஆம் பாதங்கள்

இந்த மாதம் சூரிய - புத பகவான் ஐந்தாம் இடத்தில் சஞ்சாரம் செய்வதால் நன்மைகளும், தீமைகளும் மாறி மாறி வரும். எதிர்பார்த்திருந்த சில அனுகூலங்கள் தள்ளிப்போகும். தொழிற்பிரிவினர் வேலைப்பளு கூடுதலாக உணரக்கூடும். வருமானம் திருப்தி தரும் வகையில் இல்லை.

சக தொழிலாளர்களுக்கிடையே சங்கடங்களும் உருவாகக்கூடும். கலைஞர்கள் யாரையும் நம்பாமல் நேரடியாக முயற்சி செய்வதன் மூலம் சில புதிய வாய்ப்புகளைப் பெற்று மகிழ முடியும். வியாபாரம் சிறப்பாக இருந்து வரும். மாணவமணிகள் உற்சாகமாகக் காணப்படுவார்கள்.

உறவினர் ஒத்துழைப்பு உற்சாகமூட்டும் வகையில் அமையும். பிறமொழி பேசுவோரால் அனுகூலம் உண்டு. பெண்களுக்கு மறைமுகச் சேமிப்புகள் கூடும்.

சிலருக்கு கைகால் அசதி, மூட்டு வலி, உண்டாகும். சிலருக்குத் திடீர் தனவரவு உண்டாக இடமுண்டு. பிரிந்து சென்றவர்கள் எதிர்பாராமல் திரும்பி வந்து மகிழ்ச்சியூட்டுவார்கள். குடும்பத்துடன் ஒரு பயணத்தை மேற்கொண்டு சென்றுவருவீர்கள்.

**பரிகாரம்: செவ்வாய்க்கிழமைகளில் துர்கா தேவிக்குத் தீபமேற்றி வழிபட்டு வாருங்கள்.**

## கும்பம்

அவிட்டம்
3,4ஆம் பாதங்கள்
சதயம்

இந்த மாதம் பஞ்சம ஸ்தானத்தில் சுக்ரன் சஞ்சாரம் செய்வதால் அநேக நல்ல பலன்கள் உண்டாகும். ஓரிரு சிறு இடையூறுகளும் ஏற்பட வாய்ப்புண்டு. உங்களுக்கு வரவேண்டிய தொகைகள் குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேராததால் வருந்துவீர்கள்.

முக்கியமான நண்பர் ஒருவர் உங்களுக்கு உதவிக்கரம் நீட்டுவார். உத்தியோகத்தில் உள்ளவர்கள் அலுவலகப் பணிகளில் முழுமையான கவனத்தைச் செலுத்துவதன் மூலம் உயர் அதிகாரிகளின் நன்மதிப்பைப் பெறலாம்.

தொழிற் பிரிவினர் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெற்று மகிழ்வதில் தடையிராது. அரசு வழியில் உதவிகள் கிடைப்பதில் தாமதமாகும். பெண்கள் குடும்பத்தில் ஏற்படக்கூடிய சிறு சச்சரவுகளைப் பக்குவமாகச் சமாளித்து நற்பெயர் பெறுவார்கள். யாருக்கும் பணத்தைக் கடன் கொடுப்பதோ எவ்விதமான வாக்குறுதியையும் தருவதோ வேண்டாம். வேலைக்குப் போகும் பெண்கள், உயர் அதிகாரிகளிடம் பணிவாக நடந்து கொள்வது அவசியம். தெய்விக ஈடுபாடு கூடும். பயணங்களின் போது எச்சரிக்கை தேவை. கோபத்தைக் குறைத்துக் கொள்வது நல்லது.

*பரிகாரம்:* விஷ்ணுபகவானுக்கு துளசி மாலை அணிவித்து வணங்குங்க. வாழ்வில் சகல நன்மைகளும் உண்டாகும்.

## மீனம்

பூரட்டாதி 4ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி

இந்த மாதம் ஆறாம் இடத்தில் சஞ்சாரம் செய்யும் செவ்வாய், விரோதிகள் பிரச்னைகளை சற்று சமாளிக்க வைப்பார். பழைய கடன்கள் வசூலாகும். ஆயினும் பதற்றம் சிறிதுமின்றி திட்டமிட்டு நிதானமாகச் செயல்பட வேண்டியது முக்கியம். தொழிற் பிரிவினருக்கு வருமானம் பெருகும்.

மாணவ மணிகளின் படிப்பார்வம் நாளுக்கு நாள் முன்னேற்றம் காணும். கலைஞர்கள் புதிய வாய்ப்புகளைப் பெற்று பொருளாதார முன்னேற்றம் காண்பார்கள். உத்தியோகஸ்தர்களின் விருப்பங்கள் யாவும் நிறைவேறும். பெண்கள், குடும்ப நிர்வாகத்தைச் சிறப்பாக நடத்தி மகிழ்ச்சியடையச் செய்வார்கள். பயணத்தால் பயனடைவீர்கள்.

அதிர்ஷ்ட வாய்ப்புகளை எதிர்பார்த்து பணம் செலவு செய்ய வேண்டாம். சகோதர வழியில் நன்மைகளை எதிர்பார்க்கலாம். ஆலய தரிசனம் மூலம் மன அமைதி பெறுவீர்கள். அலைச்சலைக் குறைத்து ஓரளவு ஓய் வெடுப்பது நல்லது.

*பரிகாரம்:* தினமும் காலையில் விநாயகப் பெருமானுக்கு அருகம்புல் சாத்தி வணங்கி வந்தால் வளமான வாழ்வு கிட்டும்.

# இவை எல்லாமே



முறுக்கு வத்தல் போடும் போது, நானூறு கிராம் பச்சரிசி, நூறு கிராம் ஜவ்வரிசி என கலந்து, மிஷினில் நைசாக அரைத்துக்கொள்ளவும். மாவு கிளறும்போது, பச்சை மிளகாய் அரைத்து விடுவதற்குப் பதில் மிளகாய்ப் பொடி சேர்த்துக் கிளறி, வத்தல் (பெரிய) நாழியில் நீளமாக இட வேண்டும். பச்சை மிளகாய்ச் சேர்ப்பதைவிட,சிவப்பு மிளகாய்ச் சேர்த்தால் ருசி கூடுதலாக இருக்கும்.

- எல். ஸ்ரீவிஜயா வாசுதேவன்,
சென்னை

சர்க்கரை நோய் உள்ளவர்கள், கால்களைப் பராமரிப்பதில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். கால் நகங்களை வெட்டும்போது, வளைவாக வெட்டாமல் நேராக வெட்ட வேண்டும். இதனால், கால் நகங்களின் இடுக்குகளில், அழுக்கு சேராமல் இருப்பதோடு புண் ஏற்படாமலும் இருக்கும்.

- சுபா, தஞ்சை

# ஆஹா 50 தான்!

உளுந்து வடை செய்யும்போது உளுந்தை தண்ணீரில் ஐந்து நிமிடம் ஊற வைத்து, தண்ணீர் இல்லாமல் வடிகட்டி பதினைந்து நிமிடங்கள் உலர விடவும். ஒன்றரை மணி நேரம் கழித்து, மிளகு, உப்பு, பச்சை மிளகாய்ச் சேர்த்து, கொஞ்சம் கொஞ்சமாகத் தண்ணீர் தெளித்து பந்துபோல் அரைத்தெடுத்தெடுக்கவும். இதில் வடை தட்டினால் எண்ணெய் குடிக்காது. வடையும் சுவையாக இருக்கும்.

- ரமாதேவி, சென்னை

குழந்தைகளுக்கு வெள்ளை வெங்காயத்தை நெய்யில் வதக்கி, பனங்கற்கண்டு சேர்த்துக் கொடுக்கவும். குழந்தைகள் ஆரோக்கியமாக வளருவார்கள்.

- எஸ்.விஜயா, திருச்சி

நெல்லிக்காயை இடித்து சாறு எடுத்து அதே அளவு நல்லெண்ணெய் கலக்கவும். இதைத் தினமும் தலையில் தடவி வந்தால் இளநரை மறையும்.

- ஆர்.மீனாட்சி, திருநெல்வேலி

வெற்றிலையுடன் சிறிது சுக்கு, மிளகு, கிராம்பு சேர்த்து, கஷாயம் வைத்துக் குடித்தால் கை, கால் மூட்டுவலி குணமாகும். சிக்குன் குனியா வந்து அவதிப்படுபவர்களுக்கும் நல்ல நிவாரணம்.

- வேணி, பம்மல்

வெண்ணெய், நெய், போன்றவற்றைக் கொழுப்பு சேரும் என்று ஒதுக்கக்கூடாது. அளவோடு சேர்த்துக்கொண்டால் உடல் நலமாக, ஆரோக்கியமாக இருக்கும்.

- கே.எஸ். கிருஷ்ணவேணி, சென்னை



# சொகுசு + தவறான

**எந்த வயதிலும் 'சிக்'கென்ற அழகான தோற்றத்தையே பெண்கள் விரும்புவார்கள். இன்று பெரும்பாலான பெண்கள் உடல் பருமன் ஆகிவிட்டதே என்று வருந்துகிறார்கள். இந்த யுகம் தந்த சொகுசு வாழ்க்கையும், தவறான உணவுப் பழக்கமுமே இப்பிரச்னைக்குக் காரணம்.**

''உடல் எடை கூடிவிட்டதே, நோய் வந்துவிட்டதே என்று வருந்தாதே. அள்ள அள்ளக் குறையாத இளமை ஊற்று உன்னிடம் உள்ளது. அது தான் உன் மனம். அந்த ஊற்றை நீ அறிவா யானால், உடல் பருமனை மட்டுமல்ல எதையும் சாதிக்கலாம்'' என்கிறார், புகழ்பெற்ற நடிகை சோபியா லாரென்.

உடல் பருமன், ஒரு காஸ்மெடிக் ஆரோக்கிய மற்றும் மனப்பிரச்னை என்றாலும், அவர்களுக்கு மகிழ்வு தரும் செய்திகளைத் தந்திருக்கிறேன்!

''தூக்கம், மிக அழகான பருமன் குறைப்பான்'' என்கிறார் உடல் பருமன் வாய்ந்தோர் சங்கத் தலைவர் டாக்டர் லோ.அரோன்.

ஆர்க்கிவ்ஸ், அகில உலக மருத்துவ சர்வே 5440 இளைஞர்களைக் கொண்டு ஆய்வு நடத்தின. அவர்களில் 58% அதிகப் பருமனும், 32% மிக அதிகப் பருமனும் வாய்ந்தவர்கள். அவர்கள் கொலஸ்ட்ரால், ரத்த அழுத்தம், ரத்த சர்க்கரை பிரச்னைகளின்றி ஆரோக்கியமாக இருந்தனராம். எனவே ''குண்டாக இருந்தாலும் 'ஃபிட்' ஆக இருங்க. அதற்கு தினசரி முப்பது நிமிட உடற் பயிற்சி தேவை'' என்கிறார்கள்.

**தூக்கம் மிக அழகான பருமன் குறைப்பான்!**

முற்காலத்தில் மன உளைச்சல் என்பது போர், பஞ்சம், காலநிலை, மாறுபாடு காரணமாக மக்களுக்கு ஏற்பட்டது. அவர்கள் மூலையில் முடங்காமல் பிரச்னையை தீர்க்க முன்னைவிட வேக மாக இயங்கினார்கள்.

இன்று மன உளைச்சல் உள்ளவர்கள் அதிக

உணவை உண்பதோடு, மூலையில் முடங்கி, அவர்களது இயக்கமும் நிற்கிறது. ''மனத்தை திசை திருப்புவதே இதற்கு சரியான தீர்வு'' என்கின்றனர் உளவியல் நிபு ணர்கள்.

ஆண்களைவிட பெண்களின் உடல் விரைவில் கொழுப்பை சேகரிக்கும் தன்மையுடையது. எஞ்சிய பணம் வங்கியில் டிபாசிட் ஆவது போல எஞ்சிய கலோரிகள் கொழுப்பாக கைகள், தொடைகள், பின்புறம் போன்ற இடங்களில் சேர்கிறது.

ஆண்களை விட பெண்களின் உடல். விரைவில் கொழுப்பை சேகரிக்கும் தன்மை உடையது!

# உணவு=?



அமெரிக்கர்கள் உடல் இளைக்கவும் அது சம்பந்தமான பொருள்கள் வாங்கவும் 22 பில்லியன் டாலர்கள் செலவு செய்கின்றனர். நம் நாட்டிலும் நகரங்களில் ஜிம், உடற்பயிற்சி, யோகா பயிற்சி நிலையங்கள் பெருகியுள்ளன.

''உடல் பருமனுக்குத் தீர்வு, குறைந்த கலோரி உணவும், உடற்பயிற்சியுமே'' என்கிறார் அமெரிக்க உடல் பருமன் கட்டுப்பாட்டு அமைப்பைத் தோற்றுவித்த, ரீனா விங்கவே.

ஆராய்ச்சியாளர்கள், எந்த வேலையும் செய்யாத பருமனான 24 நபர்களைத் தேர்ந்தெடுத்து, உணவு அறிவுரை தந்து, வாரத்தில் மூன்று நாட்கள் நடைப் பயிற்சி செய்ய வைத்தார்கள். அவர்களது எடை 8% குறைந்தது.

கீரை பிடிக்காதா... சாப்பிடுங்க! கேக் பிடிக்குமா? சாப்பிடாதீங்க...

''பயிற்சிகளை மெதுவாக ஆரம்பித்து வேகம் கூட்ட வேண்டும். உடல் அற்புதமான, மாற்றம் ஏற்றுக் கொள்ளும் அமைப்புடையது. ஆனால், அதிர்ச்சியடைய விரும்பாது. யாழ் இசைக் கருவியின் நரம்புகளை மிக இறுக்கினாலோ, மிக தளர்த்தினாலோ இசை வராது. அதுபோல தான் உடலும்!

எது பிடிக்குமோ அதைத் தவிர்த்து, எது பிடிக்காதோ அதை உண்டால் நல்லது...

உங்களுக்குக் கீரை பிடிக்காதா? சாப்பிடுங்க!

உங்களுக்குக் கேக் பிடிக்குமா? சாப்பிடாதீங்க!

'பசி... புசி...' மந்திரம்... அதுவும் மெதுவாக! 'ஜங்க்' உணவைத் தவிர்த்து பழங்கள், காய்கறிகளால் வயிற்றை நிரப்ப வேண்டும். இயற்கை மருத்துவர்கள், நாற்பது சதவிகிதம் உணவு அறுபது சதவிகிதம் காய்கறி, பழங்கள், கீரைகள் உண்ணச் சொல்வதோடு, உடற்பயிற்சியினையும் செய்யச் சொல்கிறார் கள். காலை உணவை வெறும் இயற்கை உணவாக மாற்றிக் கொண்டால் உடல் பருமன் குறையும்.

ரொட்டி, அரிசி உணவு, உருளைக் கிழங்கு போன்றவை உடலைப் பருமனாக்கும் உணவுகள் என்பது தவறான கருத்து. அவை ஆரோக்கியமானவை எனப்படுகிறது. பேக்கரி உணவுகள், பொரிக்கப்பட்ட உணவு, கொழுப்பு உணவு களைத் தவிர்க்க வேண் டும். அவை உடலைப் பருமனாக்குபவை!

- டி.பிரபாவதி,
கோயமுத்தூர்

# வண்ணக்



தாரா மணிவண்ணன்,
கோயமுத்தூர்



19 புள்ளி - 1ல் நிறுத்தவும்
(நேர் புள்ளி)

குணசுந்தரி ஏகாம்பரம்,
பெங்களூரு



21 புள்ளி - 1 ல் நிறுத்தவும்
(15 வது வரிசை மட்டும்
2 முறை வைக்கவும்.)
(நேர் புள்ளி)

பி. பார்வதி, நாகர்கோயில்

# ...கோலங்கள்!



13 புள்ளி - 7 ல் நிறுத்தவும்
(இடைப்புள்ளி)

கே. அனுசுயா, திருச்சி



17 புள்ளி - 3 வரிசை
3 ல் நிறுத்தவும் (நேர் புள்ளி)

எஸ். ராமேஷ்வரி,
அருப்புக்கோட்டை



17 புள்ளி - 8 ல் நிறுத்தவும்
(இடைப்புள்ளி)

டி.பி.ஹேமா, கிருஷ்ணகிரி



# குக்கரி க்வீன்!

குக்கரி தர்பாரில் கலந்துக் கொள்ள சமையல் ராணிகளை அழைக்கிறோம். ஒரிஜினல் சமையல் குறிப்புகளைத் தெளிவாக எழுதி, கீழே உள்ள கூப்பனையும் நிரப்பி அனுப்புங்க. தேர்ந்தெடுக்கப்படும் ஐந்து ரெஸிபிகளுக்கு தலா ரூ. 300/- பரிசு!




குக்கரி க்வீன் சமையல் போட்டி (ஜூன்)

**எலெக்ட்ரிக் குக்கர் சமையல்**

பெயர்:.......................................................................

முகவரி:.......................................................................

.......................................................................

.......................................................................

கடைசித் தேதி: ***25.06.2010***

இந்த இதழில் 'ஆஹா 50!' என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ள டிப்ஸ்களைப் படியுங்கள். மிகச் சிறந்த ஒரே ஒரு குறிப்பைத் தேர்ந்தெடுத்து எழுதி அனுப்புங்கள். உங்கள் தேர்வும், ஆசிரியர் குழுவின் தேர்வும் பொருந்தினால் குலுக்கல் முறையில் ரூ.150/- பரிசு! தேர்ந்தெடுப்பவருக்கு மட்டுமல்ல. அந்தக் குறிப்பை எழுதியவருக்கும் ரூ.150/- பரிசு! 'ஜூன் - ஆஹா பரிசு' என்று மறக்காமல் குறிப்பிட்டு பக்க எண், வாசகி பெயருடன் அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள்.

கடைசித் தேதி: *15.06.2010*




## அடிச்சாங்க பரிசு!

ஆஹா பரிசு மே (2010) போட்டியில் ''ஒவ்வொரு மொபைலுக்கும் IMEI நம்பர் உண்டு. அதனைக் குறித்து வைத்துக் கொண்டால், மொபைல் காணாமல் போகும்போது அந்த நம்பரைப் பயன்படுத்தி கண்டுபிடிக்கலாம். மொபைலில் #06# என்று டைப் செய்தால் நம்பர் தெரிந்துவிடும்'' என்ற குறிப்பை எழுதி ரூ.150 பரிசு பெறுகிறார் சுபா, தஞ்சை.

அதே டிப்ஸை தேர்வு செய்த பல வாசகியரில் குலுக்கல் முறையில் ரூ.150 பரிசு பெறுகிறார் ஆர். பொன்னி, சென்னை.





## மங்கையர் மலரின்

# திருமண மலர்

### திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ.500/-
30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ.15/-
வண்ணத்தில் ஹைலைட் செய்ய கூடுதல் கட்டணம் ரூ.100/-

**இதனுடன் சேர்த்து இணையதளத்திலும் (www.mangayarmalaronline.com) வெளியிட கூடுதல் கட்டணம் ரூ.100/- மட்டுமே!**

1" x1" அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ.800/-
(அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ.15/-

**வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க Profile விளம்பரம் ரூ.2500/-**

வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை காசோலையாக, வெளியூர் டிமாண்ட் டிராஃப்டாகவோ, மங்கையர் மலர் என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

**மங்கையர் மலரின் திருமண மலர்**

47-ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-600 032.
தொலைபேசி : 4343 8866   Fax : 044 - 4343 8899
email : marketing@kalkiweekly.com

குரு கிருபா




உ

# அசத்தலான உயர்தர திருமண சமையலுக்கு




# சரஸ்வதி கேட்டரிங்

எம் பொன்னு கல்யாணத்தை
சரஸ்வதி கேட்டரிங் சிறப்பா நடத்திக்
கொடுத்த மாதிரி உம்பொன்னு
கல்யாணத்தையும் சீரும் சிறப்புமா
நடத்திக் கொடுத்ததை இப்ப
அனுபவபூர்வமாக உணர்ந்து சொல்றத
கேட்கவே ரொம்ப சந்தோஷமா இருக்கு.
கல்யாணம் பண்ணனும் நினைக்கறவா
எல்லாருமே சரஸ்வதி கேட்டரிங்
புக் பண்ணினா அவாளும் இதை
அனுபவபூர்வமா உணரலாம்.



என் பொன்னு கல்யாணத்தை எப்படி நல்லபடியா நடத்தப் போறோம்னு தவிச்சுகிட்டு இருந்தேன். மாமி நீங்க சொன்னமாதிரி

**சரஸ்வதி கேட்டரிங்**

**சுப்பிரமணி ஐயர்** போய் பார்த்தேன். எம் பொன்னு கல்யாணத்தை ஜாம் ஜாம்னு சீரும் சிறப்புமா நடத்தி கொடுத்தா. கோலத்துல இருந்து கட்டுசாதம் வரைக்கும், சீர்பட்சணங்கள்னு எல்லாமே பொறுப்பா அவா ஆத்து கல்யாணம் மாதிரி விமரிசையா செஞ்சு கொடுத்தா. நாங்களும் மாப்பிள்ளை ஆத்துக்கார மாதிரி கல்யாணத்தில டென்ஷன் இல்லாம நிம்மதியா இருந்தோம். வந்தவா எல்லாரும் ரொம்ப பாராட்டினாங்க.

இனி கல்யாணம்னாலே

**சரஸ்வதி கேட்டரிங்தான்**

## SREE SAI DHARSHINI MAHAL

New Kalyana Mandapam fully Airconditioned

Booking open

**Hall - 300 Dining - 100**

91A, Abu Sali St, Saligramam, Ch-93.

**044-23765490, 9840054900**



கல்யாணமா எங்களை கூப்பிடுங்க
நீங்களே பிரமிச்சுபோவீங்க

## SARASWATHI CATERING SERVICE

Samayal Pramadam

## *Insuvai Vendan* G. Subramani Iyer

No.65, (old no. 30), Subramanian St., West Mambalam, Chennai - 33.
Off: 24742433 / 23719535 Cell: 98400 54900 Tele Fax: 24742433
Branch off: Coimbatore Ph: (0422) 2343710
E- Mail: insuvaivendhan@yahoo.com www.saraswathicateringservice.com

**We undertake Marriage Catering all over India**

கவிதை



# என் சமையலறையில்...

காலை இரண்டுமணி நேரம்
சமையலறையே என் கலைக்கூடம்...
எத்தனை கலைகள் என்னாலே,
எடுக்கிறது இங்கே அவதாரம்!
காய்கறிகள் நறுக்கையில் இசை,
கொதி உலையில் புகை ஓவியம்,
குக்கரின் விசில் பாட்டு,
மெட்டுப் போடும் குழாய் நீர்ச்சொட்டு,
பாத்திரங்கள் செய்யும் கச்சேரி,
சிலையாக வெட்டிய காய்கறி,
கொதிக்கும் சாம்பார் சொல்லும் கதை
நீர்வற்றும் பொரியலின் கவிதை மழை
எண்ணெயில் நீரின் வெடிக்கும் நடிப்பு
அடுப்பு மேடையில் கரண்டிகளின் ஆடல்
சிந்திய நீரில் சிரிக்கும் சித்திரம்
வண்ணமும் தீட்டியாயின அத்தனை உணவுக்கும்
இத்தனையும் செய்வதால் என்கரம்
நானே மகாகலைஞன் அவதாரம்
சமையலறையே என் கலைக்கூடம்!

- கா.குளோரி விஜயசெல்வி
சென்னை

# மணமகள் தேவை



**H.VENKATESWARAN** M.A ◆ Palghat Iyer, Brahacharanam, Bharadwajam, Chadhayam-II, 33/173, fair, handsome, teetotaller, MA, Dip.in Computer Hardware, own business, seeks bride. Contact H.Ramanathan, 437, 8th Cross, Domlur Layout, Bangalore - 560071, Mob: 9964741991, Ph: 080-25350471.



**J.KRISHNAKUMAR** B.B.A ◆ Iyer, Vadamal, Kousikam, Kettai, August 1979, 5'10", Senior Executive, (Recruiting) with M.N.C, Bangalore, 5.50 Lacs p.a. owns house at Bangalore, suitable bride, sub-sect no bar. No other expectations, Contact: 9880912611/080-28474312. Box No. 16862

◆ Iyer, Vadamal, 32, 5.9' Gauthamam, Avittam, BE, HP(USA), S/W Eng. seeks Graduate Bride, TM 964332, CTC: 22333571, 9840663872, Box No: 16805

◆ Iyer, Vadamal, Bharadwajam, Pooram, 79 born, 6 Feet, BE, MBA, MNC Bangalore, good salary, well settled in Bangalore, seeks good looking girl from good family. Contact: 080-25283235. Box No. 16806

◆ Wanted bride for Iyer, Vadamal, D.O.B 1.9.1982, Karga, Avittam (Makaram), 163 cms, B.Com, M.B.A, MFM, employed in leading MNC, 4.5 Lacs/annum. Ph:044-23766763, 23760498. Box No. 16807

◆ Ganesh Iyer, Vadamal, Bharadwajam, Swathi 4th Padam, 1980, B.Com, 5'10", 5 Lacs P.A, seeks Graduate girl from good family background. Refer S.S.Matri I.D.58763. Contact: 080-23385818. e.mail: ksnatarajan_1948@rediffmail.com Box No. 16808

◆ Iyer, Brahacharanam, Kousikam, Revathi IV, 26/169, B.E., Software Designer, RBS, Chennai, 8.25 LPA, seeks graduate bride, Subsect no bar. (ssmatri 90372), 9962333115. Box No. 16809

◆ Vadagalai Iyengar, Kousigam, Revathy, Aug 1984, 186 cm, BE, IBM, Bangalore, Own House, seeks qualified, employed (In Bangalore or Transferable to Bangalore), Home- loving girl. Box No. 16810

◆ Iyer, Vadamal, Bharadwajam, Dec 75, Swathi, 170, CA, MNC, Chennai, 8.6 Lacs PA seeks employed/unemployed, good looking girl. Subsect Ok. Ph:044-24850025. e.mail: karthik_k@sifycorp.com Box No. 16811

◆ Iyer, Vadama, Koundinya, Uttarashada, 5'6", 29.10.1976, B.Com, (C.A Inter), working as Manager in Public Ltd.Co., seeks suitable bride. Contact: 022-25853229 (Mob# 09869 218968. Box No.16812

◆ ஐயர், வடமாள், பரணி, விஷ்ணு விருத்தி. வயது 34, M.Com, ICWA, D.Cop ஆசிரியர் பணி, இயக்குநர், 25000/- பையனுக்கு தகுந்த அதே இன மணமகள் தேவை. தாய், தந்தையர் இல்லை. சொந்த வீடு உண்டு. தொடர்புக்கு 9443027531, 9500045924. பெட்டி எண். 16813

◆ ஐயர், பிரஹசர்ணம், பாரத்வாஜம், திருவாதிரை, 29, 5.7', Diploma in Automobile Eng, மேகாலயா, Defence, ரூ.20,000/-, வேலைக்குச் செல்லும், செல்லாத குடும்பபாங்கான பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். போன்: 0452-2694146. பெட்டி எண். 16814

◆ மாத்வா கன்னட பிராமின், ஸ்ரீவத்ஸம், ரோகிணி, 56 வயது. 5.6', சிகப்பு, ஓய்வு பெற்ற கெஜட்டட் ஆபீசர் (நீதிமன்றம் மூலமாக விவாக ரத்து பெற்றவர்) சொந்த வீடு உள்ளவருக்கு 45 வயதுக்கு மேற்பட்ட பிராமண வகுப்பைச் சேர்ந்த (Any Brahmin), விதவை, விவாகரத்தான பணியிலுள்ள/பணியில்லாத/ ஓய்வு பெற்றுக் கொண்ட வாழ்க்கைத் துணை தேவை. பெட்டி எண். 16815

◆ Iyer, Vadamal, Vadulam, 170 cms, Uthiram - 2, 26.5.1969, DME, 13 years own business, Chennai, Rs.30,000/-pm, unemployed housewife wanted, No expectations, Ph: 044-24881665, 044-26586035. Box No. 16816

◆ Iyer, Astasahasram, Athreya, Rohini, B.Sc, MBA, Oct '77, Boston, U.S.A. HIB Visa, Manager, 2 lakhs, p.m, subsect no bar. Con. 98842-71315, 25518800, T.M. 1849163, ssmatri.91849/77. Box No. 16817

◆ Madhwa, Kannada, Brahmin, groom Agasthya, Mrigasersha III, 30 yrs, 5'9", SWE, MNC, Hyderabad 10LPA - வேலைக்குச் செல்லாத அல்லது விலக தயாராக உள்ள பட்டதாரி 5'3'' உயரமுள்ள மணமகள் தேவை. Simple and early marriage no expectations - Kannada knowing Telugu/Desistha Brahmins acceptable. Reply with BHP, Mob 9346916785. e.mail: rnm0008@gmail.com Box No. 16818

◆ ஐயர், வடமாள், கௌசிக கோத்திரம், கேட்டை, 37 வயது. பி.காம், தனியார் நிறுவனம், மாத வருமானம் 25,000/- நல்ல குடும்பப் பாங்கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். டிமாண்ட் ஒன்றும் இல்லை. தொடர்பு: 011-27290496, 09873-832502, 09899711849. பெட்டி எண். 16819

◆ கேரளா ஐயர், பாரத்வாஜம், பூராடம், சிவப்பு நிறம், 34, MBA (HR), Rs 7 லட்சம் ஆண்டுக்கு (package). சர்வீஸ் மேனேஜர் - TCL. படித்த மணமகள் தேவை. போன்: 0484-2357157. e.mail:nmahesh75 @yahoo.com. பெட்டி எண். 16820

◆ Iyer, Vadamal, Haritham, Mirgasirsham 4, 45/168/30K, M.Sc Phd LLM MBA, working as section Engineer Railway, Jabalpur Divn.

seeks suitable Brahmin girl clean habits. Box No. 16821

◆◆ Iyer, Brahacharanam, Shadamarshanam, Swathi, 28/178, BE, PGPM, employed Pune. seeks professionally qualified, employed girl. 9443907750, ananthu_bagya @yahoo.co.in Box No. 16822

◆ Om Sri Sairam. Iyer, Vadamal, Bharadwajam, Pooradam (4), 1982, 5.5, fair, B.Com, MBA, Officer in Bank seeks employed/unemployed girl from a good family background. Pref.Saidevotee. Contact - 044-26571442, stars - Aswini, Rohini, Thiruvadhirai, Punarpoosam, Hastham, Uthiram, Swathi, Thiruvonam, Uthiradam, Pooratadhi, Revathy can apply. Box No. 16823

◆ Iyer, Vadama, Srivatsa, Magam - 2, April 1983, 174 cm, B.Tech (Instrumentation), Senior Software Design Engineer, Visteon Technical & Services, Chennai seeks B.E, unemployed/employed bride. Contact 044-26551876, 98841 43433, 9840128535. Box No. 16824

◆ Iyer, Vadama, Gargeya Gothram, Ayilyam, 180 cm, 32 yrs, working as software engineer, seeks minimum graduate employed/unemployed from decent family. 044-22331288/9962402288. email: rkumar_vbi@yahoo.com Box No. 16825

◆ Iyer, Brahacharanam, Haritha, Punarpusam 31, 5'7", B.Tech working in IT Service Co Chennai seeks graduate girl (Sub-sect no

## திருமண மலர் - விளம்பரக் கட்டண அறிவிப்பு

திருமண மலர் விளம்பரக் கட்டணம் முதல் 30 வார்த்தைகளுக்கு ரூ.500/-
அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ.15/-
வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய ரூ.100/- கூடுதலாக அனுப்பவும்.
வண்ணப் புகைப்படத்துடன் (1" x 1") வெளியிட ரூ.800/-
இத்துடன், www.mangayarmalaronline.com என்கிற மங்கையர் மலரின் இணையதளத்திலும் சேர்த்து விளம்பரம் வெளியிட, கூடுதல் கட்டணம் ரூ. 100/-

bar) from middle class family. Ph: 24327967. Box No. 16826

◆ Vadama, Viswamitra Visagam-4, B.Com., ACA, AICWA, ACS, General Manager in leading private sector limited company in Chennai, Regional office (Transferable job), Born April 1974/183cm/1,20,000/- per month, fair, own flat, seeks Iyer Bride, subsect no bar. Contact 044-24842691, Mobile: 09444-575466. Box No. 16827

◆ மணமகாதவர், ஐயர், பிரஹசரணம், பூரம், பாரத்வாஜம், 46, 174, Ex serviceman, Private, சொந்தவீடு. ரூ.12,000/-, படித்த பெண், விதவை, குழந்தை இல்லாதவர், விவாகரத்தான வர், சம்மதம். உட்பிரிவு சம்மதம். போன்: 04424713572, 9443375021. பெட்டி எண். 16828

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், திருவாதிரை, 165 செ.மீ, மார்ச் 1986, பி.எஸ்.சி, சென்னை M.N.Cயில் மேனேஜர், சொந்த வீடு, நல்ல நிற மான பையனுக்கு படித்த, குடும்பப் பாங்கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். 9840312838. cakarun kumar@gmail.com Box No. 16829

◆ Iyer, Vadamal, Bharathwajam, Vaisakam, Thulam, 28 yrs, 6.1 feet, B.E, M.S, 4.8 laks p.a, Bangalore, seeks bride from same sect, profile id.ssmatri.com 90299. Contact: shubaab@yahoo.com Box No. 16830

◆ வடமா ஸ்ரீவத்ஸம், பூராடம், BE, US. Dallasல் வேலை பார்க்கும் 34 வயதுள்ள வரனுக்கு குடும்பப்பாங் கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம் அனுப்பவும். தமிழ் மாட்ரிமோனியல் ID.TM M713943 ஐ பார்க்கவும். 0422-2270221. Box No. 16831

◆ கார்த்திக், பி.காம், ஐயர், பிரஹ சரணம், சங்கிருதி கோத்திரம், திருவா திரை, 1980, 180 செ.மீ, H.S.B.C. BPO, ஹைதராபாத், 20,000/- மாத வருமானம், டிகிரி படித்த பெண் தேவை. போன்: 040-23830554, செல்: 9866285312. பெட்டி எண்: 16832

◆ தஞ்சாவூர் சைவப் பிள்ளை, அஸ் வினி, 36, 5'8'', எம்.ஏ, சென்னையில் தனியார் பணி, 2 Flats, கார் சொந்தம், மொத்த மாத வருமானம் 15,000/-, வேலையில் உள்ள/இல்லாத பட்ட தாரிப் பெண் தேவை. (பையனின் பெற்றோர் ஓய்வூதியம் பெறுபவர் கள்). தொடர்புக்கு 044-24934531. பெட்டி எண். 16833

◆ S. Balakrishnan, Brahmin, Mirugasheersham, Kowndinyam, 10.7.1980, 172c.m, M.Sc, B.L., Advocate Profession Nagapattinam seeks Graduate or Plus 2 qualified, unemployed girl. Age difference 4 to 5 years. Subsect no bar. No demands. Contact 04365 - 224562. Box No. 16834

◆ Mother Brahmin, Father non-brahmin, Sadayam, 1982, 5'4", clean habits, good looking, working in WIPRO seeks good looking B.E, girl employed, If girl's mother/father Brahmin, accepted. Contact 28143207/9444059707. Box No. 16835

◆ Tamil, Iyer, Boy Vadamal, Koundinyam, Poosam, 31/180, B.Sc, CCNA, 2.5L, p.a seeks Vadamal, Graduate, B.A, B.Sc, B.Com, working/not working girl. No expectations. Ph: 044-24611053. Box No. 16836

◆◆ ஐயர், பிரஹஸர்ணம், கௌண்டில்யம், ஆயில்யம், Handicap/32 years/ (M.A), தன் வேலைகளைத் தானே செய்து கொள்ளக் கூடிய, சென்னையில் சொந்த வீடுள்ள, Browsing/DTP Centre நடத்தும் வரனுக்கு தாராள மனப்பான்மையுள்ள ஐயர்/ ஐயங்கார்/சைவப் பிள்ளை/செட்டியார்/ முதலியார் பெண் தேவை. எதிர்ப்பார்ப்புகள் இல்லை. தொடர்புக்கு S. ராஜேஷ், 09901144800, B. குருமூர்த்திஸர்மா 9443651482. பெட்டி எண். 16837

◆ Iyer, Vadamal, Kousika, Thiruvathirai-I, 34, 5.5', B.A, MA,

இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண் விளம்பரதாரருக்கு பதில்கள் அனுப்ப கடைசி தேதி : 10.7.2010.. பதில்கள் அனுப்ப வேண்டிய முகவரி : பெட்டி எண் : ............ C/o மங்கையர் மலர், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

Computer Literate, Steno Govt NCT of Delhi, Non transferable job, per month 20,000/- Extra HRA. Graduate, working, willing to settle in Delhi, simple marriage. Any Brahmin, either of the parent being Brahmin, also acceptable. Ph.No. 09873442690. Box No. 16838

◆ Iyer, Vadama, Udhatya, Vishakam, Thulam, B.E., 32/173 cm presently not employed, treated for cornea problem/specs, medicine for depression, வீடு வசதியுள்ள பையனுக்கு ஏழை/எளிய பொறுப்புள்ள, broad-minded, homely girl required. No demands, horoscope/details Box No. 16839

◆ Iyer, Brahacharanam, Karga, Uthiradam, Magara Rasi, 23.08.80, 165 cms, Software Engineer, BE/ MBA/Rs.50,000/- p.m, Ketu in Lagnam seeks professionally qualified girl employed/unemployed smart, beautiful, Subsect no bar. Contact: 9443786211. Box No. 16840

◆◆ Iyer, Vadama, Srivatsam, Chitrai - 3, 11.6.1973, fair, B.Com, H.D.S.E, SWE, 9 lakhs p.a seeks Graduate/U.G/Iyer/Iyengar. Bride - 09382124494/044 26582192. Box No. 16841

◆ II Marriage Tamil Iyer Vadamal, srivatsa, Pooradam, 34/165, B.Com, MBA (Pursuing), Legal Divorcee, without encumbrance. Employed in Bank seeks suitable Brahmin girl without issue. Subsect no bar. Mob 0-99801-45955 between 9 PM to 8 AM. Box No. 16842

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், 52 yrs young looking, General Manager, Rs. 75,000/- p.m, திருமணம் ஆகாதவருக்கு குடும்பப்பாங்கான பெண் தேவை. ஐயர்/ஐயங்கார்/ மாத்வா ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். மூலம் நட்சத்திரமும் ஏற்கப்படும். எளிய முறையில் திருமணம். பெட்டி எண். 16843

◆ Iyer, Vadamal, Koundinya Thiruvonam, MCA, GNIIT, 5.5', May 1981, TCS IT analyst Six lakhs p.a, Own House seeks suitable Girl, Contact Ph:9444906915, 9840635211, 044-22580815, ss matri 59290. Box No. 16844

◆ Bharadwaja, Uthiram, Vadama, June 1971/178 BCA, Emirates Airlines, Chennai, Rs.30,000 p.m seeks educated girl XII or graduate from any Brahmin family. 044-2626 0013, 09025-944391. Box No. 16845

◆ ஐயர், பிரஹசரணம், பாரத்வாஜம், அனுஷம், 31,172 செ.மீ, பி.எஸ்ஸி, கேட்டரிங், Agriculture Business, லால்குடி, Rs.25,000/-p.m, seeks alliance, Subsects no bar. Contact 09443834102/0431-2543012. Box No. 16846

◆◆ Telugu Brahmin, Haridasa, Tiruvonam, MCA, 22.12.79, 175 cm, Project Leader, Chennai, 60,000 p.m, seeks employed, unemployed suitable bride, Contact: Chandra 9952028527. email:ganeshcm@gmail.com Subsect no bar. Box No. 16847

◆ Thenkalai Iyengar, Koundinyam Brothers 1) Chitra - 1970, B.A, 4 lacs/PA, 2) Poosam, 1975, BBA (MBA), 9 lacs/PA seek suitable brides employed/unemployed/Subsect acceptable. e.mail: ushi_venk @yahoo.in Ph: (0)9313240364. Box No. 16848

◆ Iyer, Vadamal, Bharathwajam, Pooratadhi, 34, 182 cm, MCA, Software, MNC, Chennai, 7.5L p.a, seeks graduate employed/ unemployed girl. Subsect no bar. Contact 044-42021635. Box No. 16850

◆ Iyer, Vadamal, Bharathwajam, Swathi, 03.03.1983, 5'7", MBA (HR), Executive - HR in leading IT Company now at Coimbatore 5lakhs p.a seeks qualified employed/unemployed, Vadamal bride. Contact: 09383555313/ 044-22780231. Box No. 16851

◆ Iyer, Vadamal, Bharathwaja, Revathi, June 77, (MBA), ACS, Ht-6' Sical, Asst. Manager at Thuthukudi, Rs 3 lacs p.a, seeks suitable bride employed. Ph: 65686877. Box No. 16852

◆ Iyer, Vathimal, Bharatwajam, Magam, 45, Young look (unmarried), 175 cms, B.Sc, MHRM, PGDCA, Rs. 50,000/- per mensem,

திருமண மலர் பகுதியில் இடம் பெறும் விளம்பரங்கள் அனைத்தும் விளம்பரம் செய்பவர்களின் கையொப்பத்துடன் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. மணமகள் அல்லது மணமகன் பற்றிய வயது, வருமானம், அந்தஸ்து உள்ளிட்ட இதர விவரங்கள் விளம்பரதாரர் தரும் குறிப்புகளின் அடிப்படையில் பிரசுரிக்கப்படுகின்றன. இந்த விவரங்களைக் கொண்டு தொடர்பு கொள்ளும் பெற்றோர்கள் அவை சரியான விவரங்களா என்று தனிப்பட்ட முறையில் விசாரித்து உறுதி செய்து கொள்வது நல்லது. மேலும் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும்பொழுதே மருத்துவப் பரிசோதனையும் மேற்கொண்டால் பிறவிக் குறைபாடுகளுடன் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கலாமே! - *பதிப்பாளர், மங்கையர் மலர், சென்னை 600 032*

Managerial cadre, leading software company, Chennai seeks suitable bride, Subsect no bar. Send Horoscope. Box No. 16853

◆ Vadamal, Bhwaj, Punarpoosam (4), March 78,167,50,000 p.m, DME, MNC, Chennai, Ms. Padmavathi, 044-26585083, 9952942660, (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 90880. Box No. 16854

◆ Brahacharanam, Shadamarshanam, Punarpoosam (3), July 81/161/65,000 p.m, B.E., SWE, Chennai, Own flat seeks Iyer bride, Job optional- Ramamritham - 044. 42020128, 9940186168 (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 92546. Box No. 16855

◆ Vadamal, Kousigam, P.Poosam (2), May 81/177/50,000 p.m, B.E (ECE), SWE, Bangalore. Own House, NAdt, Sambamoorthy, 9843095280, 9994884171 or Panchapakesan 9840330531 web: www.ssmatri.com ID 92597 Box No. 16856

◆ Brahacharanam, Koundinyam, Rohini (2), May 77/168/ 60,000 p.m, M.Sc (Comp Science), M.Sc (Physics), Project leader, MNC, Bangalore, Own House, Madurai - Mrs. Rajalakshmi, 09741500744, 09500087819 (or Panchapakesan 9840330531) web:www.ssmatri.com ID 91489 Box No. 16857

◆ Iyer, Gowthama, Miruga-sheersham - 3, (Mother Saiva Pillai), May 79/170/65,000 p.m, B.A, MBA, employed, Chennai, Pleasant personality, well-to-do seeks Brahmin/similar alliance - 044. 23622721, 9789099820 (or Panchapakesan 9840330531) web:www.ssmatri.com ID.92484. Box No. 16858

◆ Vadamal, Garga Anusham, March 81/175/45,000 p.m, SWE, Chennai, very pleasant (Father Iyer, Mother Saivamudaliyar) Sivaraman - 9840696138, 96772-97070 (or Panchapakesan 98403-30531) web: www.ssmatri.com ID.90603. Box No. 16859

◆ Brahacharanam, Kousigam, Thiruvadirai (2), Nov 83/170/B.E, SWE, MNC, Chennai, Own House, V.S.Manian, 09176222816 (Or Panchapakesan 9840330531) web:www.ssmatri.com ID.91808. Box No. 16860

◆ ஐயர், வடமாள், ஆத்ரேயம், ரோகிணி, 31, 5.6, M.Com, (Open University), Private Company,

Rs. 15,000/- p.m மற்றும் சொந்தத் தொழில், ஈரோடு, நல்ல குணமுள்ள மணமகனுக்கு, நல்ல குணமான குடும்பப்பாங்கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். 0424 - 2223991, 9221046899. பெட்டி எண். 16861

◆ Tamil Iyer, Vadamal, Magam, Koundinyam, 33, B.Com, DCA (MBA), Dy.Manager, HDFC Bank, Chennai, Salary Rs.29,000/-p.m + seeks suitable educated, employed bride. Contact Ph: 044-65446849. Box No. 16863

◆ Vadamal, Kousigam, Maham, July 73/175/40,000 p.m MHRM, MA, ML, lecturer cum freelance HRD, Trainer, Trichy, own house seeks Iyer Bride. Prof.K.Sundaram, 176, T.V.Nagar, Trichy - 620013. 9840149097 (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 91263. Box No. 16864

◆ Iyer, Vadama, Srivatsa, Revathi, 4.4.1973/ B.Com/172 cms/18 L.P.A, well settled, Propertied business-man seeks girl from a good family background. Refer ssmatri ID 90703.ct. 9884256058/brgpal@gmail.com Box No. 16865

◆ Athreya, Uthirattathi, Vadamal, Bachelor, 42/167, (BCA), Executive Ltd Company, Rs. 16,000/- p.m, plus additional income Rs.10,000/- seeks girl from good family. Subsect no bar. Simple marriage also accepted, Legal divorcee, no issues can also apply. Box No. 16866

◆ வடமாள், ஸ்ரீவத்ஸம், அஸ்தம் 3ம் பாதம், 32, 5'7", பிரபல ஆட்டோ

மொபைல் நிறுவனத்தில் ஆபீஸர், மாத வருமானம் 38,000/-, உட்பிரிவுகள் சம்மதம், குடும்பப்பாங்கான, டிகிரி படித்த பெண் தேவை. போன்: 044-24724587. செல்: 9445295582 பெட்டி எண். 16867

◆ Young Iyengar, Vadakalai 38/5'8, fair, Kousigam, Revathi, Shudha Jadhagam, B.Com, PGDCA, 4 Lakhs PA, Accounts Executive, Chennai, Own flat looking for a unmarried life partner from any Brahmin community, Only sister married and settled. Ph.9444020098, 28441098. Box No. 16868

◆ Iyer, Brahacharanam, Naithruba Kashyabam, Purattathi-4, 71/171cms, fair, M.Com, MFM, MBA, (ICWA), working in Brakes India Ltd, Chennai - seeks any suitable graduate girl. 24615386/9840023524, bjm4@rediffmail.com Box No. 16869

◆ **Tamil Brahmin, Iyer, Vadamal, Bharadwaja, Chitrai, 8.5.1971, 165 cms, Young Handsome, IT Manager Accenture, MNC, Bangalore, 12 lakhs annum, owns car, deluxe apartments seeks, Middle class, graduate, Brahmin spinster employed/unemployed, subsect acceptable. Demands, Dowry, Liabilities, commitments all Nil. Contact: Ph; 04142-322912 and with horoscope Bio-data, family details, Box No. 16870**

◆ Iyer, Vadamal, Vathoolam, Pooratathi, 44, 5.6', working in trust, as Manager, 12,000 p.m seeks bride between 35-42. Widows, Divorcees excuse. Ph: 044-26574957, 9444061474. Box No. 16871

◆ Iyer, Vadamal, Athreya, Pooram, Jan '78, 6', Ph.D, (IIT Chennai), MNC, B'lore seeks suitable bride. Contact Venkata Ramanan. Ph:24816203. Box No. 16872

◆ பிரஹசரணம், கௌசிகம், 11/78 திருவோணம் - 3, பி.எஸ்.ஸி, செவ்வாய் தோஷம், MNC, சென்னை, Rs.3.25LPA, 25-27 வயதுக்குள் மணமகள் தேவை. M. Vaidyanathan, 150, அக்ரஹாரம், தில்லைஸ்தானம், பின்கோடு 613203, தஞ்சாவூர் மாவட்டம், போன்: 04362 - 260218.

◆ Iyer, Brahacharanam, Kasyapa Visakam - 4, 35/173/B.Com, 50,000 pm, Specialist - Taxation in MNC, fair, Own House in Bangalore seeks suitable bride, Ph: 09611105445, niranjanb@rediffmail.com, N.Balasubramanian, 220B, I'N' Block, Rajaji Nagar, Bangalore - 10.

◆ Tamil Iyer boy, Feb 70, Sadhayam, Kapila, 5.7', working in Delhi, 3.60 L per annum, seeks employed/unemployed girl. Subsect no bar. Cont: (M)09810637343, e.mail:ma.iyer 1930@gmail.com ED-44B, Pitampura, Delhi - 110088

◆ Wanted bride upto 40 years for Tamil Iyer, Vadamal, Naidruvakasyapa, Aswini, 1967, 170 cm, B.Sc (Electronics), MBA, employed Mumbai, matching

◆◆ குறிப்பிட்ட திருமண விளம்பரங்களை மங்கையர் மலரின் இணையதளத்திலும் காணலாம். இதனுடன் சேர்த்து இணையதளத்திலும் வெளியிட கூடுதல் கட்டணம் ரூ. 100/- மட்டுமே.
Our website: www.mangayarmalaronline.com

horoscopes optional contact Flat 21, Anuradha Complex, Bhaupatil Road, Kirkee, Pune 411020. Ph: 02025818702, 9890001857 vishuiyer@rediffmail.com

◆ ஸ்மார்த்த கன்னடம், அறவத் தழக்கலு, திருவாதிரை, ஸ்ரீவஸ்தம், 32, ஏ.எம்.இ, ஏரோனாட்டிக்கல் இன்ஜினியர், தனியார், மாத சம்பளம், 80,000/-, பட்டதாரி/ வேலைக்குச் செல்லும், செல்லாத மணமகள் தேவை. என். சுப்பிரமணியன், 309/36, அன்னூர் ரோடு, கருமத்தம்பட்டி, கோவை - 641659. செல்: 9488731980, 04562-264222

◆ Iyer, Brahacharanam, Kashyaba, Sadhayam, July 84, 5'2", 12th class, Vaideegam in Delhi, fair, seeks suitable bride ready to settle in Delhi. Contact: 09871093168, Address: 27B/JG3, Near Lalmarket, Vikaspuri, New Delhi - 18

◆◆ G.Karthikeyan Iyer, Ashtasahasram, Pourkutsa Karthigai, 32/5'11", fair, B.Sc, MBA, 3.5 lakhs p.a, underwriter HDFC Insurance seeks bride subsect no bar. G.Kamakshi, B-17, No: 9, 13th cross street, Hindu Colony, Nanganallur, Chennai - 61. Ph: 8122730621, 9994039692.

## மணமகன் தேவை

◆ Iyer, Vadamal, Nithrupa-kasiyapam, Anusham, 3.3.1986, 5.8, BE, seeks well qualified, well settled, groom with clean habits from good family. TM.ID.M. 1202620, Ph:080.25291230, 09741288113.rama.s.balan@gmail.com Box No.20701

◆ Suman Iyer, Vadama, Bharadwajam, Thiruvonam, 1977, B.A, N.I.I.T, 5'4", working in M.N.C, Bangalore, young widow without issues, well to do family, seeks broadminded, well settled with good family background boy. Refer S.S.Matri ID.3040, Contact 080-23385818. e.mail:ksnatarajan_1948@rediffmail.com Box No. 20702

◆ Tamil Iyer, Brahacharanam, Uthiradam, 23/153 cm, B.Tech (IT), very fair, seeks professional, well settled clean habits boy below 29, from good family. Contact Cell: 9944276657. Box No.20703

◆ Iyer, Vadama, Kousikam, Moolam 4th Padam, Nov 79/150 cms, very fair, BE(cs), SWE in Blore seeks well qualified groom. Contact 080-25473049/09740877664.gg_latha@yahoo.com Box No.20704

◆◆ Vadama, Iyer, Shandilya, B.E., 1984, born Star Chadayam girl software engineer in MNC, Bangalore seeks suitable match employed at Bangalore. e.mail: kumarv.srinivasan@gmail.com Box No. 20705

◆ Iyer, Brahacharanam, Viswa-mithram, Hastham, Kanya, 5'4", 26, v.fair, smart, B.Sc (Agri), M.Sc,

**ஜூலை 2010 மாத இதழுக்கான திருமண மலர் விளம்பரங்கள் எமது அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 5.6.2010**

Psychology, P.G., Diploma in child Psychology, employed, seeks groom, well educated, well employed, above 5'8", from decent, small family. Contact Ph: 040/ 65967275. Box No. 20706

◆ Saiva Pillai, Maham, Simma Rasi, 29yrs, Pure Vegetarian, 5'4", Medium Complexion, M.Sc, M.Phil, bank employee seeks groom with good education and good family background. Box No. 20707

◆ Iyer, Vadama, Haritha, Moolam 4, Sept 1984, 5'3", MCA, Slim, Wheatish seeks professionally qualified, working Bridegroom, 27-31. (Sub-sect no bar). ssmatri.com.84197, 0424-2210424. Box No. 20708.

◆ Vadamal, Vathoolam, Bharani, Aug 85/150/35,000, B.E, V.fair, MNC, Bangalore, seeks Iyer (V/B) Professional, Chennai, Bangalore (Min 50,000/-p.m) Keerthivasan 0431-2472782, 9444888545 (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 84452 Box No. 20709

◆ Ashtasahasram, Vathoolam, Chitrai - 4, Feb 87/152/25,000, B.Tech, (EC), TCS Chennai pleasant, Native Kerala, seeks Iyer professional Chennai preferred Vaidyanathan - 0471-2343000 (after 6 pm) 0471-2100800, (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 84526 Box No. 20710

◆ Telugu Brahmin, Niyogi sisters, Kousigam/ Moolam (3)/ Aug 69/ 165 and Mrugaseersham (3), Jan 60/155, youngish looking and pleasant personalities seek well-placed Brahmin Grooms (Telugu/ Tamil) Chennai only. Minimum income 50,000/- p.m Box No. 20711

◆ Iyer (Mukkaniyar), Sandilyam, Avittam (3), Feb 86/160/V.fair, BE, SWE CTS, Chennai seeks Iyer, Profl. India only. Markandeswaran, 0462-2552301, 9443455508 (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID.83991 Box No. 20712

◆ Father Brahacharanam (Mother Saiva Mudaliyar) Kapi, Visagam (4), June 85/155, v.fair, BDS, Sai devotee seeks Iyer/ similar alliance profl. Ind/Abroad, Ravi Venkatraman - 09790719749 (or Panchapakesan 9840330531) web: www.ssmatri.com ID 84100 Box No. 20713

◆ Vadamal, Koundinyam, Kruthigai, July 84/155/v.fair, B.E, well-to-do Business family seeks propertied, well-placed professional, Non-transferable Job, Chennai only, Self-employed, Auditor, Advocate, own business grooms can also apply. 9840330531. web: www.ssmatri.com ID.84541 Box No. 20714

மே மாத மங்கையர் மலரில், சேலம் வாசகி ஜி.கீதா, நல்ல கணவன் கிடைக்க, என்ன ஸ்லோகம் ஜபிக்க வேண்டும் என்று கேட்டிருந்தார். எனக்குத் தெரிந்த இரண்டு ஸ்லோகங்களை எழுதியிருக்கிறேன்.

**ஃபாலோ அப்**

த்வமிதி ப்ரார்த்தயே - நித்யம் -
சீக்ரமேவ - பலம் - குரு ||

★ ஸ்ரீ பவானி ஸ்லோகம்

பவானி தவ்ம் தாஸேமயி
விதரக்ருஷ்டியும் ஸகருணாம்
இதி ஸ்தோதும் வாஞ்சன்
கதயதி பவானி த்வமிதிய:
ததைவத்வம் தஸ்மை திஸஸிந்ஜ
ஸாயுஜ்ய பதவீம்
முகுந்த பரஹ்மேந்திர ஸ்புட -
மகுட நீராஜித பதாம்.

பொருள்: ஹே! பவானி! அடிமையாகிய என்னிடம் கருணையுடன் கூடிய பார்வையை நீ செலுத்தி அருள்வாயாக. பவானி நீ என்று இரு வார்த்தைகளைச் சொல்லி துதி சொல்ல விரும்புகிறார்களோ விஷ்ணு, பிரம்மா, இந்திரன், போன்றவர்களின் ஒளியால் நீராஜம் செய்யப் பெற்ற திருவடிகளையுடைய உனது ஸாயுஜ்ய பதவியை, அவர்களுக்கு அளிக்கிறாய்.

ஸ்ரீபகவான் அம்மனின் இந்த ஸ்லோகம் மிகவும் அருட்சக்தி பொருந்தியது. இதைத் தினமும் ஏழுமுறை ஜபித்து வந்தால் நல்லது. நல்ல கணவன் கிடைக்க, பவானி அம்மன் ஸ்லோகத்தையும், துளஸி அம்மன் ஸ்லோகத்தையும் சொல்லி வரலாம்.

★ துளஸி ஸ்லோகம்

ப்ருந்தா ப்ருந்தாவனீ விச்வ பூஜிதா
விச்வபாவனீ |
புஷ்ப ஸாரா நந்தினி ச வஸிஸா
க்ருஷ்ண ஜீவனீ ||
புஷ்பேஷு சதுலனாஸ்யா:
நாஸ்திவேதேஷு பாஷிதம் |
பவித்ரரூபா ஸர்வாஸீ துளஸீஸா
சாக கீர்த்திதா |
தேஹிமே விஜயம்தேவி வித்யாம்
தேஹி மஹேச்வரி |

**-எஸ். வசந்தி, தஞ்சாவூர்**

# நல்ல கணவன் கிடைக்க!

*பயோநதீ தீர நிவாஸ லிங்கம்*
*பாலார்க கோடி ப்ரதிமம் த்ரிநேத்ரம் ।*
*பத்மாஸனேநார்ச்சித திவ்யலிங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) பாலாற்றங்கரையில் உறைவதும், கோடி இளம் சூரியனுக்கு இணையாக ஒளிர்வதும், முக்கண்ணை உடையதும், நான்முகனால் அர்ச்சிக்கப்பட்டதுமான திவ்யமான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.

*கங்காதரங்கோல்லஸ துத்தமாங்கம்*
*கஜேந்த்ர சர்மாம்பர பூஷிதாங்கம் ।*
*கௌரீ முகாம்போஜ விலோல ப்ருங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) கங்கையின் அலைகளால் பிரகாசிக்கும் சிரத்தை உடையதும், யானைத்தோல் அலங்கரிக்கும் உடலை உடையதும், கௌரியின் முகமாகிற தாமரையை வட்டமிடும் வண்டான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.

*ஸுகங்கணீபூத மஹா புஜங்கம்*
*ஸம்ஜ்ஞான ஸம்பூர்ண நிஜாந்தரங்கம் ।*
*ஸூர்யேந்து பிம்பாநல பூஷிதாங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) பெரும் அரவத்தை அழகிய கங்கணமாக அணிந்ததும், தன்னுள் மெய்யுணர்வு நிறைந்துள்ளதும், சூரியன், சந்திரன் இவற்றின் பிம்பங்களின் ஒளியாலும், அக்னியாலும் அழகு செய்யப்பட்டதுமான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.



*பக்த ப்ரியம் பாவ விலோல ப்ருங்கம்*
*பக்தாநு கூலாமல பூஷிதாங்கம் ।*
*பாவைக லோகாந்தர மாதிலிங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) பக்தியில் விருப்பமுடையதும், பக்தி உணர்வை வட்டமிடும் வண்டானதும், பக்தருக்கு அனுகூலமான மாசற்ற அணிகலனை உடையதும், பக்தி உணர்வு என்னும் மறுஉலகமான ஆதிலிங்கமுமான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.

*ஸாமப்ரியம் ஸௌம்ய மஹேசலிங்கம்*
*ஸாமப்ரதம் ஸௌம்ய கடாக்ஷலிங்கம் ।*
*வாமாங்க ஸௌந்தர்ய விலோலிதாங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) ஸாமகானத்தை விரும்புவதும், அழகுடன் கூடிய மஹேசலிங்கமும், நன்மையைக் கொடுப்பதும், உமையுடன் கூடிய கடைக்கண் பார்வை உடையதும், இடது பாகத்தில் அழகுடன் ஒளிர்வதுமான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.

## மகாலிங்கமே... போற்றி... போற்றி!

*பஞ்சாக்ஷரீ பூத ஸஹஸ்ரலிங்கம்*
*பஞ்சாம்ருத ஸ்நாந பராயணாங்கம் ।*
*பஞ்சாம்ருதாம் போஜ விலோல ப்ருங்கம்*
*வந்தாமஹே மார்கஸஹாய லிங்கம் ॥*

(அ-ம்) பஞ்சாக்ஷரமான ஸஹஸ்ரலிங்கமும், பஞ்சாம்ருத ஸ்நானத்தில் ஈடுபாடு உடையதும், பஞ்சாம்ருதம் என்னும் தாமரையை வட்டமிடும் வண்டான மார்கஸஹாய லிங்கத்தை வணங்குகின்றோம்.

*வந்தே ஸுராராதித பாதபத்மம்*
*ஸ்ரீ ச்யாமவல்லீ ரமணம் மஹேசம் ।*
*வந்தே மஹாமேரு சராஸநம் சிவம்*
*வந்தே ஸதா மார்கஸஹாய தேவம் ॥*

(அ-ம்) தேவர்களால் ஆராதிக்கப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவரும், ச்யாமள வல்லீ என்னும் மரகதவல்லீ அம்பாளின் மணாளரும், மஹேசருமான மார்கஸஹாயரை வணங்குகின்றேன். மஹாமேருவை வில்லாக உடையவரான சிவபெருமானை வணங்குகின்றேன். எப்பொழுதும் வழித் துணையான அந்தத் தெய்வத்தை வணங்குகின்றேன்.



அனுப்பியவர் :
எஸ்.சாந்தி, கொல்கத்தா

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!



வத்தக் குழம்பு, வெந்தயக் குழம்பு செய்து இறக்கும்போது, அதில் ஒரு டீஸ்பூன் பருப்புப் பொடி சேர்த்துக் கொதிக்க விட்டு இறக்கவும். குழம்பு திக்காக இருப்பதோடு சுவையும், மணமும் அதிகரிக்கும்.

*- மகாலஷ்மி சுப்ரமணியன், காரைக்கால்*

காட்டன் புடைவைகள் வாங்கும்போது, இரண்டு பக்கமும் ப்ரிண்ட் இருக்கிறதா என்று பார்த்து வாங்க வேண்டும். அப்படி இருந்தால் நாளடைவில் ப்ரிண்ட் போகாது.

*- என்.ஆர்.சரஸ்வதி, சென்னை - 33*

பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளிடம் பேசும்போது, இடையிடையே, நாட்டு நடப்புகளைப் பற்றியும் பேசலாம். பொது அறிவு வளர்வதோடு, குழந்தைக்கு அரசியல் அறிவும் வளரும்.

*- சுபா, தஞ்சாவூர்*

மூட்டு வலி உள்ளவர்கள் முருங்கைக்கீரை, அகத்திக் கீரை, சேப்பங்கிழங்கு, உருளைக் கிழங்கு, வாழைக்காய், பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம், காலிஃப்ளவர், மொச்சைக் கொட்டை, தயிர், பால், கோஸ் ஆகியவற்றைக் கட்டாயமாகச் சாப்பிடக் கூடாது.

*- டி.பி. லோகப்ரியா, ஈரோடு*

குழந்தைகளை வீட்டுக்கு அருகில் உள்ள பள்ளிகளிலேயே படிக்க வைத்தால், போக்குவரத்துப் பிரச்னை குறையும். அவசரம் என்றால், குழந்தைகளை சீக்கிரம் அழைத்தும் வந்துவிடலாம். வெளி நாடுகளில் இது ஒரு சட்டமாகவே உள்ளது. நாமும் இதை பின்பற்றலாமே!

*- வி. உமா, தூத்துக்குடி*

வெள்ளைத் துணிகளைத் துவைக்கும்போது, தண்ணீரில் சிறிது 'டேபிள் சால்ட்' சேர்த்துக் கொண்டால் துணிகள் வெள்ளை வெளேர் என்று ஆகும்.

*- மு.சாந்தி, போடிநாயக்கனூர்*

நரம்புத் தளர்ச்சிக்கு செவ்வாழைப் பழத்தை, நாற்பது நாட்கள் தொடர்ந்து சாப்பிடவும். இதில் இருக்கும் வைட்டமின் ஏ சத்து, கண், பல், எலும்பு போன்ற உறுப்புகளை வலிமையாக்கும்.

*- வள்ளி ராமகிருஷ்ணன், திருவனந்தபுரம் - 1*

உங்களுக்குத் தெரியுமா? மிகவும் பிரகாசமானவை, அதிக நுட்பமானவை, மிகத் தொலைவில் உள்ளவை, வெகு அருகில் இருப்பவை, அருவருப்பூட்டுபவை போன்றவற்றை உற்று நோக்கினால் கண் நரம்புகள் அதிர்ச்சியடைகின்றவாம்.

*- ஏ. இந்திரா, ஈரோடு*

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்



ஹாய் ஸ்டூடன்ட்ஸ்...

**மங்கையர் மலர்** ஒரு கதம்பம்...
ஒவ்வொரு பூவும் ஒரு விதம்...
மாணவர்களே!
இந்தப் பூ உங்களுக்காகத்தான்

## குறும்'பூ'
## களிப்'பூ'
## சிரிப்'பூ'
## பொறுப்'பூ'
## சுறுசுறுப்'பூ' -என

எல்லாமே உங்கள் அணிவகுப்பு. அற்புதமான வாழ்க்கைக் கட்டத்தில் நுழைந்து விட்ட அல்லது நுழையவிருக்கும் அனைவருக்கும், இந்த ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல் மிகவும் பயனுள்ள வழிகாட்டியாக இருக்கும் என்று நம்புகிறோம். வி வெல்கம் யுவர் ஃபீட் பேக்!

ஆசிரியர்

கல்லூரிப் படிப்பை முடிக்கும் தறுவாயில் இருக்கும் இளைஞர்கள், உண்மையிலேயே அவர்கள் தத்தம் ஆர்வத்துடன் இருக்கிறார்களா? அவங்க ளோட எதிர்கால எதிர்பார்ப்புகள் என்ன...? அவர்களது படிப்பு, அவர்களுக்கு என்ன உத்திரவாதம் வழங்கியிருக்கிறது...? இதோ ஜாலியாகவும் ஜோலியாகவும் விவாதிக்கிறார்கள்...

**ஆர். சனத்குமார் பி.ஈ. கம்ப்யூட்டர் சயின்ஸ், அண்ணா பல்கலைக் கழகம்**

**ஜி. ஹரிப்ரியா - பி.காம், எம்.ஓ.பி. வைஷ்ணவா கல்லூரி**

**எஸ்.சிந்துஜா, பி.ஈ கம்ப்யூட்டர் சயின்ஸ், பிரின்ஸ் ஸ்ரீ வெங்கடேஸ்வரா பத்மாவதி இன்ஜினியரிங் கல்லூரி**

**பவித்ரா ஸ்ரீநிவாசன் - பி.ஏ., லேடி ஸ்ரீராம் கல்லூரி, டெல்லி**

**ஓ.லாவண்யா - விஸ்காம், எம்.ஓ.பி. வைஷ்ணவா கல்லூரி**

**வி.லாவண்யா - எம்.சி.ஏ., ஜேப்பியார் கல்லூரி**


ஆர். சனத்குமார்


ஓ. லாவண்யா


வி.லாவண்யா


ஜி. ஹரிப்ரியா


பவித்ரா ஸ்ரீநிவாசன்


எஸ்.சிந்துஜா

லோ, என்னோட போர்ட் மார்க்ஸ் வைத்து மாந்ஸ் அல்லது அக்கவுன்ட் டன்சி போகணும்னு நெனச்சு... பி.காம் எடுத்தேன்.

**ஓ.லாவண்யா:** இப்பல்லாம் வெறும் பட்டப் படிப்பு போதாதே! க்ரியேடிவ்வா மீடியா லைன்ல போகணுங்கிற ஆசையில விஸ்காம் சேர்ந்தேன். அடுத்த கட்டமா, திரைப்படத் துறை சம்பந்தமா படிக்கப் போறேன்.

**ஹரிப்ரியா:** க்யூட் கிரியேட்டிவ்ஸ் எதிர்பார்க்கலாம்னு சொல்லுங்க.

# "எதையுமே ப்ப்..ப்ளான் பண்ணி

***சனத்குமார்:*** நாலு வருஷங்களுக்கு முன்னால நான் பிளஸ் டூ முடிச்சப்போ பிளாங்க் மைண்டாத்தான் (உண்மையை ஒத்துக்கறாங்கப்பா...) பி.ஈ கம்ப்யூட்டர் சயின்ஸ் எடுத்தேன். மேற்கொண்டு படிக்கற ஐடியா இல்ல... வேலைக்குப் போலாம்னு இருக்கேன்.

***ஹரிப்ரியா:*** எனக்கு கணக்குப் பாடத்துல எண்களோட விளையாடறது பிடிக்கும்.

***பவித்ரா:*** அகாடமிக் லைனில் அதாவது எம்.ஏ.எம்.ஃபில் படிச்சு புரஃபஸர் ஆகலாம். அல்லது ஜர்னலிசம் படிச்சு நியூஸ் சானலுக்குப் போகலாம். இதெல்லாம் செய்ய அடிப்படையா பி.ஏ. ஆங்கில இலக்கியம் படிக்கிறேன்.

***லாவண்யா:*** உங்க இங்கிலிஷ் தமிங்கிலிஷா மாறாம இருந்தா சரி!

***சிந்துஜா:*** பள்ளிக்கூடத்துல நான்

டுத்தது பயாலஜி.... பொதுவா கம்ப்யூட்டரில் ஆர்வம் இருந்தாலும் வீட்லல்லோரும் சொன்னதால கம்ப்யூட்டர் யின்ஸ் எடுத்தேன். வேலைக்குப் போறதுலதான் இப்போ என் ஆர்வம்.

**வி.லாவண்யா:** மூணு வருஷங்ளுக்கு முன்னால நான் எம்.சி.ஏ சேர்ந்ப்போ... அந்தக் கோர்ஸ்ல எல்லாருக்மே ஆர்வம் இருந்தது. இப்போ அது றைஞ்சுடுச்சு. ஆனா, அடிப்படை கம்ப்ட்டர் ஹார்டுவேர், சாஃப்ட்வேர் ல்லாம் இதில் கத்துகலாம்ங்கிறதால வலை வாய்ப்பு அதிகம்ங்கிறது என்னாட நம்பிக்கை.

**பவித்ரா:** பி.ஈ. கம்ப்யூட்டர் சயின்ஸ் டித்தவர்க்கும், உன்னை மாதிரி எம்.சி.ஏ டித்தவர்க்கும் வித்தியாசப்படுமா?

**வி.லாவண்யா:** நிச்சயமா வித்தியாசப்டும்! எங்களோடது ஹார்டுவேர், புரோராமிங் கலந்த விதத்தில் இருக்கும்!

**சனத்குமார்:** இங்கே கம்ப்யூட்டர் யின்ஸில் பி.எச்.டி போன்ற மற்படிப்பு படிப்பதற்கு ஐ.ஐ.டி ாதிரி மிகச் சில கல்வி றுவனங்களில் மட்டுமே சரியான ளம் கிடைக்குது. சரியான கைடு டைக்காமல் புத்தகங்களை தேட




**சனத்குமார்:** பாடங்களை போரடிக்காம நடத்துவது அந்தந்த ஆசிரியர்களின் திறமையைப் பொறுத்ததுப்பா! இப்ப மாணவர்கள் அதிகரிக்கிற அளவுக்கு பேராசிரியர்களின் எண்ணிக்கை இல்லங்கறதும் ஒரு குறை.

**பவித்ரா:** பொலிடிகல் சயின்ஸ், பிலாஃசபி, சோஷியாலஜி இந்த மாதிரி சப்ஜெக்ட்க்கெல்லாம் இப்போ ரொம்பப் பேர் வரதில்லே... எனக்கு ஜர்னலிசத்தோட இதெல்லாமும் படிக்கணும்னு ஆசை...

**சனத்குமார்:** அப்போ... கூடிய சீக்கிரம்



# க்கணும்!"

வண்டியிருக்கு.

**ஹரிப்ரியா:** ஆசிரியர்கள், சொல்லிக் காடுக்கும்போது, போரடிக்காம, க்கியமான பாயின்டுகளை கதை பால சுவாரஸ்யமா சொல்லித்தரலாமே! (ரொபஸர்ஸ் கவனிச்சுக்கங்க...)

**சிந்துஜா:** அதான்... இப்ப எல்லாம் வர் பாயிண்ட் பிரசன்டேஷன்லதானே சால்லித் தராங்க!

பத்திரிகைதுறைக்கு சிறந்த எழுத்தாளினியை எதிர்பார்க்கலாம்.

**வி. லாவண்யா:** முந்தியெல்லாம் ஐ.டி (இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி)யோட ஒரு பகுதியா எம்.சி.ஏ இருந்தது. இப்பல்லாம் அப்படி இல்ல.

**ஹரிப்ரியா:** சுயதொழில் தொடங்கறதைப் பத்தி யாராச்சும் யோசிச்சு வெச்சிருக்கீங்களா?

**சனத்குமார்:** ஓரளவு செட்டிலாகி, சில வருஷங்கள் வெளியார் கம்பெனிகள்ல வேலை பார்த்து, அனுபவப்பட்டபின் சுய தொழில் தொடங்கலாம்.

**சிந்துஜா:** டாடா, பிர்லாங்க எல்லாம் உஷார்! உஷார்! சனக்குமார் வராரேய்!

**ஓ.லாவண்யா:** எங்கக் கல்லூரியிலே அதற்கான ஊக்கம் நிறையத் தராங்க. மாணவிகளின் சுயதொழில் திறமைக்கு ஏற்ற மாதிரி அவர்களது கை வேலைப் பொருட்கள் கண்காட்சி... இதெல்லாமும் உண்டு!

**ஹரிப்ரியா:** ஆமா! எங்கக் காலேஜ்ல படிச்சு சுய தொழில்லே, வெற்றியடைஞ்ச வங்களை அழைச்சுக்கிட்டு வந்து, கெஸ்ட் லெக்சர் கொடுக்கச் சொல்றாங்க. அவங்க



தங்களோட அனுபவங்களை எங்கக்கூட பகிர்ந்துக்கறது ஊக்கம் தர்ற விஷயமா இருக்கு.

**சிந்துஜா:** ரிசஷன் வந்ததால காம்பஸ் இன்டர்வியூக்கள் குறைஞ்சிட்டே வருது. என்னைப் போல வேலைக்குப் போற ஐடியாவுல இருக்கறவங்களுக்கு ரொம்ப கவலையா இருக்கு.

**வி.லாவண்யா:** என்னை மாதிரி எம்.சி.ஏ படிக்கறவங்களுக்கு நல்ல ஸ்கோப் இருந்தாலும், சில மீடியமான கம்பெனிகள்லே... "உங்க குவாலிஃபிகேஷன் அதிகம்"னு சொல்லி அதையே டிஸ்குவாலிஃபை பண்ணிடறாங்க!

**ஹரிப்ரியா:** பி.காம் படிப்புல நமக்குப் பிடிச்ச துறையை தேர்ந்தெடுக்கிற வாய்ப்பு அதிகம்! நான் ஆடிட்டரா போலாம். கார்ப்பரேட் செகரட்டரிஷிப் அல்லது சி.பி.ஏ (சர்டிஃபைடு பப்ளிக் அக்கவுண்டண்ட்), ஏ.சி.எஸ், ஐ.சி.டபிள்யூ.ஏ... இப்படி பல வழிகள் இருக்கு... எதைத் தேர்ந்தெடுத்தாலும் ஃபைனான்சிங் துறையில் வெற்றி நிச்சயம்!

**பவித்ரா:** வெரிகுட்! என் துறையிலும் சாய்ஸ் அதிகம்! ஸ்கூல்ல நான் சயின்ஸ் எடுத்தாலும் இப்ப நோ சயின்ஸ்! ஜர்னலிசம் அல்லது அகாடமிக்ஸ் பக்கம் வர்றதுக்குதான் திட்டம் போட்டிருக்கேன்.

**ஓ.லாவண்யா:** எனக்கு சினிகேமிரா உமனாக ஆசை! அல்லது ஃபிலிம் மேக்கிங்...

**பவித்ரா:** 'எ ஃபிலிம் பை லாவண்யா!' ஆஹா... நல்லாதான்யா கிளப்பறாங்க பீதியை!

**சனத்குமார்:** பி.ஈ முடித்தபின் மேற்கொண்டு படிக்க இங்கே சரிப்பட்டு வருமான்னு பார்க்கணும். அமெரிக்காவுல எம்.எஸ் பண்ண வசதிகள் அதிகம்னு கேள்விப்படறேன்.

**வி.லாவண்யா:** அப்படியே, அப்பா செலவுல நைஸா அமெரிக்கா டூர் அடிக்கலாம்னு பார்க்கறே! புரியுது... புரியுது! ஆல் தி பெஸ்ட்! *(ஜாலி ஜோவ் செம ஜாலியா முடிஞ்சது).*

**தொகுப்பு:**
**பத்மினி பட்டாபிராமன்**

# பொடுகு போ! போ!

**தலை முடியின் வேர்களில் பொடுகு அதிகமாக சேர்ந்தால் அரிப்பை உண்டாக்கும். இது கூந்தலின் அழகைக் கெடுப்பதால் 'கேசத்தின் எதிரி' என அழைக்கப்படுகிறது. பொடுகைக் குணப்படுத்த பல்வேறு இயற்கை சிகிச்சை முறைகளும் உணவுக் கட்டுப்பாடுகளும் உள்ளன.**





● அழகே அழகே...

★ வெண்மிளகை பால் விட்டு அரைத்து, தலைக்குத் தேய்த்து ஊற வைத்துக் குளிக்க பொடுகு போகும்.

★ பசலைக் கீரையை, மூன்று நாட்கள் அரைத்து, தலையில் தேய்த்துக் குளிக்க பொடுகு விலகும்.

★ வசம்பைத் தட்டி, தேங்காய் எண்ணெயில் ஊறப் போட்டு அந்த எண்ணெயைத் தடவி வரலாம். பொடுகு அகலும்.

★ நல்லெண்ணெயில் சிறிது வேப்பம்பூ, வெல்லம் சேர்த்துக் காய்ச்சி, தலைக்குப் பூசி ஊறிய பின் குளித்தால் பொடுகு உதிரும்.

★ கொஞ்சம் யூகலிப்டஸ் ஆயிலை சூடுபடுத்தி தலையில் தேய்க்கவும். ஒரு டவலை வெந்நீரில் நனைத்துப் பிழிந்து தலையைச் சுற்றிக் கட்டிவிடவும். இவ்வாறு சில நாள் தொடர்ந்து செய்ய பொடுகு மறையும்.

★ இரண்டு டீஸ்பூன் மருதாணிப் பவுடர், ஒரு டீஸ்பூன் காப்பி பவுடர்,

ஒரு முட்டை, அரை கப் தயிர் இவற்றை ஒன்றாகக் கலந்து ஒரு மணி நேரம் ஊற வைத்துக் குளிக்க, பொடுகு நீங்கும்.



★ அரை கப் தேங்காய்ப் பாலுடன் நான்கு டீஸ்பூன் எலுமிச்சைச்சாறு கலந்து தேய்த்துக் குளித்து வந்தால் பலன் கிடைக்கும்.

★ வில்வக்காயைப் பொடியாக்கி அதில் சம அளவு சிகைக்காய் தூள் கலந்து தினமும் தலைக்குக் குளித்து, பொடுகு தொல்லையிலிருந்து விடுபடலாம். தீரும்.

★ பொடுதலை மூலிகையை இடித்து, சாறெடுத்து சம அளவு நல்லெண்ணெய் கலந்து காய்ச்சவும். சாறு வற்றியதும் வடிகட்டி தலையில் பூசிவர பொடுகு மறையும்.

★ இருநூற்றைம்பது மில்லி தேங்காய் எண்ணெயில் ஐம்பது மி ல் லி அ ரு க ம் பு சாறையும் ஐம்பது மில் கரிசலாங் கண்ணி சாறையு கலந்து காய்ச்ச வேண்டு பாதி சாறு வற்றியது அதனுடன் நூறு மில் தேங்காய்ப் பாலை கலந் காய்ச்ச வேண்டு நீர்வற்றி எண்ணெய் பிரியு சமயம் பதினைந்து கிரா அதிமதுரத்தை, தூள் செய்து போடவு தூள் சிவந்ததும் இறக்கி வடிகட்டு தலைக்குப் பூசி வர பொடுகு போகும்.

★ பழங்கள், கறிகாய்கள், மு தானியங்கள், தேங்காய் கலந்த எ சட்னியை உணவில் சேர்க்கவும். பொ குள்ளவர்கள் சர்க்கரையையும் மாவு பொருள்களையும் கண்டிப்பாக குறைக்க வேண்டும்.

- சியாமளா ராஜகோபால், சென்னை

---

பப்ளிக் எக்ஸாமுக்கு தயாராகிட்டிருந்த பசங்களுக்கு வாத்தியார் டிப் கொடுத்துட்டு இருந்தார்.

''பசங்களா... கேள்வித்தாள்ல சுருக்கமான விடையளி... விரிவான விடையளி''ங்கற குறிப்பையெல்லாம் நிதானமா படிச்சு புரிஞ்சுகிட்டு, அது கேத்த மாதிரி ரொம்ப சரியா பதில் எழுதுங்க. அப்பத்தான் நிறை மார்க் வரும்!''னு சொன்னாரு.

மறுநாள்... 'சுருக்கமான விடையளி'ன்னு கேட்டிருந் கேள்விகளுக்கெல்லாம் ஒரு பையன், ரத்தினச் சுருக்கமா 'தெரியும்!'னு பதில் எழுதினான்.

*(சும்மா சொல்லாதீங் வித்யா. நீங்க தானே அது!)*

- எஸ்.வித்யா, பி.கா
இரண்டாமாண்
காவேரி மகளிர் கல்லூ
திருச்





## கேள்விக்கென் பதில்?

கேம்பஸ் இன்டர்வியூ என்பது இன்றைய இளைஞர்களின் நீண்ட நாள் கனவு. கேம்பஸ் இன்டர்வியூ நடத்தப்படும்போது, குழு விவாதம் என்பது ஒரு முக்கிய அம்சமாக இன்று விளங்குகிறது. பலருக்கும் சவாலாகத் திகழும் இந்தக் கண்டத்தை உங்களால் எளிதில் தாண்ட முடியுமா? கீழ்க்கண்ட கேள்விகளுக்கு உங்கள் உண்மையான பதில்களை அளியுங்கள். உங்கள் மதிப்பெண்களும், உங்களைப் பற்றிய மதிப்பீடும் தெரிந்துகொள்ளலாம்.



ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்



# க்ரூப் டிஸ்கஷனில் நீங்கள் எப்படி?

ஜி.எஸ்.எஸ்

1. தலைப்பைக் கூறி முடித்தவுடனே உங்கள் நிலைப்பாடு என்ன?

(அ) மற்றவர்களை முந்திக் கொண்டு என் கருத்தைக் கூறத் தொடங்கிவிடுவேன்.

(ஆ) மற்ற அனைவரும் தங்கள் கருத்துகளைக் கூற பண்புடன் இடம் கொடுத்துவிட்டுக் கடைசியாக என் கருத்தைக் கூறுவேன்.

(இ) ஓரிருவர் தங்கள் கருத்துகளைக் கூறியவுடன் என் கருத்தைக் கூறுவேன்.

2. நிறுவனத்தினர் அளிக்கும் தலைப்பு காலத்துக்கு ஒவ்வாததாக, அபத்தமானதாக இருக்கிறது. என்ன செய்வீர்கள்?

(அ) அதை முதலில் வெளிப்படுத்திவிட்டு பிறகுதான் என் கருத்துகளைச் சொல்வேன்.

(ஆ) 'தலைப்பு எந்த அளவுக்கு இந்தக் காலத்துக்கு ஒத்துப் போகும் என்பதும் அது அர்த்தமுள்ளதா என்பதும் உங்களுக்கே தெரியும்' என்று புன்னகையுடன் நாசூக்காகக் கூறிவிட்டு பிறகு என் கருத்துகளைச் சொல்லத் தொடங்குவேன்.

(இ) தலைப்பு எப்படியிருந்தால் என்ன? அது தொடர்பான என் கருத்துகளைக் கூறுவேன்.

3. எது அதிக முக்கியம்?

(அ) எவ்வளவு நேரம் பேசுகிறோம்

என்பது.

(ஆ) எவ்வளவு கருத்துகளைப் பேசுகிறோம் என்பது.

(இ) எந்த விதத்தில் பேசுகிறோம் என்பது.



4. பட்டிமன்றம் போன்ற ஒரு தலைப்பு என வைத்துக் கொள்வோம். அப்போது,

(அ) ஒரு தரப்பை மட்டுமே ஆதரிக்க வேண்டும்.

(ஆ) இரு தரப்பையும் மாறி மாறி ஆதரித்துப் பேசுவதில் தவறில்லை.

(இ) இரு தரப்பையும் ஆதரிக்கலாம். ஆனால் ஒரு முடிவுக்கு வந்து, அதைத் தெளிவுபடுத்தி விட வேண்டும்.

5. குழுவில் ஒருவர் மட்டும் தொடர்ந்து பேசிக்கொண்டே இருக்கிறார். என்ன செய்வீர்கள்?

(அ) மனதுக்குள் கோபம் வந்தாலும் என் முறைக்காகக் காத்திருப்பேன்.

(ஆ) 'மன்னிக்கவும். நேரத்தை எல்லோருமே பகிர்ந்துக் கொள்ள வேண்டும்' என்றபடி என் கருத்துகளைக் கூறத் தொடங்குவேன்..

(இ) 'நீங்கள் செய்வது பெரும் தவறு' என்றபடி, அவரது குற்றத்தை விரிவாக எடுத்துக் கூறிவிட்டு, என் கருத்துக்களைக் கூறுவேன்.

6. குழு விவாதத்தில் அதிகம் தேவைப் படுவது எது?

(அ) பொறுமை

(ஆ) அவசரம்

(இ) வேகம்

7. கொடுத்த நேரம் முடிந்துவிட்டது என்பதற்கான மணி ஒலிக்கப்படுகிறது. உங்கள் கருத்துகளில் சொல்ல வேண்டியவை இன்னும் இருக்கின்றன. என்ன செய்வீர்கள்?

(அ) 'தயவு செய்து இரண்டு நிமிட அவகாசம் கொடுங்கள்' என்று கூறிவிட்டு என்னுடைய பிற அற்புதமான கருத்துகளையும் வெளிப்படுத்துவேன்.

(ஆ) பாதி வாக்கியமாக இருந்தாலும் நிறுத்திக் கொள்வேன்.

(இ) அந்த வாக்கியத்தை முடித்துவிட்டு நிறுத்திக் கொள்வேன்.

8. உங்கள் கருத்தைக் கூறி விட்டீர்கள். குழுவில் உள்ள வேறொரு பெண், தன் கருத்தைப் பேச வரும்போதெல்லாம், அவரை அலட்சியப்படுத்திவிட்டு வேறு யாராவது பேசிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் என்ன செய்வீர்கள்?

(அ) 'தயவு செய்து அவரைப் பேச விடுங்கள். ரொம்ப நேரமாக காத்துக் கொண்டிருக்கிறார்' என்று கூறி அந்தப் பெண்ணுக்கு வாய்ப்பு பெற்றுத் தருவேன்.

(ஆ) யாராவது பேசி முடித்தவுடனே சட்டென்று 'இப்போது நீங்கள் பேசலாமே என்று அந்தப் பெண்ணிடம் சற்றே உரத்துக் கூறிப் பேச வைப்பேன்.

(இ) குழுவில் மற்றொருவருக்காகப் பரிந்து பேசுவது அதிகப்பிரசங்கித்தனமாகக் கருதப்படலாம். எனவே ஒன்றும் செய்ய மாட்டேன்.

---

உங்கள் மதிப்பெண்களைத் தெரிந்து கொள்ள : பக்கம் 140









# பலே, க்ளே

## தேவையான பொருள்கள்

செராமிக் பவுடர் - 100 கிராம், கார்ன் ஃப்ளவர் மாவு - 50 கிராம், ஃபேப்ரிக் க்ளு, ஃபேப்ரிக் கலர்ஸ், ஃப்ராலிகா 3டி, பிரஷ், ஸ்டோன், சார்ட் பேப்பர், ஸ்பிரிங், கத்தரிக்கோல், காதணி ஹூக், ரோப்.



துளசி கன்னன்

செய்முறை:

★ செராமிக் பவுடரையும், கார்ன் ஃப்ளவர் மாவையும் ஒரு கிண்ணத்தில் போட்டு நன்றாகக் கலக்கவும். இதனு டன் ஃபேப்ரிக் க்ளுவைச் சேர்த்து (தண்ணீர் தேவையில்லை) சப்பாத்தி













# ஜுவல்லரி!




## தூரிகை ட்யூஷன்

மாவு பதத்துக்குப் பிசையவும். இப்போது க்ளே தயார்.

★ சார்ட் பேப்பரில் நமக்குத் தேவையான நெக்லஸ் டிஸைனும், அதற்கேற்ற காதணி டிஸைனும் வரைந்து, சீராக கட் செய்து எடுத்துக் கொள்ளவும்.

★ க்ளேவை சிறிது சிறிதாக எடுத்து, டிஸைன் செய்து வைத்த சார்ட் பேப்பரில் ஒட்டவும். இப்போது டிஸைன் க்ளே வடிவில் முழுமையடைந்திருக்கும். (படம் 4)

★ நெக்லஸ் டிஸைனின் இரு முனைகளிலும் ஊசி கொண்டு துளையிடவும். இதேப்போல் காதணியின் மேல் பகுதியில் ஊசி கொண்டு துளையிடவும். (படம் 5)

★ தேவையான ஸ்டோன் எடுத்து க்ளேவின் நடுப்பகுதியில் வைத்து அழுத்தி அலங்கரிக்கவும்.

★ க்ளே நன்றாகக் காய்ந்ததும் ஃபேப்ரிக் நிறத்தை டிஸைனிங் மீது நிரப்பவும். நன்றாகக் காய்ந்ததும் நெக்லஸில் துளையிட்ட முனை பகுதியில், ஸ்பிரிங்கை










மாட்டி, ரோப்பை இணைக்கவும். காதணி துளையிலும் ஸ்பிரிங் மாட்டி தோடு ஹூக் இணைக்கவும்.

ஃப்ராலிகா 3 டி கொண்டு, ஸ்டோனைச் சுற்றி அலங்கரிக்கவும். 'பளபள' என ஜொலிக்கும் இந்த க்ளே ஜூவல்லரி டீன் ஏஜ்க்கான ஸ்பெஷாலிட்டி.













சார்ட் பேப்பரில் தேவையான டிஸைனைக் கட் செய்து, க்ளேவை ஒட்டவும். டிஸைனின் மீது பேனா ரீஃபில் முனையை வைத்து எடுத்தால், டிஸைனில் இன்னொரு டிஸைன் பதிந்திருக்கும். (படம் 2 )

கறுப்பு நிற ஃபேப்ரிக் நிறமடித்த பிறகு தேவையான நிறம் கொடுத்தால் ஜூவல்லரியில் மெட்டாலிக் லுக் கிடைக்கும். டாலரின் மேல் பகுதியில் துளையிட்டு, ஸ்பிரிங் மாட்டி ரோப்பை நுழைத்து, பிறகு ஸ்பிரிங்கை டைட் செய்யவும். இதேப்போல் காதணியிலும் ஸ்பிரிங் மாட்டி, ஹூக் மாட்டவும். கல்லூரி பெண்களின் லேட்டஸ்ட் சாய்ஸ் இந்த ஆன்டிலுக் ஜூவல்லரிதான்.

கவனிக்க:

★ க்ளே ஜூவல்லரியில் நெக்லஸ் மட்டுமின்றி நெற்றிச் சுட்டி முதல் கால் கொலுசு வரை உங்கள் கற்பனைக்கேற்ப அனைத்தையும் செய்யலாம்.

★ சார்ட் பேப்பரைவிட, சட்டை காலருடன் வரும் தாளில், டிஸைன் செய்தால் நீண்டநாள் உழைக்கும்.

★ க்ளே ஜூவல்லரியில் மெட்டாலிக் லுக் கிடைக்க முதலில் கறுப்பு நிற ஃபேப்ரிக் நிறத்தை உபயோகித்தலும், பிறகு மெட்டாலிக் நிறத்தை டிரை ஸ்ட்ரோக்காகக் கொடுக்கவும். ஆன்டி-லுக் ஜூவல்லரியில் அவ்வப்போது வேண்டிய நிறத்தை மாற்றிக் கொள்ளலாம்.

தொகுப்பு: லஷ்மி

# அடடா

## மாயாஜால மீடியா

1963ம் ஆண்டு இளவேனில் காலத்தில் ஒரு நாள்... அமெரிக்காவில் கணிப்பொறி வளர்ச்சி பற்றிய கருத்தரங்கம். அதில் இருபத்துநான்கு வயது இளைஞர் ஒருவர், தாம் உருவாக்கிய ஸ்கெட்ச் பாட் (sketch Pad) என்ற புதிய உத்தியை அறிமுகப்படுத்துகிறார். முனையில் பாட்டரி பொருத்திய ஒரு சிறு ஒளிப் பேனா (லைட் பென்)வினால் கணிப்பொறி திரையில் எளிய உருவங்களை வரைகிறார். பாட்டரி செல் வெளியிடும் மின் துடிப்பும், கணிப்பொறி திரையில் இருக்கும் எலக்ட்ரானும் சரியான டைமிங்கில் ஒன்றை ஒன்று சந்திக்க, திரையில் குறிப்பிட்ட இடத்தில் அவரால் உருவத்தை வரைய முடிகிறது. இதுதான் அனிமேஷனின் ஆரம்பம். அந்த இளைஞர் இவான் சதர்லேண்ட் (Ivann Sutherland)... கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸின் தந்தை என்றழைக்கப்படுபவர்.

அமெரிக்காவின் 'உடா' (Utah) பல்கலைக்கழகத்தில் கணிப்பொறி துறையின் தலைவராக இருந்தபோது அங்கே பயிற்சி பெற்ற ஜான் வார்னாக்தான் இன்றைய புகழ் பெற்ற 'அடோப்' நிறுவனத்தை உருவாக்கியவர்.

பின்னர் மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின் கணிப்பொறியின் அல்கோரிதம் எனப்படும் 'கோட்'களை அடிப்படையாகக் கொண்டு முப்பரிமாண வடிவ மென்பொருள்கள் 3D Software உருவாக்கப்பட்டன. இன்று திரைத் துறையிலும் விளம்பரத் துறையிலும் உபயோகப்படுத்தப்படும் த்ரீ-டி-மாக்ஸ், மாயா, சிலிகன்கிராஃபிக்ஸ், ஸாஃப்ட் இமேஜ் போன்ற பல மென்பொருள்கள் - முப்பரிமாண வடிவத்தை உருவாக்க உதவுகின்றன.


✱டி.கே.ஜெயகுமார்

மேப்பிங் தொழில்நுட்பம் மூலம், அந்த முப்பரிமாண வடிவத்துக்கு, 'உயிரூட்டப்படுகிறது!'

1982ல் வால்ட் டிஸ்னி தயாரித்த 'ட்ரான்' படம், கிராஃபிக்ஸ் உத்தியால் உருவான முதல் படம். ஒரு கணிப்பொறிக்குள் மனிதன் பயணிப்பதுபோல் கதை. படம் தோற்றாலும் கிராஃபிக்ஸ் வெற்றி பெற்று, டைட்டானிக், காட்ஸில்லா, ஸ்டார்வார்ஸ், மம்மி, த

லார்ட் ஆஃப் த ரிங்ஸ், டர்மினேட்டர் என்று பல படங்கள் கிராஃபிக்ஸ் பிரமாண்டத்தால் வெற்றி பெற்றன.

**த**மிழ்ப்படங்களைப்பொறுத்தவரை, கிராஃபிக்ஸ் என்றால் நம் நினைவுக்கு வருபவர் இயக்குநர் ஷங்கர்தான். 'ஜீன்ஸ்', 'பாய்ஸ்', 'அந்நியன்', 'சிவாஜி' போன்ற வெற்றிப் படங்களில் கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸில் அசத்தியவர் ஷங்கர். அந்த வேலைகளை செய்தவர்கள் 'இண்டியன் ஆர்ட்டிஸ்ட்' நிறுவனத்தின் இயக்குநர் டி.கே.ஜெயக்குமார்...

''காமிராவில் படம் பிடித்த காட்சிகளை, கணிப்பொறிக்குள் கொண்டு வந்து சில சிறப்பு எஃபக்ட்ஸ் தருவதுதான் டிஜிடல் எஃபக்ட்ஸ்'' என்கிறார்.

''கற்பனையில் மட்டுமே சாத்தியமாகக்கூடியதை கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் சாதிக்கும்'' என்னும் ஜெயக்குமார், 'அந்நியன்' திரைப்படத்தில் இருநூறு எருமைகள் ஒரு பள்ளத்துக்குள் குதிக்கும் காட்சி பார்த்தீர்களே, நினைவிருக்கிறதா? உண்மையில் ஒரு எருமையும் குதிக்கவில்லை... கிராஃபிக்ஸ் மூலம் குதிக்க வைக்கப்பட்டன! பவர்ஃபுல் காட்சி அது...!'' என்றார்.

**''அனிமேஷன் துறையில் என்னென்ன பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன?''** என்று அவரிடம் கேட்டோம்.

இணையதளங்களை உருவாக்கும் ட்ரீம் வீவர் மென்பொருளில் வெப் டிசைனிங் பயிற்சி, முப்பரிமாண அனிமேஷனில் 'மாயா' மென் பொருள் பயிற்சி. இவற்றோடு எடிட்டிங் துறையிலும் காம்போஸிடிங், அடோப் ப்ரிமியர் போன்றவற்றிலும் மாணவர்கள் மிக்க ஆர்வம் காட்டி பயின்று வருகிறார்கள்.''




**''அனிமேஷன் மாணவர்களின் எதிர்கால ஸ்கோப் பற்றி?''**

''தொழில் நுட்பமும், தேவையும் அதிகரித்து வருகின்றன. திரைப்படங்களில் மட்டுமல்ல, விளம்பரத்துறை, விளையாட்டுத் துறை, மருத்துவம், அலுவலகங்கள், வணிக சம்பந்தமான சந்திப்புகள் எல்லாவற்றிலும் இன்று கிராஃபிக்ஸ் துறையின் தேவை அதிகரித்துள்ளது. கிரிக்கெட் மாட்ச் ஒளிபரப்பாகும் போதுகூட எத்தனை அனிமேஷன் பார்க்கிறீர்கள்? இதன் தேவை ஏராளம்...

''அனிமேஷன் மென்பொருள்களில் ப்ளக்-இன் 'plug-in' எனப்படும் ஸ்பெஷல் எஃபக்ட்டுகள் புதிது புதிதாக இணைக்கப்பட்டு வருகின்றன. இன்று மட்டுமல்ல, எதிர் வருங் காலத்திலும் அனிமேஷனுக்கு அற்புதமான வரவேற்பு இருக்கிறது''

# அனிமேஷன்!



**- பத்மினி பட்டாபிராமன்**

## விருதுநகர் மாவட்ட வாசகர்களே!

## உங்க ஊருக்கு வருது கல்கி டீம்

- உங்க ஊர்ப் பெருமை?
- சுற்றுலாத் தலங்கள்?
- உடனடித்தேவை?
- அமைதி தரும் ஆலயம்?
- கலை இலக்கியப் பங்களிப்பு?

**விருதுநகர் மாவட்ட வாசகர்களே...**
**கீழுள்ள கூப்பனை கத்தரித்து ஒட்டி அனுப்புங்க...**
**கூடுதல் விவரங்கள் 30.05.2010 கல்கி இதழில்...**

கலக்க வருதுப்பா கல்கி
விருது நகர் மாவட்டச் சிறப்பிதழ்

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47N.P. ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

**கடைசித்தேதி**
**18.06.2010**



**கல்கி**
**27.06.2010**
**இதழ்**

## செம்மொழி மாநாடு சிறப்பிதழ்!

**செம்மையாய்த் தயாராகுது...**

**செந்தமிழ்ப் போட்டியும் உண்டு**

**உ**லகப் புகழ் பெற்ற அந்த ராஜஸ் தானத்துக் கல்லூரியின் முன்னாள் மாண வர்கள் மீண்டும் சந்தித்து மகிழும் 'அலும்னி மீட்டிங்'

தில்லி, பம்பாய், சென்னை என்று எல்லா முக்கிய இந்திய நகரங்களிலிருந்தும் கலிஃபோர்னியா, லண்டன், டொரொன்ட்டோ என்று உலகம் முழுவதிலிருந்தும் முன்னாள் மாணவர்கள் அணி திரண்டிருந்தனர்.

மாணவர்கள் என்றால் எல்லோரும் இப்போது நாற்பத்தைந்து வயதைத் தாண்டியவர்கள். முக்கிய நிறுவனங்களில்

**• வி.பி.சதுர்புஜன்**



தலைமைப் பதவி வகித்துக் கொண்டிருப் பவர்கள்.

**மா**லை, கல்லூரி ஆடிட்டோரியத்தில் பல் சுவை நிகழ்ச்சி நடந்தது. டைரக்டர் வெங்கடேஸ்வரனும் கலந்துகொண்டார்.

மாணவர்கள் சார்பில் பேசிய சந்தன் செனகுப்தா, ''முன்னாள் மாணவர்கள் நாங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, எங்களுடைய கல்லூரிக்கு ஏதாவது காணிக்கை செலுத்த விரும்புகிறோம்.

**மங்கையர் மலர் ஜூன் 2010**

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

ஒரு வகுப்பறை கட்டலாம்; மெஸ் தொழிலாளர்களுக்கு ஏதாவது உதவி செய்யலாம்; வாட்டர் கூலர், கம்ப்யூட்டர் போன்ற சாதனங்களைப் பரிசளிக்கலாம். இவற்றில் எதைச் செய்தால் நன்றாக இருக்கும் என்று இயக்குநர் சொன்னால், அதுபோல் செய்யக் காத்திருக்கிறோம்'' என்று பேசி முடித்த போது அனைவரும் கைதட்டி தங்கள் ஆதரவைத் தெரிவித்தனர்.

**க**டைசியாக மேடைக்கு வந்தார் இயக்குநர் வெங்கடேசன். பல விஷயங்களையும் பேசி முடித்து, இந்த காணிக்கை விஷயத்துக்கு வந்தார் அவர். ''நீங்கள் அனைவரும் இன்று நல்ல நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் இப்படி இருப்பதால்தான் இந்தக் காலேஜுக்கு பெருமையும் புகழும் இன்னும் கூடுகிறது. இன்னும் பல பேர் இந்தக் காலேஜில்தான் சேர்ந்து படிக்க வேண்டும் என்று முண்டியடித்துக் கொண்டு வருகிறார்கள்.

''இந்தப் பெரிய காணிக்கையைத்தான் உங்களிடமிருந்து, உங்கள் கல்லூரி எதிர்பார்க்கிறது. அதை நீங்கள் ஏற்கெனவே அளித்துவிட்டீர்கள். இதைவிட எந்தக் காணிக்கையும் உயர்ந்ததாக இருக்க முடியாது. ஆகவே, உங்களுக்கெல்லாம் என் ஆத்மார்த்தமான நன்றி!''

வெங்கடேசனின் அர்த்தமுள்ள பேச்சுக்கு, கரகோஷம் விண்ணைப் பிளந்தது.



நெகிழ்ச்சிக் கதை

128ம் பக்க தொடர்ச்சி...

# (க்ரூப் டிஸ்கஷனில் நீங்கள் எப்படி?)

விடைகள்

| | (அ) | (ஆ) | (இ) |
|---|---|---|---|
| 1. | 5 | 0 | 3 |
| 2. | 0 | 3 | 5 |
| 3. | 0 | 3 | 5 |
| 4. | 5 | 0 | 3 |
| 5. | 0 | 5 | 3 |
| 6. | 3 | 0 | 5 |
| 7. | 0 | 3 | 5 |
| 8. | 3 | 5 | 0 |

**உங்கள் மொத்த மதிப்பெண்கள் 30 லிருந்து 40 வரை என்றால்**

★ பிரமாதம். குழு விவாதத்தில் எப்படிச் செயல்பட வேண்டும் என்பது உங்களுக்குச் சிறப்பாகத் தெரிந்திருக்கிறது. ஆக பலவித தலைப்புகளில் நீங்கள் கருத்துகளைச் சேகரித்து வைத்துக் கொண்டு, அவற்றை உங்களுக்குத் தெரிந்த வகையில் குழுவில் செயல்படுத்தினாலே போதும். வெற்றி நிச்சயம்.




★ உங்கள் மொத்த மதிப்பெண்கள் 15 லிருந்து 29 வரை என்றால் விவரம் தெரிந்தவர்தான். என்றாலும் சில விஷயங்களில் தெளிவு கொஞ்சம் குறைவாக இருக்கிறது.

★ உங்கள் மொத்த மதிப்பெண்கள் 15 க்கும் குறைவு என்றால் நேர்முகத் தேர்வில் எப்படி நடந்து கொள்வது என்பதை சிறப்பாகத் தெரிந்து வைத்திருந்தால் மட்டும் போதாது. அதற்கு முன், குழு விவாதத்தில் வெற்றி காண உங்களுக்கான டிப்ஸ்.. ...

158ம் பக்கத்தில்

ஊ தி ப் பு ட் டே ன் ஊ தி!

எல்.கிருஷ்ண விக்னேஷ்
எம்.எஸ்ஸி மைக்ரோ பயாலஜி, என்.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோவை.

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

# வியத்தகு விக்னேஷ்!

ஜம் ஜம் ஜெம்ஸ்... ஜம் ஜம் ஜெம்ஸ்... ஜம் ஜம் ஜெம்ஸ்... ஜம் ஜம் ஜெம்ஸ்... ஜம் ஜம் ஜெம்ஸ்...

"என் வாழ்வில் வசந்தம் துளிர்விட ஆரம்பித்த ஒரு நல்ல நாள், நான் டாக்டர் என்.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரியில் காலடி எடுத்து வைத்த நாளில் இருந்து தான்" என்கிறார் உயிர்த் தொழில்நுட்ப இயல் துறை மாணவரான கிருஷ்ண விக்னேஷ்.

முதலாம் ஆண்டிலிருந்தே கல்லூரியின் உள்ளேயும், வெளியேயும் நடைபெற்ற அனைத்து அறிவியல் கருத்தரங்குகளிலும் பங்கேற்று அசத்தியுள்ளார்.

ஒன்பதுக்கும் அதிகமான தேசிய அளவுக் கருத்தரங்குகளில், ஆய்வுக் கட்டுரைகள் வாசித்து சமர்பித்தது இவரது சிறப்பம்சம்!

கல்லூரிச் செயலர் டாக்டர் தவமணி தேவி கூறியபொழுது கிருஷ்ண விக்னேஷ், "இந்தக் கல்வியாண்டின் சிறந்த மாணவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விருது பெற்றுள்ளார். இவரது தனித்தன்மையே சமூக விழிப் புணர்வு நிகழ்ச்சிகளில் பங்கேற்று, பல வியத்தகு சேவைகளைச் செய்தது தான்" என்கிறார்.

எய்ட்ஸ் கண்டறியும் பரிசோதனை முகாம் நடத்துதல், உணவுக் கலப்படம் கண்டறிதல் மற்றும் தடுத்தல், இயற்கை எரிவாயு தயாரிப்பு, அதன் பங்களிப்பு பயிற்சி முகாமில் பங்கு கொண்டு, மற்றவர்களுக்கு பயிற்சி தருதல், தகவல் அறியும் உரிமைச் சட்டம், மனித உரிமை விழிப்புணர்வு முகாம், லஞ்ச ஒழிப்பு விழிப்புணர்வு முகாம் போன்றவற்றை நடத்தி ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு பயிற்சி கொடுத்துள்ளார்.

பல்கலைக் கழக அளவிலான சதுரங்கம், வினாடி வினா போட்டிகளில் பங்கேற்பு, ஆங்கிலத் துறை நடத்திய விவாதப் போட்டியில் முதல்பரிசு, தமிழ்த்துறை தமிழ் மன்றச் செயலராகப் பணி செய்து பாராட்டுகள் பெற்றது. பயோடெக் துறையான இளநிலை, முதுநிலை இரண்டு பிரிவுகளிலுமே பிரதிநிதியாகச் செயல்பட்டு துறை ஆசிரியர்களின் பாராட்டுகளைப் பெற்றது எனப் பல வியத்தகு செயல்களைச் செய்தவர் இவர்.

பெஸ்ட் அவுட் கோயிங் ஸ்டூடன்ட் ஆன இவர், தனது நன்றிகளை தனது கல்லூரி செயலர், முதல்வர், பேராசிரியர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறார்.

- ஆர்.பாலா

**பிட்சா, பர்கர், கோக், ஃபிங்கர் சாப்ஸ்... இந்தக் கால இளசுகளுக்குப் பிடித்தது இதுதானே! வளரும் வயதில் இதெல்லாம் உடல் நலத்தைப் பாதிக்குமா, பின்னால் என்னென்ன பிரச்னைகள் வரும், நமது சீதோஷ்ணத்துக்கு ஒத்து வருமா போன்ற சந்தேகங்களுடன் நுங்கம்பாக்கத்தில் 'வர்ஷா வாஜினி நியூட்ரி ஹெல்த் கேர் சென்டர்' நடத்தி வரும் பிரபல நியூஷ்ட்ரிஷமிஸ்ட் டாக்டர் வர்ஷாவை அணுகினோம்.**



# பீட்ஸா சாப்பிடுங்க..

"உணவுப் பழக்கம் என்பது, மனிதனின் சமூக பழக்க வழக்கங்களால் வருவது. ஒரு கன்றுக் குட்டிக்கு இந்தப் புல்லைத் தான் சாப்பிடணும்... இவ்வளவுதான் சாப்பிடணும் என்று யாரும் சொல்லித் தருவதில்லை. ஆனால், மனித இனம் அப்படியல்ல. இதனால்தான் மனிதன், ஹோட்டல், ஹாஸ்பிட்டல் என்று இரண்டு 'ஹெச்'களை உருவாக்கியுள்ளான்.

தென்னிந்தியாவில் பிறக்கும் குழந்தைக்கு, முழுக்க முழுக்க வட இந்திய உணவு கொடுத்தாலும் விரும்பிச் சாப்பிடும். பிறப்பினால், (கன்றுக்குட்டி போல) இதைத்தான் சாப்பிடுவது என்ற குணம் இல்லாததால்தான் மனிதன் எல்லாவற்றையும், தவளை, பாம்பு, குரங்கின் மூளை, ஏன் மனிதக் கருவைக்கூட உண்கிறான். இதில் பிட்சாவோ, பர்கரோ விதிவிலக்கல்ல. ஆனால், இதையே முக்கிய உணவாகக் கொள்ளும்போது பிரச்னை ஏற்படலாம்.

**இந்த உணவினால் உடலுக்கு ஏதாவது சத்து கிடைக்கிறதா?**

பிட்சா, பர்கர் போன்றவற்றில் சத்து இருக்கிறது. கூடவே கொழுப்பும் சோடியமும் அதிகமாக இருக்கிறது. பெண்டுலம் ஒரு கோடிக்கும் மறு கோடிக்கும் அசைவதுபோல, ஒருபுறம் வீட்டுச் சாப்பாடு. மறுபுறம் கொழுப்பு வகைகள்... எது ஒன்று அதிகரித்தாலும், உடலைப் பாதிக்கும். அவ்வப்போது பிட்சா சாப்பிடலாம். பொதுவாக இந்தியர்கள்



சதைப் பிடிப்புடன் இருப்பதில்லை. ஆனால் உடலில் தேவையற்ற கொழுப்புச் சத்து நிறைந்து காணப்படுகிறார்கள்.

**இன்றைய இளசுகளிடம் நம் பாரம்பரிய உணவுப் பழக்கத்தை**

**எப்படி கொண்டு வருவது?**

நல்ல சத்தான உணவு எப்படி, ஏன் இருக்கணும் என்பதை தாய்மார்கள்தான் குழந்தையிலிருந்து பழக்க வேண்டும். கருவில் குழந்தை இருந்தபோது அம்மா என்ன சாப்பிடுகிறாள் என்பதும் அவசியம். தீவிர விழிப்புணர்வு ஏற்படுத்தினால் இளைஞர்கள் சரியான உணவை நிச்சயம் ஏற்பார்கள்.

**மாணவர்களுக்கு ஏற்ற சரியான உணவு எது?**

நம் அனைவருக்குமே மாவுச்சத்து, புரதம், கொழுப்பு, தாதுக்கள், நீர் எல்லாமே அவசியம். இவை எதில் கிடைக்கும்? தானியம், பருப்பு வகைகள், பால் மற்றும் பால் பொருள்கள், எண்ணெய் வகைகள், காய்கறிகள், பழங்கள், பயறு வகைகள், கொட்டை மற்றும் எண்ணெய் விதைகள், மூலிகைப் பொருள்கள் மூலம் கிடைக்கின்றது. ஒவ்வொரு சாப்பாடும் மேற்சொன்ன பொருட்களின் சரியான விகிதத்தில் இருக்க வேண்டும். இவற்றை எட்டு வகையான குரூப்களாக பிரித்துள்ளோம்.

கடல் உணவு, மட்டன், சிக்கன் இவையெல்லாம் ஒன்பதாவது குரூப். ஏதாவது ஒரு வகையை மட்டுமே அதிகமாகச் சாப்பிடுவதன் மூலம் ஒருவர் தன் உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்ளலாம். சரியான விகித உணவுடன் சரியான நேரமும் மிக மிக அவசியம். தவறான நேரங்களில் உண்ணப்படும், தவறான உணவு ஒருவரின் ஆரோக்கியத்தை நிச்சயம் பாதிக்கும். வயது, சுறுசுறுப்பு, பாலினம் இவற்றைப் பொறுத்து ஒவ்வொருவரின் 'உணவு கொள்ளளவு' அமைந்தாலும், பொதுவாக நீங்கள் சாப்பிடுவதுதான் உங்களை அமைக்கிறது. சத்துணவு நிபுணர்களின் அறிவுரைப்படி சரிவிகித உணவு அவரவர்க்கு ஏற்றபடி எடுத்துக் கொள்வதுதான் என்றுமே நல்லது!

- பத்மினி பட்டாபிராமன்

# ஆனால்...

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

"ஓ... லலிதாவா! வாம்மா... எப்படியிருக்கே? பார்த்து ரொம்ப நாளாச்சு. இன்னைக்கு வீட்டு வேலைக்கு அம்மா வரலியா?'' என்றதோவிடம் ''அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. அதான் நான் வந்தேன். எனக்குக் காலேஜ் லீவு!'' என்றபடி பாத்திரங்களைத் தேய்த்து, கழுவ ஆரம்பித்தாள் லலிதா.

கம்ப்யூட்டரைத் தட்டிக்கொண்டிருந்த திவ்யா, எட்டிப் பார்த்தாள். மாநிறம். வாளிப்பான உடல். நேர்த்தியாக வாரிய தலைமுடி. அவளும் கல்லூரி மாணவிதான். இருந்தும் ஏனோ திவ்யாவுக்கு அவளிடம் நட்பாகப் பேசத் தோன்றவில்லை. எழுந்து உள்ளே போய்விட்டாள்.

நாலைந்து நாட்கள் கழிந்தன. ஹாலில் டெலிஃபோன் மணி ஒலித்தது. திவ்யாவின் வயதான பாட்டி மட்டும் வீட்டில் இருந்ததால், லலிதா ஃபோன் ரிசீவரை எடுக்க வேண்டியதாயிற்று.

''பாட்டி... உங்க பேத்திக்கு ஃபோன்கால் வந்தது. திவ்யாவுக்கு கேம்பஸ் இன்டர்வ்யூ நடக்கப் போற இடத்தை மாத்திட்டாங்களாம். டேட், டைம் எல்லாம் அதேதானாம். அவங்க கொடுத்த அட்ரஸை நோட் பேட்ல எழுதியிருக்கேன். பார்த்துக்கச் சொல்லுங்க'' என்று கூறிவிடை பெற்றாள்.




**மா**லை, தோழி ரமாவுடன் வீட்டுக்குள் நுழைந்த திவ்யாவுக்கு, பாட்டி சொன்ன விவரம் பரபரப்பூட்ட, நோட் பேடை நோக்கி விரைந்தாள்.

# மாறியது நெஞ்சம்!



ஆங்கிலத்தில் எழுதியிருந்த விவரங்களைப் படித்தவள், அதற்கு மேல் ஏதோ கோடுகள் போல இருந்ததைக் கண்டு ஒன்றும் புரியாமல், ரமாவிடம் ''இதென்னடி? இப்படி கிறுக்கி வெச்சிருக்கா?'' என்று நீட்டினாள். அதை உற்றுப் பார்த்த ரமா, கொல்லென்று சிரித்தபடி, ''இது...இது ஷார்ட்ஹேண்ட் டி!''ன்னு சொல்லி முடித்தாள்.

இனம் புரியாத ஈகோயிஸம் மெள்ள கழன்று விழ, லலிதாவுக்கு நன்றி சொல்ல அவளது வீட்டுக்கு விரைந்தாள் திவ்யா.

நட்புக் கதை

வாசுமதி கண்ணன்

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

**காலேஜ் டிக்ஷ்னரி**

**பிக்ஜங்க்**
ரொம்ப ஓவரா ட்ரெஸ் பண்ணிக்கிட்டு வரும் கேர்ள்ஸ்

**கைப்புள்ள**
வெளில ரொம்ப ஸ்ட்ரிக்ட் மாதிரி இருந்துட்டு உள்ளுக்குள்ள ரொம்ப மென்மையா இருக்குற காலேஜ் ப்ரொபஸர்ஸ்.

**அப்பீட்டு**
எஸ்கேப்

**கந்தசாமி**
விக்ரம் கந்தசாமி படத்துல ஒரு லேடி கெட் அப்ல வருவாரே, அந்த சாயல்ல இருக்குறவங்க.

**பல்ப் அடிச்சுட்டாண்டா**
நல்லா மாட்டிக்கிட்டான்.

**வாய்லியே வட சுட்டுக்கினு**
சும்மாவே ஆ, ஊன்னு பேசிக்கிட்டு ஒண்ணுமே செய்யாம இருப்பது.

**எம்ட்டி கடைல டீ ஆத்திக்கிட்டு இருந்தாம்பா**
ஃபிகருங்க இல்லாத இடத்துல சும்மா நிக்கறது.

**ஜட்ஜ் ஜமக்காளம்**
எல்லாத்துக்கும் நியாயம் அநியாயம்ன்னு பேசுபவன்.

**ஜட்கா**
நார்த் இண்டியன்

**ஜுஜுபி**
இது உங்களுக்கே தெரியும்ல!

**மாங்கா**
சொல்வதை சட்டென புரிந்துகொள்ளாத ஸ்டூடன்ட்.

**கிளம்பு, காத்து வரட்டும்**
நீ போர் அடிச்சது போதும்.



இதையெல்லாம் கஷ்டப் பட்டு கேள்விபட்டு, சட்டு, புட்டு ன்னு தொகுத்து கொடுத்த, எத்திராஜ் கல்லூரி மாணவி அபிநயாவுக்கு தேங்க்ஸ்! காலேஜ்ல சேரப் போற பசங்க, இதை சமர்த்தா மனப்பாடம் பண்ணிடுவீங்க இல்லையா?

தொகுப்பு: நளினி சம்பத்குமார்

# வாய்லியே வடை சுடறாண்டா!

## விட்டமின் கதை

சுமியைப் பற்றி நினைக்கும்போதே வயிற்றைக் கலக்கியது மீனாட்சிக்கு. காலேஜ்ல படிக்கிற பெண், ஒரு நாளைப் போல தினமும் லேட்டா வந்தா? கணவரிடம் சொல்லவும் தயக்கமாய் இருந்தது. காலேஜில் ஸ்பெஷல் க்ளாஸ் எதுவும் இல்லை. தெரிந்த தோழிகள் வீட்டுக்கும் போகவில்லை.

அண்ணாசாலையில் எம்.எம். ப்ளாசாவில், இவளுடைய ஸ்கூட்டியைப் பார்த்ததாக சிலர் கூறவும் மீனாட்சி இன்னும் மிரண்டு போனாள். அங்குள்ள காஃபி ஷாப்பிலும், ஐஸ்க்ரீம் பார்லரிலும் கல்லூரி மாணவர்கள் ஜோடி சேர்ந்து, அட்டகாசம் செய்வதை இவளே பல தடவை நேரில் பார்த்திருக்கிறாள். சுமியிடம் அன்று வெளிநாட்டு சென்ட் வாசனை வரவும் இவள் நொறுங்கியே போய்விட்டாள். இனியும் தாமதித்தால் அனர்த்தமாகிவிடும்!

மறுநாள், மாலை ஏழு மணியளவில் எம்.எம். ப்ளாசா வாசலிலேயே மகளை கையும் களவுமாகப் பிடித்துவிட்டாள். இருவருமாக வீட்டுக்கு வந்ததும் 'பிலுபிலு' என்று பிடித்துவிட்டாள்.

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

இவள் ஓய்ந்ததும் சுமி வருத்தச் சிரிப்புடன் ''ஏம்மா, காலேஜ் கேர்ள்ஸ்னாலே தப்பாத்தான் நடந்துப் பாங்களா? நான் அங்கே ஒரு பியூட்டி பார்லரில் பார்ட் டைம் வேலை பார்க்கிறேம்மா. அமெரிக்காவில் மாணவர்கள் பகுதி நேர வேலை பார்ப்பதன் நலன்களைப் பற்றி, அப்பா, 'எகனாமிக் டைம்ஸி'ல் எழுதியிருந்த கட்டுரையைப் படித்ததும் கிடைத்த ஐடியாதான் இது.

''அடுத்த மாசம் உங்க இருபத்தைந்தாவது 'வெட்டிங் - டே' வருதே. அப்போ உங்களுக்கு ஸர்ப்ரைஸ் பரிசுடன் சொல்லலாம்னு நினைச்சேன். தட்ஸ் ஆல்'' என்றபடி தாயின் மடியில் சாய்ந்துகொண்டு கண்ணடித்தாள். ●

லலிதா விஸ்வநாதன்

## சுமியா இப்படி?






அன்பு வாசகியர்களே...

எத்தனை நாளாச்சு உங்களையெல்லாம் பார்த்துப் பேசி? இதோ வருகிறோம் உங்களைத் தேடி. உங்களுடன் அளவளாவி, இனிமையாகப் பொழுதுபோக்கி, பரிசுகள் தந்து மகிழ வருகிறோம். மங்கையர் மலரை மேம்படுத்த உங்களை நாடி வருகிறோம்!

## இம்மாத சந்திப்பு இடங்கள் :

| ஊர் | : பண்ருட்டி |
|---|---|
| தேதி | : 12.06.2010 (சனிக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை |
| இடம் | : ஸ்ரீவாசவி திருமண மண்டபம் (கன்னிகா பரமேஸ்வரி கோயில் எதிரில்) காந்தி ரோடு, பண்ருட்டி |

| ஊர் | : சிதம்பரம் |
|---|---|
| தேதி | : 12.06.2010 (சனிக்கிழமை) |
| நேரம் | : மதியம் 3 மணி முதல் மாலை 6 மணிவரை |
| இடம் | : திருமூலம் பதஞ்சலி யோக மந்திராலயம் 57/140, கிழக்கு ரதவீதி (இரண்டாவது மாடி), சிதம்பரம் |

| ஊர் | : கடலூர் |
|---|---|
| தேதி | : 13.06.2010; (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை |
| இடம் | : ஜெயப்ரியா கெஸ்ட் ஹவுஸ் (கான்ஃப்ரன்ஸ் ஹால்), கிருஷ்ணாலயா தியேட்டர் பின்புறம், 14/1, பஸ் நிலையம் அருகில், கடலூர் |

| ஊர் | : திண்டிவனம் |
|---|---|
| தேதி | : 13.06.2010 (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : மதியம் 3 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : இராஜராஜன் திருமண மஹால், 36/85, மரக்காணம் ரோடு, நாகலாபுரம், (பிலோமினாள் பெண்கள் மேல்நிலைப் பள்ளி எதிரில்), திண்டிவனம் |

| | |
|---|---|
| ஊர் | : திருக்கோவிலூர் |
| தேதி | : 19.06.2010 (சனிக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை |
| இடம் | : ஸ்ரீ ஸ்ரீ குருராஜர் திருமண மண்டபம், கடலூர் மெயின் ரோடு, கீழையூர், திருக்கோவிலூர். |

| | |
|---|---|
| ஊர் | : திருவண்ணாமலை |
| தேதி | : 19.06.2010 (சனிக்கிழமை) |
| நேரம் | : மதியம் 3 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : ஆத்திநாட்டார் சமுதாய மண்டபம், 77. சன்னிதி தெரு, திருவண்ணாமலை. |

| | |
|---|---|
| ஊர் | : காட்பாடி |
| தேதி | : 20.06.10 (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை |
| இடம் | : அஜந்தா மஹால், 5, 6வது மேற்கு குறுக்கு ரோடு, கழிஞ்சூர் ரோடு, காந்திநகர், காட்பாடி, வேலூர் - 6 |

| | |
|---|---|
| ஊர் | : அரக்கோணம் |
| தேதி | : 20.06.10 (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : மதியம் 3 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : டி.கே.சுரேஷ் மஹால், ஆர்யாஸ் ஹோட்டல் மாடியில் 59, காந்தி ரோடு, சுவால்பேட்டை, அரக்கோணம் |




**ஒவ்வொரு ஊரிலும் தங்கள் வருகையை உறுதிப் படுத்தி முன் பதிவு செய்து கொள்ளும் முதல் இருபது வாசகர்களுக்கு. நிகழ்ச்சியின்போது சிறப்புப் பரிசுகள் கொடுக்கப்படும்!**

**முன்பதிவுக்கு : 99400 74670**

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!





பால், சர்க்கரை கலக்காமல் 'டீ'யில் தேன் கலந்து சாப்பிடலாம். அருகம்புல் கஷாயம், பால் கலக்காத டீ இந்த இரண்டும் உடலில் உள்ள நச்சுப் பொருள்களை நீக்கும் குணம் உடையவை.

- வே.சித்ரா, திருவண்ணாமலை.

எங்கள் ஊரிலுள்ள ஒரு காய்கறிக் கடையில் நாங்கள் வாங்கிய தேங்காயில், கடையின் பெயரைக் கொண்ட ரப்பர் ஸ்டாம்ப்பால், சீல் அடித்துக் கொடுத்தார். விசாரித்தபோது, தேங்காய் அழுகலாக இருந்தால் வேறு நல்ல தேங்காயை மாற்றி வாங்கிக் கொள்வதற்கு வசதியாகத்தான் இந்த முறையைக் கடைப்பிடித்து வருவதாகக் கூறினார். எல்லாக் கடைக்காரர்களும் இதைப் பின்பற்றலாமே!

- ஆர்.பிரசன்னா, ஹூப்ளி.

வெயிலில் அலையும் பெண்களுக்கு முகமும், உடலும் கறுத்துவிடும். தினமும் கேரட் ஜூஸில் தேன் கலந்து சாப்பிட்டால், முகம் பொலிவு பெறும்.

- எஸ். லோகநாயகி, ஈரோடு.

பொது இடங்களில், விலையுயர்ந்த புத்தம் புதிய காலணிகளை அணிந்துச் செல்பவர்கள், இரண்டு வெவ்வேறு இடங்களில் காலணிகளை விட்டுச் சென்றால் காலணிகள் களவு போவதைத் தடுக்கலாம்.

- லக்ஷ்மி சுப்ரமணியம், மதுரை.

மூட்டு வலி, கை கால் வலி, அடிக்கடி காய்ச்சல் போன்றவற்றால் பாதிக்கப்படுபவர்கள் சிவாலயத்தில் உள்ள, ஜுர தேவர் சன்னிதியில் வேண்டிக்கொண்டால், பூரண குணம் கிடைக்கும்.

- ஆர். வனஜா, ஸ்ரீவில்லிபுத்தூர்

அடிக்கடி நகங்களுக்கு நெயில் பாலீஷ் போடக் கூடாது. நகங்கள் சுவாசிப்பது முக்கியம். எப்போதாவது விசேஷங்களுக்கு போட்டுக் கொண்டு வந்தவுடன் அதை பெட்ரோல், ஆல்கஹால் போட்டு எடுக்கவும். நெயில் பாலீஷ் ரிமூவர் அவ்வளவு ஆரோக்கியமானதல்ல.

- என்.கலைவாணி, ராசிபுரம்.

எப்போதும் சமையலறையில் ஒரு ஸ்க்ரூ ட்ரைவர் வைத்திருப்பது நல்லது. குக்கரின் கைப்பிடி ஸ்குரூ கழன்று அசையும்போதெல்லாம் ஸ்குரூவை 'டைட்' செய்து கொண்டால், கைப்பிடி சேதாரம் ஆகாது!

-த.இராஜேஸ்வரி, சாத்தூர்.

சில வீடுகளில், வேலைக்காரிதானே பாத்திரம் தேய்க்கிறாள் என தேவையில்லாமல் பாத்திரங்களை அதிகமாகப் பயன்படுத்துவார்கள். இப்படிப் பாத்திரங்களைப் போடுவதால் நஷ்டப்படுவது நம் வீட்டுத் தண்ணீரும், சபீனாவும் கூடத்தான்.

- என்.ரத்னா, சைதாப்பேட்டை.

பலவகைப்பட்ட காய்கறிகளைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். கடுகு, க. பருப்பு, உ. பருப்பு, சிவப்பு மிளகாய், சிறிது தனியா சேர்த்து வறுத்து, அதனுடன் காய்கறிகளைச் சேர்த்து வதக்கி, உப்பு, புளி சேர்த்து கரகரவென அரைக்கவும். மாறுதலான சுவையுடன் மல்ட்டி வைட்டமின் சட்னி தயார்!

- பா.கஸ்தூரி பாலன், மதுரை-14.

# கல்விக்கடன்

## எல்லோருக்கும் சாத்தியமா?

**த**ன் மூத்த மகனை டிப்ளமோ படிக்க வைத்த ராஜசேகர், அடுத்த மகன் பிளஸ் டூவில் நல்ல மார்க் வாங்கியபோது, அவனை பி.ஈ. படிக்க வைக்க ஆசைப்பட்டாலும், அதற்கு வசதி இல்லை. 'பேங்க்ல லோன் வாங்கி கொடுங்கப்பா! படிச்சு முடிச்சு வேலைக்குப்போய், நானே லோனைக் கட்டி முடிக்கறேன்' என்று மகன் சொன்ன போது, அப்பாவால் தட்ட முடியவில்லை. அருகில் இருந்த வங்கிக் கிளைக்குச் சென்று மேனேஜரைப் பார்த்து, தன் நிலைமையை உருக்கமாகச் சொன்னார். கடனுக்கு செக்யூரிட்டியாகக் கொடுக்க ராஜசேகரிடம் சொத்து எதுவும் இல்லை. ராஜசேகரின் உறவினர் ஒருவர், கியாரண்டி கையெழுத்துப் போட்ட பிறகு அவருடைய மகனுடைய நான்கு வருட பி.ஈ படிப்புக்காக இரண்டு லட்சத்து 70 ஆயிர ரூபாய் கல்விக் கடன் கிடைத்தது.

'நான் என் சம்பளத்திலிருந்து இரண்டா யிரம்போல மாதா மாதம் வட்டி கட் னேன்; இப்போது என் மகனுக்கு படிப் முடிந்து, கேம்பஸ் ரெக்ரூட் மெண்ட்டி நல்ல வேலையும் கிடைத்துவிட்ட இனிமேல் எனக்குக் கவலை இல்லை தன் சம்பளத்திலிருந்து மாதம் ஆ யிரம் ரூபாய் போல கடன் தவணை கட்ட ஆரம்பித்துவிடுவான்' என்று சந்தோஷமாகச் சொல்கிறார் ரா சேகர். ஆனால் இப்படி கல்விக் கட வாங்கி, படிப்பை முடிப்பது என்ப எல்லோருக்கும் சாத்தியமில்லை என்பதுதான் இன்றைய யதார்த்தம்.



## மௌனம் சாதிக்கும் வங்கி!

**வெ**ங்கடேசன் தன் மகள் தமிழ சிக்கு தமிழ்நாடு விவசாயப் பல்கலை கழகத்தில் பயோ டெக்னாலஜி படிக் சீட் கிடைத்தபோது ரொம்பவே சந்தோஷப்பட்டார். தன் மகளி படிப்புக்காக கோவையில் ஒரு வங்கியில் இரண்டே கால் லட்சம் ரூபாய் கல்வி கடன் கேட்டு விண்ணப்பித்தார். முதல் ஆண்டுக்கான ஃபீஸைக் கட்டிவிட் கடனுக்கு விண்ணப்பிக்கும்படி வங் தரப்பில் சொன்னதை நம்பி, இவரு எப்படியோ பணம் புரட்டி ஃபீ கட்டிவிட்டார். ஆனால் இன்றுவ பேங்க் லோன் கிடைக்கவில்லை; கே டால் வங்கி தரப்பிலிருந்து சரியான பதி இல்லை.

# கண் துடைப்பா?

## தயங்கும் வங்கிகள் தடுமாறும் மாணவர்கள்

### பயப்படும் வங்கி மேனேஜர்கள்

கூலித் தொழிலாளி கலிவரதனின் மகன் ராஜா கல்விக் கடனுக்காக ஒரு வங்கிக்கிளையை அணுகினார். கிராமத்து ஏழை குடும்பத்தின் முதல் பட்டதாரியான இவரது வேண்டுகோள், வங்கி அதிகாரிகளின் காதில் ஏறவில்லை. கால் கடுக்க வங்கிக்கிளைக்கு அலைந்ததுதான் மிச்சம். வங்கி மேனேஜர் எனக்கு கடனுக்கான விண்ணப்பம் கூடக் கொடுக்க வில்லை; ''செக்யூரிட்டி எதுவும் தரமுடியாத உங்களைப் போன்றவர்களுக்கு நாங்கள் வெறும் அரசாங்க உத்தரவை மட்டும் வைத்து இப்போது கடனைக் கொடுத்து, நாளைக்கு கொடுத்த கடன் வராமல் போனால், என்ன செய்ய? வராத கடன்களுக்கு நாங்கள் தானே பொறுப்பு'' என்று சொல்லி விட்டார்.

அனைவருக்கும் கட்டாயக் கல்வி என்று சட்டம் போடும் அரசாங்கமும், அமைச்சர்களும் வங்கிகளை மாணவர்களுக்கு கல்விக்கடன் வழங்க எந்தவித தயக்கமும் காட்டக்கூடாது என்று தொடர்ந்து வலியுறுத்தி வருவதன் பயனாக வங்கிகளும் சமீபகாலமாக கல்விக்கடன் கொடுப்பதை அதிகரித்துள்ளன. இருந்தாலும் வங்கிகள் தரப்பில் கல்விக்கடன் வழங்குவது குறித்து ஒருவித தயக்கம் இருப்பதை மறுக்க முடியாது.

### கடன் தர என்ன தயக்கம்?

பொதுவாக ஒரு வாகனக் கடனோ, வீட்டுக் கடனோ இல்லை இதர ரக கடன்களோ வாங்கினால், கடன் வாங்கியவர், அடுத்த மாதத்திலிருந்து கடன் தவணையை திருப்பிச்செலுத்த ஆரம்பித்து விடுவார். ஆனால் கல்விக் கடன் வாங்கிய மாணவர்கள் படித்து முடித்து, வேலை கிடைத்த ஆறாவது மாதத்திலிருந்து கடனை திருப்பிச் செலுத்த ஆரம்பிக்க வேண்டும். இல்லையெனில் படிப்பு முடித்த ஓராண்டு முடியும்போது, வேலை கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் ரீபேமெண்ட் தவணை ஆரம்பிக்க வேண்டும். நான்கு வருட இன்ஜினியரிங் படிப்பு முடிகிற போது வேலை வாய்ப்புகள் எப்படி இருக்கும் என்பதை இப்போதே உறுதியாக சொல்ல முடியாது. படித்து முடித்து, வேலை கிடைத்தாலும், அந்த மாணவருக்கு எவ்வளவு



சம்பளம் கிடைக்கும், அதைக் கொண்டு அவரால் கடன் தவணையை திருப்பிச் செலுத்த முடியுமா? (நான்கு வருடங்களில் கடனுக்குக் கணிசமாக வட்டி சேர்ந்திருக்கும்) வேலை கிடைத்த மாணவரது நிலைமையே இப்படி என்றால், வேலை கிடைக்காமல் போனால் அவரது நிலைமை என்ன? வங்கிக் கடனைத் திருப்பிச் செலுத்துவது பற்றி அவரால் யோசித்துப் பார்க்க முடியுமா?

## ரிஸ்க் எடுத்தால் தப்பில்லை!

“படித்த, நல்ல வேலை பார்க்கும் பின்புலம் கொண்டவர்களின் பிள்ளைகளுக்கு கல்விக் கடன் கிடைப்பதில் சிக்கல் அதிகமில்லை; கிராமப் புற மாணவர்களுக்கும், தொழிற்கல்வி மற்றும் மேற்படிப்புக்குச் செல்லும் ஏழைப் பெற்றோர்களின் முதல் தலைமுறை பிள்ளைகளுக்கும்தான் வங்கிகள் கல்விக் கடன் அளிக்க மறுக்கின்றன. இவர்களுக்கு கியாரண்டி அளிக்க தக்கவர்கள் கிடைப்பதில்லை. பொதுவாக வங்கிகள் தொழில் முனைவோர்க்கு கடன் அளிக்கும்போது ரிஸ்க் எடுத்துக்கொள்வது போலவே கல்விக் கடன் வழங்கும்போது ரிஸ்க் எடுக்கத் தயங்கக் கூடாது. இதை நாட்டின் எதிர்கால வளர்ச்சிக்கான முதலீடாகத்தான் பார்க்க வேண்டும். 'கல்விக் கடன் வாங்குகிறவர்கள் பின்னால் கடனை திருப்பிச் செலுத்தாமல் போனால்' என்று கேட்கிறார்கள். விதிகளை மீறியும் அரசியல் அழுத்தம் காரணமாகவும் அரசியல்வாதிகளுக்கும், தொழில் முதலைகளுக்கும் கொடுத்த கடன்களில் கோடிக்கணக்கில் வாராகடன் இருக்கும்போது மாணவர்களுக்கு மேற்படிப்புக்காக கடன் கொடுக்க மட்டும் ஏன் மறுக்க வேண்டும்? சொல்லப்போனால், இன்று வங்கிகள் அளித்துள்ள கடனின் அளவில் மொத்த கல்விக்கடனின் அளவு 2% கூட இல்லை என்பதை கவனிக்க வேண்டும்'' என சுட்டிக்காட்டுகிறார் ஒரு ஓய்வு பெற்ற வங்கி உயர் அதிகாரி.




## கடன் இன்ஷ்யூரன்ஸ் திட்டம்தான் ஒரே தீர்வு!

அரசியல் குறுக்கீடுகள் இல்லாமல் வங்கி அதிகாரிகளை நேர்மையான முறையில் செயல்பட அனுமதிக்க வேண்டும். நியாயமான விதிமுறைகளின் படி, நேர்மையான பரிசீலனைக்குப் பிறகு வழங்கப்படும் கல்விக்கடன்கள் திரும்ப வராமல் போனால், வங்கி மேனேஜர்கள் தண்டிக்கப்பட மாட்டார்கள் என்ற ஆரோக்கியமான சூழ்நிலை ஏற்பட்டால் வங்கிகள் தகுதியானவர்களுக்கு கல்விக் கடன்கள் வழங்கத் தயங்கமாட்டார்கள். அதையும் மீறி வராமல் போனால், அந்த நஷ்டத்தை அரசாங்கமே ஈடு செய்யட்டும். அல்லது பிரத்யேக வராத கடன் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தை அறிமுகப்படுத்தட்டும். இதுவே இந்தப் பிரச்னைக்குச் சரியான தீர்வு.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி



டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

கல்வியில் இன்ஜினியரிங் தெரியும். மெடிக்கல் தெரியும் இரண்டும் இணைந்த படிப்பு தெரியுமா? அதுதான் பயோமெடிக்கல் இன்ஜினியரிங்.

மருத்துவத் துறையில் நவீன தொழில் நுட்பங்களையும் யுக்திகளையும் புகுத்தி மருத்துவத்தை இன்னும் நவீனமாக்குவதும், மேம்படுத்துவதும் பயோமெடிக்கல் இன்ஜினியரிங் கில் சாத்தியமாகிறது.




பயோமெட்டீரியல், மெடிக்கல் இமேஜிங், டிஷ்யூ இன்ஜினியரிங், மருத்துவத்துக்குத் தேவையான உபகரணங்கள் உருவாக்குதல், செயற்கையான உடல் உறுப்புகள் செய்தல் இவையெல்லாம் இந்தக்கல்வியில் கற்றுத் தரப்படுகின்றன.

தற்சமயம் பிரபலமாகி வரும் பயோமெடிக்கல் மாணவர்களுக்கு ஆராய்ச்சி, மேற்படிப்பு, வேலை வாய்ப்புகள் அதிகரித்து வருகின்றன. மேல் நாடுகளில் இன்னும் அதிகமாக டிமாண்ட் அதிகரித்து வருகிறது. இத்துறையில் இன்னும் ஆசிரியர்களின் எண்ணிக்கையும் அதிகமாக வேண்டும்.

- பத்மினி பட்டாபிராமன்

140ம் பக்க தொடர்ச்சி...

# (க்ரூப் டிஸ்கஷனில் நீங்கள் எப்படி?)

## டிப்ஸ்

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

★ குழு விவாதத்தின் தொடக்கத்திலேயே கருத்துகளைக் கூறுவதில் சில வசதிகள் உண்டு. அவை ஃப்ரெஷ்ஷாக, அதாவது மற்றவர் கூறாததாக இருக்கும். நீங்கள் ஒரு சிறந்த தலைவராக இருக்கத் தகுதியானவர் என்ற எண்ணத்தையும் ஏற்படுத்துகிறீர்கள்.

★ தலைப்பு எப்படிப்பட்டதாக வேண்டுமானாலும் இருக்கலாம். அதன் சாதக, பாதகங்களைத்தான் நீங்கள் விவாதிக்க வேண்டுமே தவிர, அந்தத் தலைப்பு கொடுக்கப்பட்டிருக்க வேண்டுமா, வேண்டாமா என்பதில் இறங்கக் கூடாது. அது உங்கள் மதிப்பெண்களைக் குறைக்கும்.

★ நல்ல, புதிய கருத்துகளை நீங்கள் கூறுவது அதிக மதிப்பெண்களைப் பெற்றுத் தரும். அதைவிட முக்கியம் அவற்றை நீங்கள் எந்த அளவு தெளிவாகவும் அழுத்தமாகவும் (ஆவேசமாக அல்ல) வெளிப்படுத்துகிறீர்கள் என்பது.

★ ஒரு தலைப்புக்கு இரண்டு நேரெதிர் கோணங்கள் இருந்தால் இரண்டில் சாதக பாதகங்களையும் கூறலாம். ஆனால் நீங்கள் எதை அதிகம் ஆதரிக்கிறீர்கள் என்பதைத் தெளிவாகக் கூற வேண்டும், அதற்கான காரணத்துடன்.

★ நேர அவகாசம் குறைவு என்பதால் அதிகப்படியான பொறுமை தோதுபடாது. அதற்காக அவசரக்காரர் என்ற பெயரையும் எடுத்துவிடக் கூடாது. வேகமாகவும் விவேகமாகவும் செயல்படுவது மிக முக்கியம். குழு விவாதத்துக்குக் குறிப்பிட்ட நேரம் ஒதுக்கப்பட்டிருந்தால், நீங்கள் அதிகப்படியான நேரத்தை எடுத்துக் கொள்வது அதிகப்பிரசங்கித்தனம். என்னதான் நல்ல கருத்துகளைப் பேசினாலும், இதனால் உங்கள் மதிப்பெண் நிச்சயம் குறையும்.

★ குழுவில் பிறரை நீங்கள் எப்படி நிர்வகிக்கிறீர்கள், சமாளிக்கிறீர்கள் என்பதெல்லாம்கூட கண்காணிக்கப்படுகிறது. எனவே, பிறருக்கு உதவும் வகையில், நீங்கள் குழுவைச் சீரமைத்தால் உங்கள் வெற்றி எளிதாகும்!

- ஜி.எஸ்.எஸ்.





என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

அடுத்த இதழ்...

முழுக்க முழுக்க வாசகியர்களே அசத்தும்

## டிபிகல் மங்கையர் மலர் ஸ்பெஷல்!




அன்பு வாசகியரே...
நீங்க பிஸினஸ்
செய்யறவங்களா? உங்க
வியாபாரத்தை மங்கையர் மலரில்
வரி விளம்பரம் செய்ய விரும்பறீங்களா?
மேலும் விவரங்களுக்கு
தொடர்பு கொள்ளுங்க
044-4343 8877



என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

புத்தகம் 2





# மை டியர் ஸ்டூடன்ட்ஸ்...

வாழ்க்கையில், முதல் சாதனைக் கட்டமான பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, கண்ணில் ஒளியோடும், மனத்தில் துணிவோடும் அடுத்த கட்டப் படிப்பில் காலடி எடுத்து வைக்கவிருக்கும் மாணவ மணிகளுக்கு, அன்பு வாழ்த்துகள்!

அடுத்ததாக என்ன படிக்கலாம் என்பது உங்களில் பலருக்கும் ஒரு கேள்விக்குறியாக இருக்கலாம். ஏனென்றால், இப்போது புதிதுப் புதிதாக பல படிப்புகள் வந்தபடி இருக்கின்றன. அதற்கேற்ப பல புதிய வேலை வாய்ப்புகளும் உருவாகி வருகின்றன.

இக் 'கல்வி கைடு' புத்தகத்தில், பல்கலைக் கழகங்களின் சிறப்புகள் முதல் பார்ட் டைம் பயிற்சிகளின் செய்திகள் வரை பலவற்றையும் உங்களுக்குத் தொகுத்தளித்திருக்கிறோம்.

'ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷலாக' மலர்ந்துள்ள இப்பக்கங்களிலிருந்து உங்கள் மனசுக்குப் பிடித்தமான அதேசமயம் பிரகாசமான வாய்ப்பு உள்ள ஏதேனும் ஒரு துறையை, உங்களால் தேர்வு செய்ய முடிந்தால் அது எங்களுக்குக் கிடைத்த வெற்றியாகக் கருதுவோம்.

இந்தக் 'கல்வி கைடு' விளம்பரதாரர் பகுதியில், இடம் பெற்ற, பல்கலைக்கழகங்களுக்கும், கல்லூரிகளுக்கும், பயிற்சி நிறுவனங்களுக்கும், ஏனைய பங்கேற்பாளர்களுக்கும் மாணவ சமுதாயம் சார்பாக நன்றி.

உங்கள் எதிர்காலம் சிறக்க
வாழ்த்துகள்!

அனுஷா நடராஜன்



உள்ளே...





ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

A to Z கல்வி கைடு!



நடிகர் கார்த்தியை சந்திக்க பல யூத்ஸ் அன்பு அப்ளிகேஷன் போட்டபடி க்யூவில் நிற்க, கேர்ள்ஸ் டீம் சார்பில் நான்கு மாணவிகள், பாய்ஸ் டீம் சார்பில் நான்கு மாணவர்கள் என சைடு கட்டி, கார்த்தியின் வீட்டுக்கு முன்னால் சைலன்டாக ஆஜர் ஆனோம். தமிழ் திரை உலகில் நான்கு பெரிய நட்சத்திரங்கள் (சிவக்குமார், சூர்யா, ஜோதிகா, கார்த்தி) ஜொலிக்கும் வீடு என்பதற்கான பந்தா, துளியும் இல்லாமல் அழகாக, அமைதியாக இருந்தது அந்த வீடு.

# "எங்கச் செல்லப் பையா!"



ஜிலீர் சிரிப்புடன் டக்கென நுழைந்தார் இளைஞர்களின் லேட்டஸ்ட் ஹார்ட் த்ராப் கார்த்தி.

**கார்த்தி:** ஹாய், ஹாய்... எல்லாரும் எப்படி இருக்கீங்க?

**கேர்ள்ஸ் அண்ட் பாய்ஸ் கோரஸாக:** சூப்பரா இருக்கோம்.

**கேர்ள்ஸ் டீம் தொடுத்த முதல் கேள்வி:** பெரிய பெரிய படிப்பெல்லாம் படிச்சுட்டு ஏன் சினிமாவுக்குள்ள வந்தீங்க?

**கார்த்தி:** பெரிய பெரிய படிப்பெல்லாம் படிச்சிருந்தாலும் என் கனவு, என் ஆசை எல்லாமே சினிமா மேல மட்டும்தான் இருந்தது. க்ரியேட்டிவிட்டின்னு சொல்லுவாங்களே ஆங்கிலத்துல, அது மேல ரொம்ப ஈர்ப்பு. படைப்புத்திறன் இருந்தா வாழ்க்கை போர் அடிக்கவே அடிக்காது, ஸோ... நான் சினிமாவுக்குள்ள நுழைஞ்சேன்.

ஓவர் டூ பாய்ஸ்...

**பாய்ஸ் ஒரே பாய்ச்சலாக:** உங்களோட முதல் க்ரஷ்?

**கார்த்தி:** அதெல்லாம் தேர்ட் ஸ்டான்டர்ட் படிக்கும்போதே வந்துடுச்சு. ஆனா பாருங்க, அஞ்சாம் வகுப்பு படிக்கற வரைக்கும்தாங்க நான் கோ எட்ல படிச்சேன். அதுக்கப்புறம் பாய்ஸ் ஒன்லி ஸ்கூல்லதான் படிச்சேன்...

**கோரஸாக:** அச்சச்சோ... ரொம்ப ஃபீல் பண்றீங்களா ஸார்?

**பாய்ஸ்:** சரி, ஸ்கூல் லைஃப் விடுங்க காலேஜ்ல எப்படி?



**கார்த்தி:** என்னப்பா வம்பா போச்சு, கிரஷ்ஷவிட மாட்டீங்களா? சரி, காலேஜ்ல நான் படிச்சது மெக்கானிக்கல் இன்ஜினியரிங். ஒரு பொண்ணுகூட இல்லாத க்ளாஸ்பா அது... அவ்ளோ ஏன், ஒரு லேடி ப்ரொஃபஸர்கூட கிடையாதுன்னா பார்த்துக்குங்களேன்!

**கேர்ள்ஸ்:** ராகிங் அனுபவங்கள் பத்தி?

**கார்த்தி:** நான் ஃபர்ஸ்ட் இயர் படிக்கும்பொழுது நடந்த தமாஷ் இது! நேராபோய், ஒருசீனியர்கேர்ள்ஸ்டூடன்ட் கிட்ட ப்ரபோஸ் பண்ணச் சொல்லி சொன்னாங்க. அதுவும் எப்படி, காலேஜ் ப்ரொஃபஸருங்க முன்னாடி! ஆனா, நாங்க பண்ண ராகிங்,செம ஃபன்!

ஒருநாள் லேடி ப்ரொஃபஸர் க்ளாஸ் எடுக்க வர்றாங்கன்னு தெரிஞ்சு எங்க பசங்க, க்ளீனா போர்ட் எல்லாம் துடைச்சு வெச்சு, டஸ்டர் எல்லாம் மேல எடுத்து வெச்சு, சாக்பீஸ் கூட அழகா டேபிள்ல வெச்சிருந்தாங்க. வந்த ப்ரொஃபஸருக்கு ஒரே இன்ப அதிர்ச்சி... அவங்க ரொம்ப சந்தோஷமா சாக்பீஸ் எடுத்து போர்ட்ல எழுத ஆரம்பச்சாங்க, சாக்பீஸ் 'ட்வயிங்'ன்னு மடங்கிப் போச்சு. ஏன் சொல்லுங்க?

**கேர்ள்ஸ்:** என்ன சார் கேள்வி கேட்க வந்தவங்ககிட்டேயே கேள்வி கேட்கறீங்களே? நீங்களே சொல்லுங்க...

**கார்த்திக்:** நம்ம பசங்க சாக்பீஸுக்குப் பதிலா, சிகரெட்ட இல்ல மடக்கி வெச்சிருந்தாங்க!

**பாய்ஸ்:** உங்களோட பாடி ஃபிட்னஸுக்கான ரகசியம் என்னவோ?

**கார்த்தி:** டான்ஸ் க்ளாஸ் ரெகுலரா போவேன். அப்புறம் பாடில ஒரு ஃப்ளெக்ஸிபிலிடி இருக்கணும்னு களரி கத்துக்கிட்டேன். ஒவ்வொரு படத்துலயும் எனக்குக் கிடைக்குற ரோலுக்கு ஏத்தா மாதிரி அத்லெடிக் கோச்சிங் எடுத்துக்குவேன்.




**கேர்ள்ஸ்:** டான்ஸ் சரி, உங்கப் பேரு உள்ள ஒருத்தரு பெரிய சிங்கரா இருக்காரு. நீங்க பாட்டுல எப்படி?

**கார்த்தி:** சின்ன வயசுல கர்நாடக சங்கீதம் கத்துக்கிட்டேன். ஈதம் வரைக்கும் வந்தேன். இப்போகூட டைம் கிடைக்கும் பொழுதெல்லாம் மாசத்துல ஒரு நாளாவது சங்கீதம் கத்துக்கறேன். மெலடி சாங் சினிமாவுக்காகப் பாடுவேன். நிச்சயமா குத்து பாட்டு பாடமாட்டேன்.

**பாய்ஸ்:** உங்களை ரொம்ப சர்ப்ரைஸ் செஞ்ச விஷயம்?



**கேர்ள்ஸ் டீம்:**
திவ்யா, ஹரிப்ரியா, சுகன்யா, காயத்ரி
**பாய்ஸ் டீம்:**
பிரகாஷ், விக்னேஷ், அஸ்வின், பழனி

**கார்த்தி:** என் தங்கையும் சரி, என் அண்ணியும் சரி அம்மாவா ஆன பிறகு, அவங்களோட ஃலைப், நேரம், விருப்பு, வெறுப்பு எல்லாத்தையும் அந்தக் குழந்தையைச் சுத்தியே டெடிகேட்




பண்றாங்க. அதைப் பார்க்கும்போது ரொம்ப சர்ப்ரைஸா இருக்கு. அப்போதான் நம்ம அம்மா, நமக்காக எவ்வளவு செஞ்சிருப்பாங்கன்னு எனக்கு நினைக்கத் தோணுது... எங்களுக்கு என்ன சாப்பிடப்பிடிக்குமோ அதுதான் அம்மா சமைப்பாங்க. ஆனா, 'அம்மாவுக்கு எந்தப் பாட்டு பிடிக்கும், என்ன சமையல் பிடிக்கும்'னு இதுவரை அம்மாக்கிட்ட நான் கேட்டதில்ல. தாயின் தன்னலமற்ற அந்தத் தன்மைதான் என்னை ரொம்ப சர்ப்ரைஸ் பண்ற விஷயம்!

**கோரஸாக:** சரி, எப்பவாவது அம்மாவுக்குன்னு சமைச்சுக் கொடுத்திருக்கீங்களா?

**கார்த்தி:** ஓ! நான் யு.எஸ்ல படிக்கும்பொழுது எல்லாமே செல்ஃப் குக்கிங்தான். அம்மா வந்தபொழுது, சிக்கன் பிரியாணி செஞ்சு அசத்திட்டோம்ல. என் கஸின் குழந்தை, அந்த சிக்கன் பிரியாணிய சாப்பிட்டு என்னை சிக்கன் சித்தப்பான்னுதான் கூப்பிடும்னா பார்த்துக்குங்க... இந்த ஐயாவோட கை மணம் எப்படின்னு?

**கேர்ள்ஸ்:** நல்லவேளை சார். சில்லி சிக்கன் செய்திருந்தீங்க... சில்லி சித்தப்பா ஆகியிருப்பீங்க?

**கார்த்தி:** எங்கிட்டேவா? இதானே வேணாங்கிறது.



**கேர்ள்ஸ்:** சரி, உங்க தியா உங்களை எப்படி அழைப்பாங்க?

**கார்த்தி:** கார்த்தின்னு ஸ்டைலா கூப்பிடுவா.

**பாய்ஸ்:** உங்களை அடிக்கடி எங்க பார்க்கலாம்?

**கார்த்தி:** சத்யம் தியேட்டர்ல சத்தியமா பார்க்கலாம். அதே மாதிரி ஈ.சி.ஆர் ரோடுலேயும் ஈஸியா பார்க்கலாம்.

**கேர்ள்ஸ்:** சரி, உங்க ஈமெயில் ஐ.டி ப்ளீஸ்?

**கார்த்தி:** actorkarthi@gmail.com

**கோரஸ்:** ஈமெயில் போட்டா ரிப்ளை பண்ணுவீங்களா?

**கார்த்தி:** நிச்சயமா பண்ணுவேன்.

**கோரஸ்:** சரி, யூத்துக்கான உங்க அட்வைஸ்?

**கார்த்தி:** அட்வைஸ் பண்ற அளவுக்கு நான் ஒண்ணும் பெரிய ஆளெல்லாம் இல்லீங்க. ஒரு மெஸேஜ் வேணா சொல்லுவேன். Do what you like Follow your dreams அவ்வளவுதான்

செல்ல 'பையா'வுக்கு பை காட்டியபடியே, செமெஸ்டர் எக்ஸாமை நினைத்து மனமில்லாமல் கலைந்தனர் நம்ம மங்கையர் மலர் யூத் டீம்...

- நளினி சம்பத்குமார்

அட்டைப்படம், படங்கள்: யோகா

## A to Z கல்வி கைடு!

கலசலிங்கம் பல்கலைக்கழகம்,
கிருஷ்ணன்கோவில்.



# கனவு நனவாகி...

"தென் தமிழகத்தில் முதன் முதலாக பல்கலைக்கழக அந்தஸ்து பெற்றது எங்கள் உயர் தொழில் நுட்பக் கல்வி நிலையம். இதனைச் சுற்றிலுமுள்ள இருநூற்றுக்கும் மேற்பட்ட கிராமங்களின் மாணவ - மாணவியர் முழுமையாகப் பயனடைந்து வருகின்றனர். வெளி மாவட்ட, வெளி மாநில மாணவ மாணவியரும் பல்கலையின் கல்வித்திறன் ஆற்றல் அறிந்து வந்து சேர்கின்றனர்.

எட்டாவது தேர்ச்சி பெற்றவர் இங்கு ஐ.டி.ஐ. சேர்ந்து பயன் அடையலாம். எட்டாம் வகுப்பு முதல், கல்லூரியில் இளங்கலை தேர்ச்சி பெற்றவர்கள் வரை இங்கு வந்து உயர் கல்வி மற்றும் தொழிற்கல்வி பயிலலாம். முதுகலை தேர்ச்சி பெற்றவர்கள் ஆய்வுப் படிப்புகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளலாம். காரணம், கலசலிங்கம் பல்கலைக்கழகத்தின் ஆய்வுத் துறை சர்வ தேசத் தரம் வாய்ந்தது. என் இளமைக் காலத்தில் நான் கண்ட கனவு, தற்போது நனவாகி நிகழ்ந்து வருகிறது!'' எனச் சொல்கிறார் கலசலிங்கம் பல்கலைக்கழக வேந்தர், இந்தப் பல்கலைக்கழகத்தைத் துவங்கிய சுதந்திரப் போராட்ட வீரர், தி.கலசலிங்கம்.



# "உங்கள் கனவு இங்கே நனவாகும்"

– தி.கலசலிங்கம்,
வேந்தர், கலசலிங்கம் பல்கலைக்கழகம்





## பாய்ந்து முன்னேறும் பயோடெக் ஆராய்ச்சி

தேவை ப்ளஸ் டூவில் 60% மதிப்பெண். விஞ்ஞானம் மற்றும் கணிதம் முக்கியப் பாடம்.

பி.டெக். பயோ டெக்னாலஜி, பி.டெக். கெமிக்கல் இன்ஜினியரிங் நான்கு வருடம்.

எம்.டெக். பயோ டெக்னாலஜி - இரண்டு வருடம்

ஃபார்மசூட்டிகல் பயோ டெக்னாலஜி - இரண்டு வருடம். பி.ஃபார்ம் தேறியவர்கள், பி.டெக். பயோ டெக்னாலஜி தேறியவர்கள் இதில் சேரலாம்.

கலசலிங்கம் பல்கலையில் பி.டெக். பயோடெக்னாலஜி கடந்த மூன்று வருடங்களாக நூறு சதம் தேர்ச்சி! வேலை வாய்ப்பு நூறு சதம்!



## பல்கலைக்குள் மௌனப் புரட்சி!

## அரிய நூல்கள்; பெரிய பலன்கள்

கலசலிங்கம் பல்கலைக்கழகத்தின் மத்திய நூலகம் பிரமாண்டமாக அமைந்துள்ளது. அதன் இயக்கம் மலைக்க வைக்கிறது. 60,000 புத்தகங்கள். ஒரே நேரத்தில் மூன்னூறு பேர் அமர்ந்து வாசிக்கக்கூடிய அளவுக்கு வசதிகள் கொண்ட மைய அரங்கு. அதில் நிலவும் நிசப்தம்.

அமெரிக்காவின் கார்னெகி மெலன் யுனிவர்சிட்டி ஐந்தாயிரம் அரிய புத்தகங்களை இந்த நூலகத்துக்கு வழங்கியுள்ளது. Universal Digital Library இங்கு அமைக்கப்பட்டுள்ளது. நூறு அல்லது ஐம்பது ஆண்டுகளுக்கு மூற்பட்ட அரிய புத்தகங்கள் பற்றிய குறிப்புகளை வலைத்தளத்தில் பதிவு செய்து, அந்தப் புத்தகப் பிரதிகளைப் பெற்றுள்ளனர். அந்த வகையில் எட்டாயிரம் அரிய புத்தகங்கள் இந்த நூலகத்துக்குக் கிட்டியுள்ளன.






மத்திய அரசு அளித்த ஐந்து கோடி ரூபாய், சர்வதேச நிறுவனங்கள் ஐந்து கோடி ரூபாய், பல்லைக் கழக நிர்வாகம் ஐந்து கோடி ரூபாய் என மொத்தம் பதினைந்து கோடி ரூபாய் திட்டத்தில் உருவாகியுள்ளது TIFAC. நெட்வொர்க் டெக்னாலஜிஸ், நெட்வொர்க் செக்யூரிட்டி, எம்பெட்டட் நெட்வொர்க்கிங், பவர் சிஸ்டம் ஆட்டோமேஷன், சாஃப்ட்வேர் டெக்னாலஜீஸ், டெக்னாலஜி மேனேஜ்மெண்ட் என ஆறு குழுக்கள் குறிப்பிட்ட பகுதிகளில் (Specific Area) பயிற்சிக்கும் ஆய்வு மேற்கொள்வதற்கும் இயங்குகின்றன என்பது இதன் சிறப்பு.

*வாய் திறந்து பேச முடியாது. செவி மடுத்து கேட்க இயலாது. இவர்கள் பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருந்தால் போதும். உயர் தொழில் நுட்பக் கல்வியான பி.டெக். படிப்பில் இணைந்து கொள்ளலாம். இவர்களுக்கு மட்டுமென தனியாக ஆறு ஆண்டுகளுக்கான பி.டெக். பாடத் திட்டம் இங்கு உருவாக்கப்பட்டுள்ளது. தெற்காசிய நாடுகளிலேயே கலசலிங்கம் பல்கலைக்கழகத்தில் மட்டுமே வாய் பேசாத - செவித் திறன் குறைவுடையோர்க்கென பி.டெக். படிப்பு உண்டு. தமிழகம் மட்டுமல்லாது, வெளி மாநிலத்தவர்களும் இதில் சேர்ந்து, பி.டெக். சிவில் இன்ஜினியரிங், கம்ப்யூட்டர் சயின்ஸ் & இன்ஜினியரிங், இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி, மெக்கானிக்கல் இன்ஜினியரிங் இவற்றுள் ஏதேனும் ஒரு பாடத்தை பயின்று வருகின்றனர்.*

## டாக்டர் பட்டம்... கெடுபிடி அதிகம்!

ஒரு பல்கலைக்கழகத்தின் ஆராய்ச்சிப் பிரிவு பலம் பெற சில வருடங்களாவது ஆகும். இந்தப் பொதுவிதி கலசலிங்கம் பல்கலைக்குப் பொருந்தவில்லை. ஆரம்பத்திலிருந்தே இங்கே பி.எச்டி மாணவர்கள் ஆராய்ச்சிகள் மேற்கொண்டு டாக்டர் பட்டங்கள் பெற்று வருகின்றனர். மத்திய அரசு அளித்த மூன்று கோடி ரூபாய் நிதி உதவியுடன் n-CARDMATH (National Centre for Advanced Research in Discrete Mathematics) எனப்படும், கணித ஆராய்ச்சி மையம் இங்கு அப்துல் கலாம் அவர்களால் துவங்கப்பட்டது. இங்கு மாணவர்களின் ஆய்வுகள் பல பரப்புகளில் விரிகின்றன.





## உலகளாவிய ஒருங்கிணைப்பு!

சர்வதேச அளவில் சிறந்து விளங்கும் கீழ்க்கண்ட பல்கலைக்கழகங்களுடன் கல்வி மற்றும் ஆராய்ச்சி சம்பந்தமாக கலசலிங்கம் பல்கலைக்கழகம் ஒப்பந்தம் செய்துள்ளது.

* கார்னகி மெலன் பல்கலைக்கழகம், அமெரிக்கா
* RWTH ஆக்கன் பல்கலைக் கழகம், ஜெர்மனி
* மல்டிமீடியா பல்கலைக்கழகம், மலேசியா
* பால் ஸ்டேட் பல்கலைக் கழகம், அமெரிக்கா
* ஒக்லஹாமா பல்கலைக்கழகம், அமெரிக்கா
* நான்கை பல்கலைக்கழகம், சீனா
* ஜார்ஜ் டவுன் பல்கலைக்கழகம், அமெரிக்கா
* INM லீபெனிஷ் பல்கலைக் கழகம், ஜெர்மனி

இதன் மூலம் இங்கு படிக்கும் மாணவர்கள் Semester Abroad என்ற படிப்பை மேற்கண்ட பல்கலைக்கழங்களில் படிக்க வாய்ப்புள்ளது. இங்கு பணியாற்றும் பேராசிரியர்கள் கல்வி மற்றும் ஆராய்ச்சி சம்பந்தமாக இந்தப் பல்கலைக் கழகங்களுக்குச் சென்று வரவும் வாய்ப்புள்ளது.



இணைவேந்தர் க.ஸ்ரீதரன்

''மாணவ - மாணவியர் ஒவ்வொருவரும் மெய்மை மிக்க மனிதராகத் திகழ வேண்டும். இந்தச் சமூகத்துக்குப் பயன்படும் சிந்தனை உள்ளவர் களாக அவர்கள் இயங்க வேண்டும் என்பதே எங்கள் குறிக்கோள் சமீபத்தில், பல்கலைக்கழகங்களின் தரத்தை நிர்ணயிக்கும் NAAC கமிட்டி, மார்ச் 2010-ல் கலசலிங்கம் பல்கலைக்கழகத்திற்கு, 'B' கிரேடு (4 மதிப் பெண்களுக்கு 2.81 மதிப்பெண்கள்) வழங்கி சிறப்பித்துள்ளது' எனக் கூறுகிறார் இணைவேந்தர் க.ஸ்ரீதரன்.

## சுதந்திரம் - சுய நிர்ணயம்!



துணைவேந்தர் தங்கராஜ்

''எங்கள் பல்கலைக் கழகப் பாடத்திட்டம், பன்முகச் சிறப்புடையது மாணவர்கள் தாங்கள் எந்தத் துறையில் சிறப்புத் தகுதி பெற விரும்பு கிறார்களோ, அதற்கேற்ப தேவையான பாடங்களை எடுத்துப் பயிலலாம் ஒரு மாணவன், அவனது விருப்பம் மற்றும் திறமைக்கேற்ப பாடங்களை தேர்வு செய்து கொள்ளலாம். மாணவன் தன்னுடைய ஆற்றலு கேற்ப ஒரு பருவத்தில் (செமஸ்டர்) அதிகப்படியான பாடங்களையும் ஒரு பருவத்தில் குறைந்த பாடங்களையும் எடுத்துக் கொள்ளலாம் RelativeGradingSystem முறை கையாளப்படுகிறது'' எனக் குறிப்பிடுகிறா கலசலிங்கம் பல்கலைக்கழகத் துணைவேந்தர் தங்கராஜ்.




கலசலிங்கம் பல்கலைக்கழகம்
ஆனந்த் நகர், கிருஷ்ணன்கோவில்-626 190.
ஸ்ரீவில்லிபுத்தூர் வழி, விருதுநகர்.
தொலைபேசி: 04653-289042.
இ-மெயில்: info@kalasalingam.ac.in வெப்சைட்: www.kalasalingam.ac.in

# உயர்த்த வரும் உதவித் தொகைகள்!

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்



**அரசாங்க, அரசாங்க ஆதரவுப் பெற்ற பள்ளிக்கூடங்களில் படித்துவரும் மாணவ, மாணவிகள், +2வரை இலவசக் கல்வியில் கரையேறி விடுகிறார்கள். ஆனால், அதற்குப் பின்னே பட்டப் படிப்பு, பட்ட மேற்படிப்பு, ஆராய்ச்சி என்ற தொடர் வறுமை தடைக் கற்களைப் போட்டு விடுகிறது.**

○ ப்ரியன்

''பட்டப்படிப்பு மற்றும் அதற்கு மேலும் சிரமமில்லாமல் தொடர இப்போது சமூகத்தின் பல பிரிவுகளைச் சேர்ந்தவர்களுக்கு பல்வேறு வகைகளில் கல்வித் துறையின் மூலமாக உதவித் தொகைகள் கிடைக்கின்றன. எனவே கவலைப்பட வேண்டாம்'' என்று எனர்ஜி ஏற்றுகிறார் தமிழக அரசின் உயர்கல்வித் துறையின் முதன்மைச் செயலாளர், கே.கணேசன். இதோ அவர் அடிக்கும் டார்ச் லைட்.

''நமது நாட்டிலேயே பெண்களுக்கு பட்டப் படிப்புவரை இலவசக் கல்வியை வழங்கியது தமிழக அரசுதான். இந்த ஆண்டு முதல் எல்லோருக்கும் பட்ட மேற்படிப்பு வரை இலவசக் கல்வி என்ற ஈ.வி.ஆர். நாகம்மையார் கல்வித் திட்டத்தை விரிவுபடுத்திவிட்டார் நமது முதல்வர்'' என்று சொல்கிறார் கணேசன்.

கல்வி இலவசமாக இருந்தாலும் நோட்டு, புத்தகம், ப்ராஜக்ட், பயணச் செலவு என்று பல்வேறு செலவுகள் காத்திருக்கின்றன. அவற்றைச் சமாளிக்கக் கிடைக்கும் உதவித் தொகைகள் இதோ:

* பல்கலைக் கழகங்களில் பயிலும் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினருக்கு கல்விக் கட்டணத்தை ஈடு செய்யும் (reimbursement) திட்டம் நடைமுறையில் இருக்கிறது. ஆதிதிராவிட நலத் துறைக்கு ஒதுக்கப்படும் நிதியிலிருந்து செயல்படும் திட்டம் இது.

* விவசாயிகள் மற்றும் விவசாயத்



கே.கணேசன்




**ஒ**ரு நாளைக்கு பதினைந்து நிமிடங்கள் படியுங்கள். வாரத்துக்கு இரண்டு மணி நேரம் கிடைக்கிறது. மாதத்துக்கு எட்டு மணி நேரம் கிடைக்கிறது. ஒரு நல்ல புத்தகத்தைப் படிக்க நான்கு மணி நேரம் போதும். எனவே, மாதத்துக்கு இரண்டு புத்தகங்களைப் படிக்கலாம். ஆண்டுக்கு இருபத்து நான்கு புத்தகங்களைப் படிக்கலாம்.
-டாக்டர் ஹெர்பர்ட்,
*(- கணக்குல புலின்னு சொல்வாங்களே. அதானா இது!)*

**- வி. சந்தியா, பி.ஈ, இரண்டாமாண்டு, அண்ணா பல்கலைக் கழகம், சென்னை**



**வி**ருந்தினர் வருகை
கரைந்தது காகம்...
என்னுடைய காகம்தான்!

**- கிர்த்திசாகர் சர்மா, பூனே**

*அங்கீகாரமே வாங்காமல் கல்வி நிறுவனங்களையும், பல பாடத் திட்டங்களையும் வைத்துக் கொண்டு கரன்ஸியைக் கறந்து ஏமாற்றி விடுகிறார்களே!*

*"தமிழ்நாட்டில் 27 பல்கலைக் கழகங்கள், 503*

தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு இளநிலை மற்றும் முதுநிலை பட்டப்படிப்பு படிக்க உதவித் தொகை உண்டு. இந்த வகையில் விடுதியில் தங்கிப் படிப்பவர்களுக்குக் கூடுதலாக தொகை கொடுக்கிறார்கள்.

* இராணுவக் கல்லூரிகளில் பயிலும் தமிழ் நாட்டைச் சேர்ந்த மாணவ, மாணவியருக்கு படிப்பு முடியும் வரை மாதம், ரூபாய் ஆயிரம் உதவித் தொகை உண்டு.

* ராணுவத்தில் வேலை செய்யும் வீரர்களின் குழந்தைகள் அரசு மற்றும் அரசு உதவி பெறும் கல்லூரியில் படித்தால், தகுதியுள்ளவர்களுக்கு கல்விக்கட்டணம் மற்றும் சிறப்புக் கட்டணம் கிடையாது. புத்தகப்படி மற்றும் விடுதிச் செலவும் ஈடு செய்யப்படும். இந்த நிதி, உதவி முன்னாள் ராணுவத்தினரின் குழந்தைகளுக்கும் உண்டு.

* தில்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் பயிலும் எம்.ஃபில் மற்றும் பி.எச்.டி மாணவ, மாணவிகளுக்கு தமிழக அரசிடமிருந்து மாதா மாதம் உதவித் தொகை கிடைக்கிறது.

* பணியிலிருக்கும்போது இறக்கும் அரசு ஊழியர்களின் குழந்தைகளுக்கு, கல்வி மற்றும் இதர கட்டணங்களில் விலக்கு உண்டு. ஹாஸ்டல் இலவசம்.

* அங்கீகரிக்கப்பட்ட ஆரம்ப மற்றும் நடுநிலைப் பள்ளிகளில் பணியாற்றும் இடைநிலை ஆசிரியர்களின் குழந்தைகளுக்கு, முதுநிலை மற்றும் ஆராய்ச்சிப் படிப்புகளில் உதவித் தொகை உண்டு.

* தகுதி அடிப்படையில் ஆராய்ச்சி படிப் மேற்கொள்ளும் மாணவ, மாணவிகளுக்கு, மாத மாதம் 'ஆராய்ச்சி படிப்புதவித் தொகை' திட்டத்தின் அடிப்படையில் உதவி ஓடோடி வரும்.

* பொறியியல் கல்லூரிகளில் படிக்கும் முதல்

கல்லூரிகள் இருக்கின்றன. இந்தப் பல்கலைக் கழகங்களில் நேரில் சென்று விசாரித்தாலோ அல்லது அவர்கள் இணையதளத்தில் சென்று பார்த்தாலோ குறிப்பிட்ட கல்லூரியோ அல்லது கோர்ஸோ அங்கீகாரம் பெற்றுதான் நடத்தப்படுகிறதா என்று தெரிந்து கொள்ளலாம்.''

**கல்லூரி இயக்குநரின் வலைத்தளம்: www.tndce.com**

தலைமுறை பட்டதாரி மாணவ, மாணவிகளுக்கு கல்விக் கட்டணத்தை அரசே ஏற்றுக் கொள்கிறது.

* கல்லூரி மற்றும் பல்கலைக் கழகங்களில் பயிலும் மாணவ, மாணவிகளுக்கு மத்திய மனிதவள மேம்பாடு அமைச்சகத்தின் மூலமாக, தகுதி அடிப் படையில் உதவித் தொகை வழங்கப்படுகிறது.

''மேற்கண்ட உதவித் தொகைகளைப் பற்றி முழு விவரமும், கல்லூரி கல்வி இயக்குநர், ஈ.வி.கே.சம்பத் மாளிகை, கல்லூரிச் சாலை, சென்னை-6 என்ற முகவரியில் தெரிந்து கொள்ளலாம். அல்லது படிக்கும் பல்கலைக் கழகம், கல்லூரிகளில் கேட்டு தெரிந்து கொள்ளலாம்.

''மேலும் ஆதிதிராவிடர் நலத்துறை, பிற்பட்டோர், மிக பிற்பட்டோர், சீர் மரபினர் ஆகிய வகுப்பைச் சார்ந்த மாணவ, மாணவிகளுக்கு அந்தந்தத் துறையின் சார்பாகவும் உதவித் தொகைகள் வழங்கப்படுகின்றன. பொதுவாக இந்த உதவித் தொகைகள் அரசு மற்றும் அரசு உதவி பெறும் கல்லூரிகளில் படிப்பவர்களுக்குத்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

''இங்கே சொல்லப்பட்ட உதவித் தொகைகளைத் தவிர, மத்திய விஞ்ஞான, தொழில் ஆராய்ச்சி நிலையத்தின் (CSIR) ஆராய்ச்சி நிலையங்கள், இந்திய விஞ்ஞான கழகம் (Indian Institute of Science), அணுமின் நிலையங்கள் ஆகியவற்றில் இளநிலை ஆராய்ச்சியாளர் மற்றும் முதுநிலை ஆராய்ச்சியாளர்களுக்கும் மாதா மாதம் உதவித் தொகைகள் வழங்கப்படுகின்றன. பட்டப்படிப்பு படிக்கும்போதே மாணவ, மாணவிகள், தினசரி பத்திரிகைகளை கவன மாகப் படிக்க வேண்டும். அரசு மற்றும் தனியார் அறக்கட்டளைகள் கொடுக்கும் உதவித் தொகைகள், அவற்றைப் பெறும் வழிகள் ஆகியவை நாளிதழ்களில் வெளியிடப்படுகின்றன'' என்று முடித்தார் கணேசன்.



## பெஸ்ட் ஃப்ரெண்ட்ஸ்

''உலகத்துல பெஸ்ட் ஃப்ரெண்ட்ஸ், நம்மோட இரண்டு கண்கள்தான். இரண்டும் ஒண்ணா தூங்குது, ஒண்ணா முழிக்குது, ஒண்ணா அழுவுது, ஆனா ஒரு பொண்ண பார்த்தா, ஒரு கண்ணு மட்டும் சிமிட்டுது. இதிலிருந்து என்ன தெரியுது?''

*(எஸ்கே...ப்)*

**- கைலாஷ் நாத் சர்மா, பி.காம், மூன்றாமாண்டு, ஆச்சார்யா கலை மற்றும் அறிவியல் கல்லூரி புதுச்சேரி**

# A to Z கல்வி கைடு!



## டாக்டர் என்.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்.





டாக்டர். தவமணி டி. பழனிசாமி



டாக்டர். நல்லா ஜி. பழனிசாமி

கோவை மருத்துவ மைய மருத்துவமனை (Kovai Medical Centre Hospital) என்னும் உலகத் தரம் வாய்ந்த மருத்துவ மனையை உருவாக்கிய மருத்துவர் நல்லா ஜி.பழனிசாமி. மருத்துவர் தவமணிதேவி பழனிசாமி தம்பதியின ரால் 1996 ஆம் தொடங் கப்பட்டதுதான் டாக்டர் என்.ஜி.பி கலை அறிவியல் கல்லூரி.

மிகவும் பின்தங்கிய கிராமத்தில் பிறந்து மருத்துவம் பயின்று, அமெரிக்காவில் பணியாற்றிய பழனிசாமி தம்பதியினர் தங்களைப்போன்று பின்தங்கிய கிராமத்தில் இருக்கும் மாணவர்கள் உயர்கல்வியைப் பெற வேண்டும் என்ற உயரிய நோக்கில் இக்கல்விநிறுவனத்தைநடத்திவருகின்றனர்.

16 இளங்கலைப் படிப்புகளும் 11 முதுகலைப் படிப்புகளும் 9 ஆராய்ச்சிப் படிப்புகளும் கொண்டு இயங்குகின்ற இக்கல்லூரியில் மருத்துவம் தொடர்பான படிப்புகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. இத்துறை சார்ந்திருக்கின்ற மாணவர்கள் சிறப்பான கல்வியைப் பெறும் வகையில் அதிநவீன ஆய்வகங்களை இக் கல்வி நிலையம் அமைத்துத் தந்துள்ளது. உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் அதிக வேலை வாய்ப் பினைப் பெற்றுத்தரும் இப்பட்டப் படிப்பினை முடித்தவர்கள் விருப் பப்பட்டால், கோவை மருத்துவ மைய மருத்துவமனையிலேயே (KMCH) பணிபுரியலாம். கடந்த சில ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான மாணவர்கள் இது போன்ற வேலை வாய்ப்பினைப் பெற்றுப் பயன் அடைந்துள்ளனர்.

கல்லூரியின் செயலர், மருத்துவர் தவமணிதேவி பழனிசாமி அவர் களின் விடாமுயற்சியால், பாரதியார் பல்கலைக் கழகத்திலேயே முதன் முதலாக இந்தக் கல்லூரியில்தான் மருத்துவ மேலாண்மையியல் என்னும் முதுகலைப் பட்டப் படிப்பு (Hospital Administration) அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. கோவை மருத் துவ மைய மருத்துவமனையுடன் இணைந்து நடத்தப்படும் இப்பட்டப்

## படித்தவுடன்



### தனித்தன்மை வாய்ந்த பாடப் பிரிவுகள்

1. M.Sc Hospital Administration
2. B.Sc Clinical Lab Technology
3. Diploma in Hospital & Health Management.
4. P.G. Diploma In Imaging Technology
5. Diploma in Hospital Record
6. P.G. Diploma in Clinical Research and Data Management.

படிப்பிற்குத் துறை சார்ந்த வல்லுநர்கள் மற்றும் சிறந்த மருத்துவர்களைக் கொண்டு கருத்தரங்குகள் நடத்தப்படுகின்றன.

**இளநிலை மருத்துவ ஆய்வகம் (Clinical Lab Technology)**

உலக நாடுகள் அனைத்திலும் உள்ள சிறப்பு வாய்ந்த மருத்துவ மனைகளுக்கு மருத்துவ ஆய்வக உதவியாளர்கள் தேவைப்படுவதால், பெரும்பாலும் பட்டயப் படிப்பாகவே வழங்கப்பட்டு வந்த இந்தப் படிப்பு, பாரதியார் பல்கலைக் கழகத்தில் முதன் முதலாக இக்கல்லூரியில் பட்டப்படிப்பாக அறிமுகப்படுத்தப் பட்டது. படித்து முடித்த அடுத்த நாளே

# வேலை வாய்ப்பு!

வேலை வாய்ப்பினைப் பெற்றுத் தரும் தகுதி வாய்ந்தது இந்தப் படிப்பு.

மேலாண்மைத் துறையில் முனைவர் பட்டம் பெற்று, அகமதாபாத் இந்திய மேலாண்மையியல் (IIM) நிறுவனத்தில் பயிற்சி பெற்ற முனைவர் பெ.இரா.முத்துசாமி அவர்களை முதல்வராகக் கொண்டு இயங்கி வரும் இக்கல்லூரியில் மொழி ஆய்வகம், பல்கலைக் கழக மானியக்குழு (UGC) உதவியுடன் கூடிய மாணவர்களுக்கான பேச்சுத் திறன் பயிற்சி, இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகம் (ICMR) மற்றும் இந்திய விஞ்ஞானத் தொழில் நுட்பக் கழகம் (CSIR) ஆகியவற்றின் உதவியுடன் நடத்தப் பெறும் ஆய்வரங்கங்கள், 50க்கும் மேற்பட்ட தொழில் நிறுவனங்களைக் கொண்டு மாணவர்களுக்கு வேலை வாய்ப்பினை உருவாக்கித் தரச் சிறப்பு அலுவலர் மாணவர்கள் ஆய்வுத் தரம் மற்றும் படிக்கும் திறனை மேம்படுத்த Journal Club முதலான






பல்வேறு சிறப்பம்சங்களைக் கொண்டு இயங்குவது குறிப்பிடத்தக்கது.

முன் அனுபவம் வாய்ந்த பேராசிரியர்களைக் கொண்டு இயங்கும் இந்தக் கல்லூரி இந்தாண்டு முதல் (Clinical Research Data Management) என்ற பட்டயப் படிப்பைத் தொடங்கி, இன்னும் பல மாணவர்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தரும் சிறந்த கல்லூரியாகத் திகழ்கிறது.

தொகுப்பு: ஆர்.பாலா









பூஞ்சாரல் பக்கங்கள்

★ எப்பொழுதும் அகமும் புறமும் சிரித்துக் கொண்டே இருங்கள்.

★ பிறருடைய குற்றத்தைப் பார்க்கக் கூடாது.

★ அவசரம், கவலை, கசப்புணர்வு இவற்றை நீக்கி விடுங்கள். மற்றவர்களுக்கு சுகத்தையே கொடுங்கள்.

★ பொறுமை, அமைதி, அன்பு என்ற மூன்று மாத்திரைகளை தினமும் சாப்பிடுங்கள். இவை எளிதான இலவசமான மருந்து.

★ நல்ல சகவாசத்தின் மத்தியில் இருந்து புத்தியைப் பயன்படுத்துங்கள். வியாதியிலிருந்து விடுபடலாம்.

★ நோயற்றவர்களாக இருக்க வேண்டுமானால் நான்கு பாவங்களாகிய பொய் பேசுதல், திருடுதல், ஏமாற்றுதல், மற்றவர்களை நிந்தித்தல் இவற்றிலிருந்து விடுபடுங்கள்.

★ மனதாலும்கூட யாருடைய குற்றத்தையும் பார்க்காதபோதுதான் மனம் தூய்மையாயிருக்கும். நாம் யாரையாவது கெட்டவன் என்றால் அவர்களும் நம்மை கெட்டவன் என்று எண்ணுவார்கள். ஆகவே இதிலிருந்து விடுபடுங்கள். நாம் நோயிலிருந்து விடுபடுவோம்.

★ இறை நம்பிக்கையுடன் வாழ்வது; தன்னம்பிக்கையுடன் இருப்பது; நற்குணங்களுடன் வாழ்வது இவையாவும் ஆரோக்கிய வாழ்வுக்கு உறுதுணை புரிகின்றன.

- பூஜா உமாசந்திரன்,
மூன்றாமாண்டு,
கம்ப்யூட்டர் சயின்ஸ்,
இராஜீவ்காந்தி பொறியியல் கல்லூரி, ஸ்ரீபெரும்புதூர்


★ பூஜா உமாசந்திரன்

ஆனந்தமும் ஆரோக்கியமும் கிடைக்க, என்னுடைய தாத்தா எனக்கு அனுப்பிய ஈமெயில் செய்தி இது!



படம் : 'சன்டிவி' மனோகர் கிருஷ்ணா

# தினமும் மூன்று மாத்திரை!

# +2 தவறியவர்கள்

+2 தேர்வில் தவறியவர்களை ஊக்கப்படுத்தவும் கலைத்துறையில் நுழையத் துடிக்கும் மாணவ - மாணவிகளுக்கு வழி காட்டவும் சென்னை சாஃப்ட்வியூ மீடியா காலேஜ் நிறுவனம் ஓராண்டு விசுவல் கம்யூனிகேஷன் டிப்ளமோ பயிற்சியை நடத்துகிறது. +2 தவறியவர்கள் இனி ஓராண்டு வீணாகிறதே என்று கவலைப்பட வேண்டாம். மீடியா துறையின் சிறந்த பாடத் திட்டத்திற்கான ஐ.எஸ்.ஓ. தரச் சான்றிதழையும் இந்நிறுவனம் பெற்றுள்ளது.

மீடியா துறையில் நுழையத் துடிக்கும் மாணவ, மாணவியருக்கு டிசைனிங், ஜர்னலிசம், வீடியோகிராபி, அனிமேஷன், அட்வர்டைசிங், டைரக்ஷன், வீடியோ எடிட்டிங், கிராபிக்ஸ் மற்றும் ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ் ஆகியவற்றை உள்ளடக்கிய ஓராண்டு விசுவல் கம்யூனிகேஷன் பயிற்சியை இந்நிறுவனம் அளித்து வருகிறது. பயிற்சிக் கட்டணம் 1.25 லட்சம். பயிற்சியில் சேரும் அத்தனை மாணவர்களுக்கும் இலவச லேப்டாப்பும் வழங்கப்படுகிறது. இதுமட்டுமல்ல, பயிற்சியின் போது செய்முறைப் பயிற்சிக்காகச் செலவிடப்படும் கட்டணங்களையும் நிறுவனமே ஏற்றுக்கொள்ளும்.



# விசுவல் கம்யூனிகேஷன் படிக்கலாம்



மாணவர்களின் அறிவுத்திறனை மேம்படுத்தும் விதத்தில் புகைப்படக் கண்காட்சி, கருத்துக்கணிப்பு, குறும்படத் தயாரிப்பு ஆகியவற்றில் மாணவர்களை பங்கேற்கச் செய்கிறது. தேர்வில் தவறியபெரும்பாலான மாணவர்களுக்கு எம்.என்.சி., எஃப்.எம். ரேடியோ, அனிமேஷன், சினிமா மற்றும் டிவி. துறையில் நுழைய வேண்டும் என்ற கனவு இருக்கிறது. இத்துறையில் வேலை வாய்ப்பு பெறவும் இந்நிறுவனம் வழி காட்டுகிறது.

+2 மற்றும் 10 ஆம் வகுப்பு தவறிய மாணவ-மாணவிகளுக்கு அவர்களின் பெற்றோர் முன் கவுன்சிலிங் அளித்தே அட்மிஷன் செய்யப்படுகிறார்கள். தரம்மிக்க மாணவர்களை உருவாக்க ஸ்போக்கன் இங்கிலீஷ், பெர்சனாலிட்டி டெவலப்மெண்ட் மற்றும் ஓவிய பயிற்சிகள் மாணவர்களுக்கு இலவசமாக அளிக்கப்படுகின்றன. வெளியூர் மாணவ - மாணவிகளுக்கு தங்கும் வசதி மற்றும் சிறப்பான கல்வி முடித்தோருக்கு வேலை வாய்ப்பிற்கும் இந்நிறுவனம் வழி காட்டுகிறது. தொடர்புக்கு: சாஃப்ட்வியூ மீடியா காலேஜ், 117, நெல்சன் மாணிக்கம்சாலை, சென்னை-29. தொலைபேசி : 044 - 42113535, 9940084476, www.softview.in

## மீடியாவில் வேலை

Advt

## A to Z கல்வி கைடு!

### நியூடெக் இண்டர்நேஷனல் அகாடமி,

சென்னை.

''மிகவும் வேகமாக முன்னேறிவரும் துறைகளில் இதுவும் ஒன்று. வேலை வாய்ப்புக்குக் குறைவே இல்லை.''


M. ஹசீனா சையது

# வானில் பறப்போம் வாருங்கள்!



இந்தத் தகவலைக் கேட்டாலே வானில் பறப்பது போல இருக்கிறதா? மேலே படியுங்கள்!

விமான பணிப்பெண் ஆவதற்கான ஒரு வருட கோர்ஸை நடத்தி வருகிறது 'நியூடெக் இன்டர்நேஷனல் அகாடமி'. அதன் இயக்குநர் M.ஹசீனா சையது அவர்களை சந்தித்தோம். இதோ நம்முடன் உரையாடுகிறார்:

''விமான பணிப்பெண் கோர்ஸில் சேர ப்ளஸ் டூ முடித்திருந்தால் போதும். ஓரளவு அழகு போதுமானது. தன்னம்பிக்கை நிச்சயம் இருக்க வேண்டும். ஆங்கில அறிவு தேவை. தகவல் பரிமாற்றத்திலும் சிறந்து விளங்குதல் நல்லது.

இந்தத் திறமைகள் அவ்வளவாக இல்லையென்றால்? பயப்பட வேண்டாம்.

''அந்தத் திறமைகளை சிறப்பாக அடையத்தானே நாங்கள் பயிற்சி அளிக்கிறோம். அது மட்டுமல்ல. ஜெர்மன், ஹிந்தி, பிசினஸ் இங்கிலீஷ் ஆகியவற்றை சரியான உச்சரிப்புடன் பேசவும் கற்றுத் தருகிறோம். முதல் உதவி, நீச்சல், ஆளுமை வளர்ச்சி ஆகியவற்றிலும் திறமை அடைய வைக்கிறோம். தவிர பயிற்சியின் ஒரு கட்டம் ஆகாய விமானத்திலேயே நடக்கும் என்பதால் ப்ராக்டிகலான அனுபவமும் பெறுகிறீர்கள்.

''எங்களிடம் பயிற்சி பெற்றவர்கள், பல விமான சர்வீஸ்களில் சேர்ந்து பணி புரிந்து கொண்டிருக்கிறார்கள். எங்கள் பயிற்சி விமானத்தில் பறப்பதற்கு மட்டும் அல்ல ஹாஸ்பிடாலிடி எனும் பிரிவிலும் சிறப்ப



பெற வைப்பதால் நட்சத்திர ஹோட்டல் களிலும் இங்கு பயிற்சி பெற்றவர்களால் பணிபுரிய முடியும். டிராவல்ஸ் நிறுவனங் களில் 'டிக்கெட்டிங்' பணியையும் செய்ய லாம். சிறந்த மொழி உச்சரிப்பு கிடைப்ப தால் பீ.பி.ஓ.க்களில் பணி செய்யவும் தடை இல்லை. நாங்கள் முதல் உதவி, நீச்சல் போன்ற ஒவ்வொன்றிற்கும் தனித் தனி சான்றிதழ்கள் தருகிறோம்.

இது போன்ற பலதரப்பட்ட பயிற்சி களை அளித்து வரும் நாங்கள், மாண வர்களின் பர்ஸனாலடி டெவலப்மென் டிலும் அதிக கவனம் செலுத்துகிறோம். அதற்கான பயிற்சிகளை ஆன் லைன் மூல மாகவும் அளித்து வருகிறோம். சிங்கப்பூர், மலேஷியாவிலிருந்தெல் லாம் வந்து எங்களிடம் பயிற்சி எடுத்துக் கொள் கிறார்கள்.

''இந்தப் பயிற்சி யில் சுமார் எழுபது சத விகிதம் பெண்கள்தான் சேருகிறார்கள்என்றாலும் ஆண்களும் இதில் தாராளமாகச் சேர்ந்து பலனடையலாம். சிறந்த முறையில் தேர்ச்சி பெறுபவர்களுக்கு வேலை வாய்ப்பு நிச்சயம். சொல்லப் போனால் இங்கு பயிற்சிபெறும் ஏழாவது மாதமே வேலை உறுதியாகி விடுகிறது. ப்ளஸ் டூ மட்டுமே முடித்து எங்களிடம் பயிற்சி பெறும் ஒருவர் தொடக்கத்திலேயே மாதம் நாற்பதாயிரம் ரூபாய் சம்பளம் பெற முடியும்.







''இந்த கோர்ஸ் இந்திய அரசின் அங்கீகாரம் மட்டுமின்றி IATA (international air transport association) அமைப்பின் அங்கீகாரமும் பெற்றிருப் பதால் வேலை கிடைப்பது மேலும் எளிதாகிறது.''

## கூடுதல் செய்தி!

தன் கையே தனக்குதவி என்று பணம் சம்பாதிக்கக் கூடிய வேறொரு கோர்ஸையும் M. ஹசீனா சையது குறிப்பிட்டார். அது அவர்கள் நடத்தும் அழகுக் கலை வகுப்புகள்.

''சருமம் மற்றும் தலைமுடி பராமரிப்பு, பாதுகாப்பிற்கான அழகு நிலையங்களில் நாங்கள் முன்னோடி. எங்களது 'இந்தியன் இன்ஸ் டிட்யூஷன் ஆஃப் ப்யூட்டி தெரபி'யில் ஒரு மாதத்திலிருந்து ஆறு மாதங்கள் வரையிலான பல்வேறு வகுப்புகளை நடத்துகிறோம். அழகுக் கலையில் ஆயுர் வேதம், மூலிகை சிகிச்சைகளைக்கூட கற்றுத் தருகிறோம்.

தலை சிகிச்சை, சரும சிகிச்சை, உடல் சிகிச்சை என்று கற்றுத் தருகிறோம். தமிழ் நாட்டில் பல்லாயிரம் அழகு நிலையங்கள் உள்ளன. அவற்றில் நிறைய வேலை வாய்ப்புகள் உள்ளன. இந்தப் பயிற்சியில் சேர அதிகம் எழுதப் படிக்க தெரியவில்லை என்றாலும் கொஞ்சம் அழகுணர்ச்சி இருந்தாலே போதும்.''

- தொகுப்பு ஆதர்ஷ்

# தூங்காதே, தம்பி



உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானி ஐன்ஸ்டீனிடம் ஒரு முறை ஒரு கேள்வி கேட்கப் பட்டது.

''ரிலேட்டிவிட்டி தியரி என்கிற உங்கள் அரிய விஞ்ஞான உண்மையை நீங்கள் கண்டு பிடிக்காமல் விட்டிருந்தால் இந்த உலகம் என்னவாகி இருக்கும்?''

ஐன்ஸ்டின் சிரித்தபடி, ''ஒன்றும் குடி முழுகிப் போய் இருக்காது... வேறு ஒருவர் அதைக் கண்டறிந்து வெளிப்படுத்தி இருப்பார்'' என்றார்.

அதிர்ச்சி அடைந்த கேள்வியாளர், ''இன்னொருவர் கண்டறிந்து வெளிப் படுத்த பல ஆண்டுகள் ஆகிவிடும் அல்லவா?'' என்று இழுத்தார்.

சிறிது யோசித்த ஐன்ஸ்டீன்... ''அதிக பட்சம் இன்னும் ஒரு மூன்று வாரங்கள் வேண்டுமானால் தள்ளிப் போயிருக்கும். அவ்வளவுதான்'' என்றார். ஆம்... இது உண்மை. உலகில் ஒரே ஒரு ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்தான் இதைக்கண்டறிய முடியும் என்பதில்லை. காரணம் அதே கால கட்டத்தில் பல விஞ்ஞானிகள் பல பகுதிகளில் அத்தகைய சிந்தனைத் தாக்கத்துடன் அதே கோட்பாடுகளைப் பற்றி ஆய்வு செய்து கொண்டிருந்தனர். யார் முந்தப் போகிறார்கள் என்பதற்குதான் உலகம் காத்திருந்தது. ஒரு பந்தயம் போல...

வேறு ஜெர்மானிய விஞ்ஞானியும் ரிலேடிவிட்டி தியரியின் பல கூறுகளை ஆய்வு செய்திருந்தார். கிட்டத்தட்ட முடிவையும் கண்டறிந்து விட்டார். ஆனால், வகுத்து, தொகுத்து, ஆராய்ச்சிக் கட்டுரையாக்க தாமதம் செய்து விட்டார். எழுத்தில் வடிப்பதில் கொஞ்சம் சோம்பேறித்தனமாக இருந்துவிட்டதால் புகழ் முழுவதையும், ஐன்ஸ்டீன் அள்ளிக் கொண்டார். ஐன்ஸ்டீன் அவரையும் அவரது ஆராய்ச்சியையும் மனதில் வைத்துக் கொண்டுதான் அதிகபட்சம் மூன்று வாரங்கள் என்று பதில்கூறியதாகக்கருதுகிறார்கள்.

பலர் இப்படித்தான் பெரும்புகழையும், பொருளையும் சின்னச் சின்ன சோம்பேறித் தனத்தால் இழந்து போய் விட்டார்கள். பிறகு பார்த்துக் கொள்ளலாம், பின்னர் செய்து முடிக்கலாம் என்று கொஞ்சம் தள்ளி வைத்தவர்களை உலகம் மொத்தமாகத் தள்ளி வைத்து விடுகிறது. காரணம் இது ஓர் ஓடு களம்... இங்கே தயங்கி நிற்பவர்கள் தள்ளப் படுவார்கள்.



ஒரு சின்ன தகவல் படித்தேன். கடிதங்கள் எழுதுவதில் தபால் அட்டைகளை அதிகம் பயன் படுத்துகிறவர்கள் கொஞ்சம் கூடுதல் சுறு சுறுப்புள்ளவர்கள் என்று ஓர் ஆய்வு தெரிவிக்கிறதாம்.




தவத்திரு குன்றக்குடி அடிகளார், திருமுருக கிருபானந்த வாரியார், திரு. கி.ஆ.பெ. விசுவநாதன், திரு. கி.வா.ஜகன்னாதன் போன்ற பெரியவர்களோடு நான் நெருங்கிப் பழகி இருக்கிறேன். இவர்கள் எவ்வளவு வேலைகள், பயணங்களுக்கிடையிலும் கிடுகிடுவென்று தபால்களுக்குப் பதில் எழுத அஞ்சல் அட்டைகளை உபயோகிப்பார்கள். உடனுக்குடன் தபால் பெட்டியில் சேர்த்தும் விடுவார்கள்.

ஒருமுறை ஒரு விழாவில் பேசிவிட்டு திரு கி.வா.ஜ அவர்களும் நானும் ரயிலில் ஒன்றாக வந்து கொண்டிருந்தோம். காலையில் ரயில் சென்னை வந்து அடையும் முன்பு எழுந்து நான்கைந்து தபால் அட்டைகளில் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்கள். இரயில் நிலையத்தில் இறங்கியதும் நிலையத்தில் இருந்த தபால் பெட்டியில் தம் கைப்பட சேர்த்துவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டார்கள். ''இவ்வளவு அதிகாலையில் தபால் எழுதி உடனே பெட்டியிலும் சேர்க்கிறீர்களே... ஏதும் அவசரமா?'' என்றேன்.

''நேற்று விழா நடத்தி நம்மை ரயிலில் கொண்டு வந்து பொறுப்புடன் சேர்த்த நண்பர்களுக்குத்தான் நன்றி தெரிவித்து, பத்திரமாக வந்து சேர்ந்த

# தூங்காதே!

விவரத்தையும் எழுதினேன். அப்புறம் எழுதிக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டால் அப்படியே விட்டுப் போய் விடும்'' என்றார். ''நலமுடன் சென்னை வந்து சேர்ந்தேன். அன்புடன் உபசரித்தமைக்கு நன்றி'' என்று ஊர் சேரு முன்பே தபால் எழுதி நேரத்தை மிச்சப்படுத்தி உடனுக்குடன் செயலை முடிக்கும் அவரைப் பார்த்து ஆச்சர்யம் அடைந்தேன். அப்போது அவர் சொன்னார். ''இது ராஜாஜி அவர்களிடமிருந்து நான் அறிந்து பின்பற்றும் வழக்கம்'' என்றார். இப்போதுதான் செல்ஃபோன் வந்துவிட்டதே... இது ஏன் என்று நீங்கள் நினைக்கலாம். தபால் அட்டை எழுதுங்கள் என்பது என் செய்தி அல்ல. வேலைகளைத் தள்ளிப் போடாது உடனுக்குடன்



■ சுகி சிவம்

முடியுங்கள்... விரைவாகச் செயல்படுங்கள்... தாமதம் தலைவனாகிற வனுக்குத் தடை என்று உணருங்கள் என்பதே என் செய்தி.

**நீ**தித் துறையில் ஒரு பிரபல வாக்கியம் புழங்கும். ''Justice delayed is nothing but justice denied" என்று. 'தாமதமாகத் தரப்படும் நீதி, தரப்பட்டது அல்ல... நீதி மறுக்கப்பட்டதாகவே ஆகும்'' என்பதே அதன் உயிர்க்கோட்பாடு. ஆனால் எத்தனை நீதி மன்றங்களால் இதனை நடைமுறைப் படுத்த முடிகிறது என்பது மில்லியன் டாலர் கேள்வி!

"Delay is decay!" என்னும் ஓர் அழகான வாக்கியம் உண்டு. தாமதமாக ஒன்றைத் தருவது விஷயத்தை அழுக விடும் பழக்கம் என்கிறார்கள். பக்குவத்தில் ஒரு பழத்தைத் தராமல் இரண்டு நாள் தள்ளிக் கொடுத்தால் பழம் அழுகி நாறாதா? இன்று பலரது வாழ்க்கை அழுகி நாறுவதற்கு இந்தச் சோம்பல், சின்ன தாமதம்தான் முழுக் காரணம்.

அன்றாடம் நடந்த பாடத்தை அன்றாடம் படித்து, எழுத வேண்டியவற்றை எழுதி முடித்தவர்கள் பரீட்சைக்கு ஏன் பயப்பட வேண்டும். பிறகு படிக்கலாம்... சேர்த்துப் படிக்கலாம் என்று தள்ளி வைத்தவர்கள் மொத்தப் பாடத்தையும் எப்படி படிப்பார்கள்? பயமும் பிரமிப்பும் தோல்விக்கல்லவா தூக்கிச் செல்லும்.

காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்காமல் இன்னும் கொஞ்சம் தூங்குவோமே என்று புரண்டு படுத்துத் தூங்கும் இளம் பிள்ளைகளிடம் நான் கோபமாகக் கொஞ்சம் கடுமையாகப் பேசுவதுண்டு. ''தம்பி... தூங்கலாம்... தூங்கலாம் என்று ஆசைப்பட்டு படுத்திருப்பதைவிட நீ செத்துப் போகலாம். காரணம், சாவுதான் மிக நீண்ட தூக்கம். தூக்கத்தை நேசிப்பவர்கள் சாவை யாசிப்பவர்கள்'' என்றுகூட கண்டித்திருக்கிறேன். ஆஹா நீ இப்படிப் பேசலாமா என்று யாராவது என்னிடம் சீறினால் 'திருவள்ளுவரைப் போய் திட்டவும். 'உறங்குவதுபோலும் சாக்காடு' என்கிறார் திருவள்ளுவர். அதனால்தான் சொன்னேன், தூங்க விரும்புகிறவன் செத்துப் போனவனுக்குச் சமம். இன்னும் சொல்வதானால் செத்தவன், தூங்கும் சோம்பேறியைவிட ஒருபடி மேல். ஏன் என்றால் அவன் நேரம் கெட்ட நேரத்தில் எழுந்து காபி கேட்டு பெற்றோர்கள் கழுத்தை அறுப்பதில்லை. ஆனால் சோம்பேறிப் பிள்ளைகள் மதியம் உணவுவேளை கண் விழித்து காலை நேரத்து காப்பியைக் கேட்டு அம்மாவை என்ன பாடு படுத்துகிறார்கள். சோம்பலை நான் வெறுப்பதால்தான் இவ்வளவு கடுமையாக சொல்லுகிறேன்.

**கோ**யம்பேடு காய்கறிச் சந்தைக்கு வரும் வெங்காய லாரிகளை, உருளைக் கிழங்கு லாரிகளை நீங்கள் எப்போதாவது கவனித்தது உண்டா? சந்தைக்கு லாரியைக் கொண்டு வரும் ஓட்டுநர்கள் புயல்வேகத்தில் வருவார்கள். ஒரே காரணம். முதலில் வரும் லாரியில் உள்ள காய்களுக்குக் கிடைக்கும் விலை அடுத்தடுத்த லாரியின் காய்களுக்குக் கிடைக்காது. அசுர வேகம் ஆபத்து என்பதை ஒப்புக் கொள்கிறேன். அதையும் உணர வேண்டும். அதேசமயம் தாமதமாக லாரிக்குக் கணிசமான விலை கிடைக்காது என்பதையும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். முன்னேறுகிறவர்கள் முந்திக் கொள்ள வேண்டும்.

'பரபரப்பு வேறு. சுறுசுறுப்பு வேறு. பரபரப்பு ஆபத்தின் அன்னை. சுறுசுறுப்பு

**தூங்கலாம்... தூங்கலாம் என்று ஆசைப்பட்டு படுத்திருப்பதைவிட நீ செத்துப் போகலாம்.**

வெற்றியின் செல்லப் பிள்ளை. சமய உலகில் மனிதனுடைய குணங்களை எல்லாம் நன்கு ஆராய்ந்து மூன்று பிரிவுகளில் அடக்கினார்கள். சத்வம், ரஜஸ், தமஸ் என்பார்கள். தமஸ் என்கிற தாமத இயல்பு கடவுளை அடையப் பெருந்தடை என்கிறார்கள்.

**ம**கிஷாசுர மர்த்தினி என்று துர்க்கைக்குப் பெயர். அவள் எருமைத் தலையை மிதித்தபடி நிற்பாள். துர்க்கை என்றால் மன உறுதி... இங்கு தமோ குணத்தை எருமையாகச் சித்தரித்து சொல்கிற புராணக் கதை அது. எருமைகள் எவ்வளவு மந்தமாக இயங்கும் என்பதைக் கவனித்தால் நாம் வெட்கப்படுவோம். வழியை அடைத்துக் கொண்டு படுத்திருக்கும் எருமைகளை முன்பு எல்லாம் வாலை முறுக்கி வலியேற்படுத்தி எழுப்பி விடுவார்கள். அப்போதும் சில எருமைகள் எழாது. எழுந்தாலும் மறுபடியும் படுத்துக் கொள்ளும்.



இதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். வண்டு என்ன கடவுளுக்கு எதிரியா? கருஞ்சட்டை போட்டிருப்பதால் கடவுள் எதிர்ப்புக் கழக உறுப்பினரா? ஏன் வண்டு தொட்ட மலரைக் கடவுளுக்குக் சூட்டக் கூடாது?

சிலர் முட்டாள்தனமாக வண்டு மலரில் வாய் வைத்தால் மலர் எச்சிலாகும். எச்சிலான பொருளைக் கடவுள் ஏற்க மாட்டார் என்று நீட்டி முழக்குவார்கள். அட அசடுகளே! எச்சில் கடவுளுக்கு ஆகாது என்றால் தேனை எப்படி அபிஷேகம் செய்யமுடியும்? தேன் கலந்த பஞ்சாமிர்தத்தை எப்படி படைக்க முடியும்? கடவுளுக்கு எச்சில் ஆகாது என்பது வீண் புளுகு. தேனுக்கு 'வண்டெச்சில்' என்றே திருப்புகழில் பாட்டு உண்டு.

வண்டு தொடாமலர் என்பதற்கு ஒரே காரணம், காலை அதி சீக்கிரம் எழுந்து மலர்களை மொய்ப்பது வண்டு. அது தொடா மலர் தான் கடவுளுக்கு உரியது என்றுவிட்டால் வண்டுக்கு முன்பாக மனிதன் எழுந்தால்தான் அப்படிப்பட்ட பூவைப் பறிக்க முடியும். தாமத குணம் நீங்கி அதிகாலை எழுந்து சுறுசுறுப்புடன் செயல்பட மனிதனைத் தயாரிக்கவே சமயவாதிகள் வண்டு தொடா மலரே கடவுளுக்கு உகந்தது என்று கதை சொன்னார்கள்.

**காரணம், சாவுதான் மிக நீண்ட தூக்கம். தூக்கத்தை நேசிப்பவர்கள் சாவை யாசிப்பவர்கள்''**

தமோ குணம் உள்ளவர்கள் எந்தச் செயலிலும் இறங்க மாட்டார்கள். இறங்கினாலும் வேலை செய்ய மாட்டார்கள். அதனால் அவர்கள் எருமைகள்.

**ச**மய உலகில், இறைவனுக்குப் பூசைக்குப் பயன்படுத்தும் பூவை மலரும் முன் பறித்துவிட வேண்டும் என்று ஒரு நியதி உண்டு. அதை இலக்கியங்கள் 'வண்டு தொடா மலர்' என்று எழுதும். வண்டு மொய்த்த மலர்களைக் கடவுளுக்கு இடுவது பாவம் என்று ஒரு கருத்து உண்டு.

**அதிகாலை எழுவது... சுறுசுறுப்புடன் செயல்படுவது... ஒத்திப் போடாமல் வேலை செய்வது... தாமத்தை ஜெயிப்பது உடனுக்குடன் தொழில் படுவது என்பவை எல்லாம் முன்னேற்ற மனிதர்களின் மூல மந்திரங்கள்...**

# A to Z கல்வி கைடு!



## கே.எஸ்.ஜி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்.



கே.எஸ். கீதா



கி. விஜயராமன்

**ஏ**ழை எளியவர்கள், நடுத்தரக் குடும்பத்தினர் மற்றும் பின் தங்கியோர்... இவர்களும் படித்துப் பயன்பெறும் வகையில் கே.எஸ்.ஜி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர், சிங்காநல்லூரில் அமைந்துள்ளது.

கல்லூரியின் தாளாளர் கே.எஸ்.கீதா. இவர் கலைஅறிவியல்கல்லூரியை



2000ம் ஆண்டு துவங்கினார். கீதா சிறந்த சமூக சேவகர். ''ஏழைகளுக்கு கல்வி அளித்தலே சிறந்த அறம்'' என்பது இவரது கொள்கை.

கே.எஸ்.ஜி. கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் முதல்வர் டாக்டர் கி. விஜயராமன். இவர் ஒரு பன்முக அறிஞர். கே.எஸ்.ஜி. கல்லூரிப் பற்றி டாக்டர். விஜயராமன் கூறியதாவது:

''பத்தாவது ஆண்டில் அடி எடுத்து வைத்துள்ள இக்கல்லூரியில், பி.எஸ்ஸி பிரிவில் பயோ டெக்னாலஜி, கேட்டரிங் சயின்ஸ் அண்ட் ஹோட்டல் மேனேஜ்மென்ட், எலக்ட்ரானிக்ஸ் - கம்யூனிகேஷன் சிஸ்டம், கம்ப்யூட்டர் சயின்ஸ், மேத்தமெடிக்ஸ் வித் சி.ஏ, இன்ஃபர் மேஷன் டெக்னாலஜி' மற்றும் பி.சி.ஏ ஆகியவையும், பி.காம், பி.காம் சி.ஏ, பி.பி.எம், பி.ஏ ஆங்கில இலக்கியம் போன்ற இளநிலை பட்டப்படிப்புகளும், மேல்நிலை பட்டப் படிப்புகளான எம்.காம்

## கல்விப் பணியில்

மற்றும் எம்.காம், ஐபி ஆகியவையும் பயிற்றுவிக்கப்படுகின்றன.

இக்கல்லூரியின் சிறப்பம்சமே, மாணவ - மாணவியர்கட்கு வேலை வாய்ப்பினைப் பெற்றுத்தரும் பிளேஸ்மெண்ட் செல்தான். இதுவரை 2000த்துக்கும் மேற்பட்ட மாணவ மாணவிகள் பல்வேறு நிறுவனங்களில் வேலை வாய்ப் பினைப் பெற்று பயன் அடைந்துள்ளனர். பிளேஸ்மென்ட் ஆஃபீசராக, எலெக்ட்ரானிக்ஸ் துறைத்தலைவர் பேரா.ம.பாஸ்கரன் விளங்குகிறார்.

**இந்தக் கல்லூரியில் இயங்கும் Womens Cellலும் NSS யூனிட்டும் சபாஷ் பெற்றுள்ளன.**

**கேட்டரிங் சயின்ஸ் படித்துவிட்டு வெளிநாட்டு வேலைக்குச் செல்லும் ஆயிரம் பேர் ஒரே கிராமத்தைச் சார்ந்தவர்கள். இவர்களில் 300 பேர் கே.எஸ்.ஜி கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் படித்தவர்கள்!**

பி.எஸ்ஸி கேட்டரிங் சயின்ஸ் பயிலும் மாணவர்கள், சிங்கப்பூரிலுள்ள பல பிரபல நிறுவனங்களிலும் இதர வெளிநாட்டு கப்பல் நிறுவனங்களிலும் வேலை வாய்ப்பினைப் பெற்றுள்ளனர்.

கடந்த வருடம் பயோடெக்னாலஜியில் பல்கலைக் கழக ரேங்க் பெற்ற செல்வி. சர்மிளா என்ற மாணவிக்கு, கல்லூரி பட்டமளிப்பின்போது அவர் செலுத்திய அனைத்து செமஸ்டர் கட்டணமும் திருப்பி அளிக்கப்பட்டது. இது கல்லூரிதாளாளரின் தாய்மை குணத்தை வெளிப்படுத்துகிறது.



மேலும், நமது உள்நாட்டு பெரிய நிறுவனங்களான ஹோட்டல் மற்றும் ஏர்லைன்ஸ் நிறுவனங்களிலும், கேட்டரிங் சயின்ஸ் பயின்ற மாணவர்களுக்கு வேலை வாய்ப்புகள் பெற்று தரப்பட்டுள்ளன. பி.எஸ்ஸி கேட்டரிங் சயின்ஸ் & ஹோட்டல் மேனேஜ்மென்டின் துறைத் தலைவராக பேரா.த.கார்த்திக் கேசவன் விளங்குகிறார். இவர் எம்.எஸ்ஸி கேட்டரிங் சயின்ஸ் மற்றும் எம்.ஃபில் கேட்டரிங் சயின்ஸும் பயின்றவர்.

இதே போல் அதிக அளவு வேலை வாய்ப்புகளை பெற்றவர்கள், கணினித் துறைச் சார்ந்த படிப்புகளைப் பயின்றவர்கள். 2007-08ஆம் கல்வியாண்டில் 68 பேரும், 2008-09ல் 32 பேரும், 2009-10ல் 54 பேரும், Infosys, i-solve, IDBI, Majestic Infotech, HCL,Suthurland, Wipro, Accenture, Philips போன்ற பெரிய நிறுவனங்களில் கேம்பஸ் இன்டர்வியூ மூலம் வேலை வாய்ப்பைப் பெற்றுள்ளனர்.

# கே.எஸ்.ஜி.



பி.எஸ்ஸி பயோடெக்னாலஜி பயின்ற மாணவ - மாணவிகள் Biocon, Dr.Reddy's Laboratories, Nicholas Primol India Ltd, Serun Institute of India, Bharat Serom, Wockhadrt limited, Krebs Biochemicals, Zydms Caclia Panacea Biotech போன்ற உள்நாட்டு வெளிநாட்டு நிறுவனங்களில் வேலை வாய்ப்பினைப் பெற்றது அனைவருக்கும் பெருமை சேர்க்கிறது.

இக்கல்லூரியில் இன்ஷ்யூரன்ஸ் திட்டம் ஒன்று சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது. இங்கு பயிலும் மாணவர்களுக்கு மட்டுமல்லாது அவர்களது பெற்றோர்களுக்கும் காப்பீடு செய்யப்படுகிறது. கடந்த வருடம் விபத்தில் மரண மடைந்த மாணவர் குடும்பத்துக்கு ரூ.1,50,000வரை இன்ஷ்யூரன்ஸ் பணம் பெற்று தரப்பட்டுள்ளது. மேலும் இத்திட்டம் கல்லூரி பேராசிரியர்களுக்கும் செய்து தரப்பட்டுள்ளது'' என்றார்.

பல்வேறு நிலையில் கல்விச் சேவையில் நற்கடன் ஆற்றிவரும் கே.எஸ்.ஜி கல்லூரியில் நாமும் பயின்று பயன்பெறலாமே!

# நினைச்ச கோர்ஸ் கிடைக்கலென்னா?

○ ஜி.எஸ்.எஸ்

பள்ளி இறுதி வகுப்பு படிக்கும்போது உங்களுக்கு ஓர் எண்ணம் தோன்றியிருக்கும். ஐ.ஏ.எஸ்., பி.இ., எம்.பி.பி.எஸ்., பி.காம். இப்படிக் குறிப்பிட்ட ஒரு கோர்ஸில்தான் சேர வேண்டுமென்று. சிலருக்கு மிகவும் சிறு வயதிலிருந்தே இந்தத் தெளிவு வந்திருக்கும்.

ஆனால் உங்கள் கனவு கோர்ஸ் உங்களுக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம். அதற்குக் காரணம் பலவாக இருக்கலாம். முக்கியமாக அந்த கோர்ஸில் சேரத் தேவைப்பட்ட மதிப்பெண்களை நீங்கள் பெற முடியாமல் போயிருக்கலாம்.

ஆக, வேறு ஏதோ கோர்ஸில்தான் சேரும்படி ஆகிவிட்டது. என்ன செய்வீங்க? இடிந்து போய்விடுவீங்களா? உற்சாகமிழந்து விடுவீங்களா? அப்படியானால் உங்களுக்காகத்தான் இந்தக் கட்டுரை!

குறிப்பிட்ட 'அந்த' கோர்ஸில்தான் சேர வேண்டும் என்று நீங்க ஏன் நினைச்சீங்க?
அவசரப்படவேண்டாம். நன்கு யோசித்து முதலில் அதற்கான ஒரு பதிலைச் சொல்லுங்க.

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

**அந்தப் படிப்பைப் படித்தால் 'பெருமை' என்ற எண்ணமா?**

உங்கள் இலக்கு சரியானதா என்பதை யோசியுங்கள். குழந்தைகளிடம் ''நீங்கள் பெரியவனானதும் என்ன ஆவீங்க?'' என்று கேட்டுப் பாருங்கள். அவர்களில் ஒரு சிலர் ''கண்டக்டர் ஆவேன்'' என்பார்கள் முகம் கொள்ளாத பெருமையுடன். அதாவது டிக்கெட்டைக் கிழித்துக் கொடுப்பதில் ஒரு கர்வம். அவர்களுக்குத் தெரியாது கோடையில் பேருந்து நிரம்பி வழியும்போது, கண்டக்டராக வேலைப் பார்ப்பது எவ்வளவு சிரமம் என்பது.

எந்தப் படிப்பைப் படிப்பதால் பெருமை என்று நீங்கள் நினைக்கிறீர்களோ, அந்தப் பெருமை நிலைத்திருக்குமா என்று தெரியாது.

ஓர் உதாரணத்துக்கு மருத்துவக் கல்வியை எடுத்துக் கொள்வோம். அது பெருமைக்கு உகந்தது தான். ஆனால் அப்படி ஒரு பணியைப் பெற்ற சிலரும் மனம் கசந்து போய் இருப்பது எனக்குத் தெரியும். அதேபோல் ஐ.ஏ.எஸ். ஆனவர்களில் அரசியல்வாதிகளோடு மல்லுக்கு நின்று அவர்களால் இடம் மாற்றப்பட்டு சோர்ந்து போனவர்களும் உண்டு. எனவே, 'பெருமை' என்பது என்றைக்குமே நிலைத்து நிற்கும் என்று சொல்ல முடியாது.

**சின்ன வயதிலிருந்தே வீட்டில் அந்தப் படிப்பைத் தான் நீ படிக்கணும் என்று சொல்லிச் சொல்லி அந்த எண்ணத்தை அழுத்தமாக உங்களுக்குள் உருவாக்கியிருந்தார்களா?**

ஒருவேளை அந்தக் கோர்ஸில் சேர்ந்து தேர்ச்சி பெற வேண்டும் என்பது உங்கள் அப்பா அல்லது அம்மாவின் மாணவப் பருவ ஏக்கமாக இருந்து அது நிறைவேறாமல் போயிருக்கலாம். அதனால் ஏற்பட்ட ஏக்கத்தை உங்கள் மூலம் தீர்த்துக் கொள்ள நினைத்திருக்கலாம். தாய், தந்தைக்கு அளிக்கப்பட வேண்டிய மரியாதை அலாதி தான். ஆனாலும் இது உங்கள் வாழ்க்கை. இதில் பிறரது ஆலோசனைகளைக் கேட்டுக் கொள்ளலாமே தவிர முடிவை நீங்கள்தான் எடுக்க வேண்டும். உங்களுக்கு ஆர்வமில்லாத, ஆனால் வீட்டினர் கட்டாயப்படுத்திய, ஒரு கோர்ஸ் உங்களுக்குக் கிடைக்காததே ஒருவிதத்தில் வரம் தான்.

**அந்தப் படிப்பின்மீது உங்களுக்கு நிறைய ஆர்வமா? அது உங்களுக்கு மிகவும் பிடித்த பாடமா?**

மிகப் பெரும்பாலான படிப்புகளை நீங்கள் பகுதி நேரமாகக் கூடப் படிக்கலாமே. இப்போதெல்லாம் வேதியியல், அறிவியல் போன்ற



## ஒரு தாயின் கேள்வி!

மகனே! நீ இருக்க ஒரு கருவறை இருந்தது என் வயிற்றில்...
நான் இருக்க ஒரு இருட்டறை கூடவா இல்லை உன் வீட்டில்?

- எஸ்.பூபதி, பி.எட், ஸ்ரீ வாரி கல்வியியல் கல்லூரி,
தென்னரசம்பட்டு, திருவண்ணாமலை

(பரிசோதனைச் சாலைகள் தேவைப்படும்) கல்வியைக் கூட பகுதி நேரக் கல்வியாகப் படிக்க முடிகிறதே. பெரும்பாலான சப்ஜெக்ட்களை தொலை தூரக் கல்விமுறையிலும் முடிக்க முடியுமே. எனவே உங்களுக்கு ஆர்வமான படிப்பை உங்களால் எப்படியும் படிக்க முடியும். வழிமுறையில்தான் கொஞ்சம் மாற்றம், இருக்கும்.

**'அந்தக் கோர்ஸை முடித்தால்தான் வளமான வருங்காலம் இருக்கிறது' என்கிறீர்களா?**

வருங்காலத்தில் வருமானம் அதிகம் இந்த கோர்ஸில்தான் என நினைக்கிறீர்களோ? ஒன்றில் தெளிவு பெறுங்கள். எந்தக் கல்வியாக இருந்தாலும் முதல் தரமாகப் படித்து மதிப்பெண்கள் பெற்றால், அதற்கான அங்கீகாரம் இருக்கத் தான் செய்கிறது. சரித்திரப் பாடத்தில் மிகச் சிறப்பாகக் கல்வியை முடித்தவர்கள்கூட உலக அளவில் அங்கீகாரமும், வருமானமும் பெற்று வருகிறார்கள்.

தவிர மூன்று நான்கு வருடங்களுக்குப் பிறகு வேலைவாய்ப்புகள் எந்தத் துறைக்கு இருக்கும், எதற்கு இருக்காது என்பதையெல்லாம் துல்லியமாகக் கணிக்க முடியாது. (சமீபத்தில் சந்தித்த பொருளாதாரச் சரிவை மறக்க முடியுமா? கணினிப் பொறியாளர்களையெல்லாம் துவண்டு விழச் செய்த நிலை அல்லவா அது?).

போகப்போக எந்தத் துறையில் சிறந்த வேலை வாய்ப்புகள் அதிகரிக்கிறதோ அதற்கான படிப்புகளை அதிகப்படியாக பகுதி நேரத்தில் படிக்க முடியாதா என்ன?

**இதையும் மனதில் கொள்ளுங்க!**

இறைவன் மேலும் ஒரு சிறப்பான பாதையை அளிப்பதற்காகக் கூட இந்த தாற்காலிக ஏமாற்றத்தை நமக்குக் கொடுத்திருக்கலாம். விபத்தில் ஒரு காலை இழந்தபோது, நடிகை சுதா சந்திரன், எவ்வளவு துடித்திருப்பார். ஆனால் அந்த விபத்தே அவரது வருங்காலத்தை நல்லதொரு உயரத்துக்குக் கொண்டு போனதே!

கேரம் சாம்பியனாக விளங்கிய அனுராஜா என்பவர் ''எனக்கு வாலிபால் விளையாட்டில்தான் இஷ்டம். ஆனால் உடல்நலக் குறைவு காரணமாக அதை ஆடமுடியாமல் போனது. அப்புறம்தான் கேரம் பக்கம் கவனம் செலுத்தத் தொடங்கினேன்'' என்று கூறியதுண்டு.

**'இருந்தாலும் கூட' என்று மெலிதாக தயங்கிறீங்களா?**

ஊச்! எல்லாவற்றையும் விட முக்கியமாக, எப்படியும் நீங்கள் நினைத்த கோர்ஸ் உங்களுக்குக் கிடைக்கவில்லை. வேறு கோர்ஸில்தான் சேர்ந்திருக்கிறீர்கள். அதை வேண்டாவெறுப்பாகப் படிப்பதைவிட, பிடித்துப் படித்தால்தான் அதில் சிறக்க முடியும் என்ற நடைமுறை உண்மையை எண்ணிப் பாருங்க. இல்லா விட்டால் கனவு கண்ட கோர்ஸையும் இழந்து, கைக்குக் கிடைத்த கல்வியையும் அலட்சியம் செய்து, வருங்காலத்தைத் தொலைத்து விட நேரிடும். எனவே தெளிவு பெறுங்க. ஆல் தி பெஸ்ட்!

# வளையலோ வளையல்! வண்ண வண்ண வளையல்!



மெட்டல், அரக்கு
கண்ணாடி...
மூன்றும் கலந்த
கலவையில்...
மணப்பெண்ணை
மகாராணியாக்கும்
மங்கல வளையல்கள்.

கலர் கலரா
அள்ளுங்க!



சங்கு
வளையல்...
லேட்டஸ்ட் யூத்
ஸ்பெஷல்!



அரக்கின் அழகு
அனைத்து நிறங்களிலும்...



பீட் வொர்க் வேலைப்பாடுடன்
ரிச் லுக் வளையல்கள்!



'பள பள' ஃபேன்ஸி
வளையல்கள்...


டோபாஸ்,
36, சிவப்பிரகாசம் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17
தொலைபேசி எண்: 044 - 4207 0430




அனுராதா

# A to Z கல்வி கைடு!

## அக்ஷயா பொறியியல் தொழில் நுட்பக் கல்லூரி, கோயம்புத்தூர்.


இ. சுப்பிரமணியன்

அக்ஷயா பொறியியல் தொழில் நுட்பக் கல்லூரி, பிரபல தொழிலதிபர்களான உயர்திரு. இ. சுப்பிரமணியன் (கல்லூரி தலைவர்), உயர்திரு. அ.நாகராசன் (கல்லூரி செயலாளர்), முனைவர் கெ. தனுஷ்கோடி (கல்லூரி இயக்குநர்) மற்றும் நண்பர்களால் உருவாக்கப்பட்ட அக்ஷயா அறக்கட்டளையின் மூலம், 2009ம் ஆண்டு தொடங்கப்பட்டது. இக்கல்லூரி, கோவை - பொள்ளாச்சி நெடுஞ்சாலையையொட்டி மிகப் பரந்த பரப்பளவில், நல்ல உள் கட்டமைப்புடன் பாதுகாப்பான சூழ்நிலையில் அமையப் பெற்றுள்ளது. இக்கல்லூரி, மிகவும் இரம்மியமான சூழ்நிலையில் மனத்தை வருடும் வண்ணம் கட்டப்பட்டுள்ளது. இக்கல்லூரியானது, தன்னகத்தே பயிலும் மாணவமாணவியருக்குவளாகநேர்காணல்



"பொறுப்பு மிக்க

## அக்ஷயாவின் சிறப்பம்சங்கள்

1. தகுதி மற்றும் திறமை வாய்ந்த ஆசிரியர்கள்
2. காற்றோட்டமுள்ள விசாலமான வகுப்பறைகள்.
3. அனைத்து வகுப்பறைகளிலும் LCD புரொஜக்டர் வசதி
4. 4 MBPS 1:1 இன்டர்நெட் வசதி
5. அனைத்து வசதிகளுடன் கூடிய கணினி ஆய்வகம்
6. கணினி மயமாக்கப்பட்ட நூலகம்
7. 10,000க்கும் மேற்பட்ட புத்தகங்கள், தேசிய மற்றும் சர்வதேச ஆய்வுக் கட்டுரைத் தொகுப்புகள்.
8. தொழில் நுட்ப மாற்றங்களுக்கு ஏற்ப அமைக்கப்பெற்ற நவீன ஆய்வகங்கள்
9. கல்லூரி வளாகத்தில் மாணவ மாணவியருக்கு விடுதி வசதி
10. சுகாதாரமான உணவு மற்றும் சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் வசதி
11. சிறப்பு மென்பொருள் சார்ந்த மொழி ஆய்வகம்
12. கோவை, பொள்ளாச்சி, பாலக்காடு மற்றும் திருப்பூர் மாவட்டங்களிலிருந்து நவீன பேருந்து வசதி
13. நவீன வசதிகளுடன் கூடிய கலையரங்கம் மற்றும் கருத்தரங்க அறை
14. நவீன உடற்பயிற்சிக்கூடம்.





# பாறியாளர்களை உருவாக்குவோம்!”

கல்லூரியைப் பற்றி தலைவர் சுப்பிரமணியன் மற்றும் செயலாளர் நாகராசன் கூறியதாவது, ''எங்களிடம் மிகச் சிறந்த ஆசிரியப் பெருமக்கள் உள்ளதால் கற்றல் மற்றும் கற்பித்தலை நன்றாகச் செயல்படுத்தி வருவதன் மூலம், நமது முன்னாள் ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்களின் கூற்றுப்படி, இந்தியாவை வல்லரசாக மாற்றுவதற்கேற்ப மிகச் சிறந்த பொறியாளர்களை உருவாக்குவோம். இன்னும் சில ஆண்டுகளில் எங்கள் கல்லூரியைத் தமிழகத்திலேயே முதன்மையான கல்லூரியாக உருவாக்குவோம்.''



அ.நாகராசன்

ஏற்படுத்தித் தருவதன் மூலம், அவர்களுக்கு அந்நிறுவனங்களில், வேலை பெற்றுத் தருவதில் இக்கல்லூரி முனைப்புடன் செயல்படுகிறது.

இக்கல்லூரியின் இயக்குநர் முனைவர் கெ.தனுஷ்கோடி அவர்கள் 36 ஆண்டுகளுக்கும் மேல், ஆசிரியப் பணி, ஆராய்ச்சிப் பணி மற்றும் நிர்வாகத்தில் பல்வேறு அரசு, தனியார் பொறியியற் கல்லூரிகளில் பணியாற்றிய அனுபவம் பெற்றவர். 45க்கும் மேற்பட்ட ஆராய்ச்சி மாணவர்கள் இவரிடம் தங்களுடைய ஆராய்ச்சியைப் பதிவு செய்துள்ளனர். மேலும், இவர் கோவை அண்ணா பல்கலைக் கழகத்தின் சிண்டிகேட் உறுப்பினராகவும், பாடத்திட்டக் குழுவின் தலைவராகவும் பொறுப்பு வகித்து வருகிறார். இவரிடம் பயின்ற பல மாணவ மாணவியர்கள் இந்திய மற்றும் வெளிநாட்டு நிறுவனங்களில் முக்கியப் பொறுப்புகள் வகித்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கல்லூரியில் கீழ்கண்ட இளநிலை பொறியியல் பட்டப் படிப்பு பாடப் பிரிவுகள் செயல்பட்டு வருகின்றன.

1. B.E மெக்கானிக்கல் இன்ஜினியரிங்
2. B.E எலெக்ட்ரிக்கல் மற்றும் எலெக்ட்ரானிக்ஸ் இன்ஜினியரிங்
3. B.E எலெக்ட்ரானிக்ஸ் மற்றும் கம்யூனிகேஷன் இன்ஜினியரிங்
4. B.E கம்ப்யூட்டர் சயின்ஸ் மற்றும் இன்ஜினியரிங்
5. B.E - சிவில் இன்ஜினியரிங்*

மேலும் இக்கல்லூரி, அரசு நிறுவனங்கள் மற்றும் தனியார் பன்னாட்டு நிறுவனங்களுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்யும் நோக்குடன் செயல்பட்டு வருகிறது. இதன் முன்னோடியாக, MSDN Academic Alliance என்ற ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களுடன் புரிந்துணர்வு அடிப்படையில் மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இது போன்ற ஒப்பந்தங்கள், மாணவ மாணவியருக்கு நிறுவனத்தில் நேரடியாக வேலை செய்யும் அனுபவத்தைப் பெற உதவும்.

"நல்லா யோசிச்சு எடுத்த முடிவுதானா?'' என்றார் பள்ளி முதல்வர். சந்திரா சலனமேயில்லாமல், ''ஆமாம், மேடம்! எனக்கென்னவோ இதுக்கு மேல இதே வேலைல இருக்கறதுல அர்த்தமில்லைனு தோணுது. எதிர்கால நன்மைக்காக நான் கம்ப்யூட்டர் லைன்ல போனாத்தான் முடியும்!''

''உண்மைதான்! ஆனா உங்களை மாதிரி ஆர்வத்தோடும், அக்கறையோடும் பாடம் சொல்லித்தரும் ஆசிரியர்கள் ரொம்ப தேவை. எனி வே, வாழ்த்துகள். இந்த மாதம் இறுதியில் நீங்க ரிலீவ் ஆகிடலாம்.''




நிரஞ்சனா பாலு

ஸ்கூட்டியில் வெளியே வந்து, இரண்டு தெரு தாண்டுவதற்குள், ஏதோ சந்திலிருந்து வந்த முரட்டு பைக், சந்திராவை நிலை குனிய வைத்தது. அவள் கீழே விழுந்து மயங்கினாள்.

சந்திரா கண்விழித்து பார்த்த போது அருகே யாரும் இல்லை. அது ஒரு உயர்தர மருத்துவமனை என்பது மட்டும்தான் தெரிந்தது. சந்திரா அசைவதைக் கண்டு, வெளியே காத்திருந்த அவளுடைய அம்மா, வேகமாக ஓடி வந்தார்.




''வலது கை ஃப்ராக்சர். ஆபரேஷன் பண்ணியிருக்காங்க. தலைல பிரச்னையில்ல. சி.டி. ஸ்கேன் பண்ணியாச்சு'' என்றாள்.

''அம்மா பணத்துக்கு என்ன பண்ணே?'' என்றாள் பலவீனக் குரலில்.

''கவலைப்படாதே! உன் ஸ்டூடன்ட்ஸ் நிறைய பேர் சேர்த்து கட்டிட்டாங்க! உன்னோட உண்மையான உழைப்புக்கு கிடைச்ச மரியாதை. உன்கிட்ட பிளஸ் டூ படிச்ச நிறைய மாணவர்கள் இப்ப பெரிய வேலைல இருக்காங்க போலிருக்கு. இப்ப இருக்கிற மாணவர்கள் அவங்கள தொடர்புகொண்டு நமக்கு உதவி பண்ண ஏற்பாடு பண்ணிட்டாங்க!''

''என்னம்மா இது! எனக்கு மனசுக்கு கஷ்டமாயிருக்கு.''

''ஆனா வேற வழி தெரியலையே. நானா கேக்கலை! அவங்களா செஞ்சதுதானே!'' என்றாள்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே பள்ளி முதல்வர் உள்ளே வந்தார், ''ஹவ் ஆர் யூ சந்திரா? எதைப் பற்றியும் கவலைப்பட வேணாம்! சீக்கிரமே பூரண குணம் ஆயிடுவிங்க'' என்று சொல்ல, சில மாணவர்களும் பூச்செண்டோடு வந்தார்கள். அவர்களது அன்பும் கரிசனமும் பூச்செண்டைவிட மணம் கமழ்ந்தது.

விடை பெற எத்தனித்த பள்ளி முதல்வரைப் பார்த்த சந்திரா, ''மேடம், நான் நேற்று கொடுத்த ராஜினாமா கடிதத்தைக் கிழிச்சுப் போட்டுடுங்க'' என்றாள். மேடம் ஆதரவாக சந்திராவின் கையைப் பிடித்தபடி சிரித்தார்.




**கல்லூரிக் குறும்பு**

# அதோ கதி!



மதுரையில் தியாகராசர் கலைக் கல்லூரியில் 1963-64ல் பி.யூ.சி படித்துக் கொண்டிருந்தபொழுது நடந்த சம்பவம் இது. எனக்கொரு உயிர் நண்பன் இருந்தான். எப்பவும் என் அருகிலேயே அமர்ந்து கமெண்ட் அடிப்பதில் வல்லவன். இவன் அடிக்கும் கமெண்டைக் கேட்டு பலதடவை நான் ஆசிரியர்களிடம் 'வார்னிங்' வாங்கியுள்ளேன்.

ஒரு சமயம், தமிழ் ஆசிரியர் கதி.சுந்தரம் என்பவரது தமிழ் வகுப்புநடக்கவிருந்தது. நேரம் கடந்தும் அவர் வகுப்புக்கு வராததால் நாங்கள் வராந்தாவில் நின்றபடி அரட்டை அடித்துக் கொண்டிருந்தோம். கூச்சலும் கும்மாளமுமாக இருந்த இடம், சிறிது நேரத்தில் நிசப்தமாகிவிட்டது. வேறென்ன, தமிழ் ஆசிரியர் வந்து கொண்டிருந்தார்.

என் நண்பனின் வாய் சும்மா இருக்குமா? ஆசிரியரின் காதுபடவே கமெண்ட் அடித்துக்கொண்டே வகுப்பறையில் நுழைந்தான். வகுப்பில் இருந்த அனைவருமே 'கொல்' என்று சிரித்துவிட்டனர்; ஒரு நிமிடம் ஆனது சிரிப்பொலி அடங்க. என்ன கமெண்டாக இருக்கும் என்று நினைக்கிறீங்க!

அவன் சொன்னது: 'அதோ, கதி!' என்பதுதான்.

- வி.எஸ்.மோகன், மதுரை

''உண்மைக்கும் காமெடிக்கும் என்ன வித்தியாசம்?''

''உங்கப் பொண்ணு அழகு என்பது உண்மை. ஆனா, அது உங்கப் பொண்ணு என்பது காமெடி!''

*- ரிஸ்வானா, முதலாமாண்டு பி.சி.ஏ., இதயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கும்பகோணம்*



பாரம்பரியத்துடன் கூடிய முன்னேற்றத்திற்கு

# வடமலையான் இணை மருத்துவ அறிவியல் கல்வி

இந்திய மருத்துவத்துறை கடந்த சில ஆண்டுகளாக அபரிமித வளர்ச்சி பெற்று வருகிறது. இந்திய மருத்துவத்துறைச் சந்தை 2005ம் ஆண்டு 22.8 பில்லியன் டாலர்களாக இருந்தது. இச்சந்தை 2011ம் ஆண்டு 50.2 பில்லியன் டாலர்களாகவும், 2016ஆம் ஆண்டு 78.6பில்லியன் டாலர்களாகவும் விரிவடையும் என கணிக்கப்பட்டுள்ளது. இந்த அபரிமிதமான வளர்ச்சி தரத்தினையும், மருத்துவ தொழில் நுட்பத்தையும் உறுதி செய்வதுடன், இந்தியாவில் மருத்துவச் சுற்றுலா வளர்ச்சியினையும் அதிகரிக்கச் செய்துள்ளது.

இந்திய மருத்துவத்துறை மருத்துவர்கள், நோய் கண்டறியும் மையங்கள், மருத்துவ ஆய்வகங்கள், மருத்துவக் கருவி தயாரிப்பாளர்கள், மருந்து தயாரிப்பாளர்கள், மருத்துவ ஆராய்ச்சி நிறுவனங்கள் மற்றும் மருத்துவக் காப்பீட்டு நிறுவனங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியது. இனி வரும் காலங்களில் மருத்துவத் துறை கட்டுமானம், தொலை மருத்துவம், மருத்துவக் கருவிகள், மருத்துவக் காப்பீடு, மருத்துவச் சுற்றுலா மற்றும் மருத்துவ மனிதவளப் பயிற்சி மற்றும் கல்வி ஆகிய துறைகளின் வளர்ச்சி பெரும் அளவில் இருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

நம் நாட்டுக்கு மட்டுமே இன்னும் 75 லட்சம் இணை மருத்துவ வல்லுநர்கள் தேவைப்படும் நிலையில் உலக மயமாக்கலின் விளைவாக, வெளி நாட்டிற்க்கும் நமது மருத்துவ வல்லுநர்கள் செல்லக்கூடிய சூழ்நிலை உள்ளது. இந்த மனிதவளத் தேவை மருத்துவத் துறையில் கல்வி மற்றும் பயிற்சியின் அவசியத்தை விரைவு படுத்துகிறது. இத்தருணத்தில் இணை மருத்துவக் கல்வி முக்கியத்துவம் வாய்ந்தாகத் திகழ்வதுடன் மருத்துவத் துறையின் முக்கிய அங்கமாகவும் செயல்படுகிறது. இதனை மனதில் கொண்டு வடமலையான் மருத்துவமனையின் நிர்வாக இயக்குநர் டாக்டர்.வ.புகழகிரி அவர்களின் சீரிய முயற்சியில் 2006ல் வடமலையான் இணை மருத்துவ அறிவியல் கல்லூரி மாண்புமிகு உள்துறை அமைச்சர் திரு.ப.சிதம்பரம் அவர்களால் துவங்கப்பட்டது.

வடமலையான் இணை மருத்துவ அறிவியல் கல்லூரி அழகப்பா பல்கலைக் கழகம், மதர் தெரஸா மகளிர் பல்கலைக்கழகம், இந்தியன் மெடிக்கல் அஸோஸியேசன், பாரத் சேவக் சமாஜ், மதுரை அரசினர் மகளிர் பல்தொழில்நுட்பக் கல்லூரி மற்றும் தமிழ்நாடு குடிசைமாற்று வாரியம் ஆகியவற்றுடன் இணைந்து பல மருத்துவப் பயிற்சிகளை சிறப்பாக அளித்து வருகிறது.







**வடமலையான் இணை மருத்துவக் கல்லூரியில் வழங்கப்படும் பயிற்சிகள்**

**பட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றவர்கள்:**

• எம்.பி.ஏ. மருத்துவ மேலாண்மை • எமர்ஜென்ஸி மெடிக்கல் டெக்னாலஜி • கார்டியாக் நான் இன்வேசிவ் டெக்னாலஜி

**பன்னிரண்டாம் வகுப்பு தேர்ச்சி பெற்றவர்கள்:**

• பி.பி.ஏ. மருத்துவ மேலாண்மை
• பி.எஸ்.சி அப்ளைடு மைக்ரோ பயாலஜி
• டிப்ளமோ மெடிக்கல் லேப் டெக்னாலஜி

**சான்றிதழ் படிப்புகள்**

• நர்ஸிங் அசிஸ்டன்ட் எமர்ஜென்ஸி
• மெடிக்கல் டெக்னாலஜி

**குறுகிய காலப் பயிற்சிகள்**

• வார்டு செக்ரெட்டரி • மருத்துவ கருவிகள் மேலாண்மை • உதவி மருத்துவ ஆய்வக தொழில் நுட்பம் • டயாலிசிஸ் அசிஸ்டண்ட் • மருத்துவ மனை வரவேற்பு மேலாண்மை

**பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றவர்கள்:**

• பர்ஸ்ட் எய்டு அண்டு பிராக்டிகல் நர்ஸிங் • டிப்ளமோ படிப்புகள் மெடிக்கல் லெபாரட்டரி டெக்னாலஜி • எக்ஸ்ரே டெக்னிஷியன் • டிப்ளமோ இ.சி.ஜி. டெக்னீஷியன் • பரேஷன் தியேட்டர் டெக்னீஷியன்

**பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றவர்கள் & பெறாதவர்கள்**

• முதியோர் மற்றும் அவசர கால செவிலியர் பயிற்சி, • மருத்துவ ஆய்வக உதவியாளர் பயிற்சி, • வீட்டு செவிலியர் பயிற்சி குறிப்பிட்ட பயிற்சிகளை எங்களிடம் முடித்தவர்கள் தற்போது தமிழகத்தில் உள்ள முன்னணி மருத்துவமனைகளில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. மாணவர்களுக்கு பயிற்சி அளிக்க அனைத்து துறைகளையுடைய தரம்வாய்ந்த சுற்றுசூழல் மேலாண்மைக்கான ISO 14001:2004 தரச்சான்றிதழை இந்திய வரலாற்றிலேயே முதன் முறையாக பெற்ற வடமலையான் மருத்துவமனை உள்ளது. மாணவர்களின் திறமையை மேம்படுத்த அனுபவமும் ஆற்றலும் வாய்ந்த ஆசிரியர்கள், பலதுறையைச் சார்ந்த நூல்களை கொண்ட நூலகம், மாணவர்கள் வேலை வாய்ப்புக்கு வழிகாட்டும் வேலைவாய்ப்பு மையம், குறிப்பிட்ட இடைவெளிகளில் மற்ற இந்திய ஆஸ்பத்திரிகளை பார்வை யிடுதல், மருத்துவதுறை வல்லுநர்களின் மாதாந்திர சொற்பொழிவு மற்றும் நடப்பு நிகழ்வுகளை அறிய இன்டர்நெட் வசதியினை கொண்ட கணினி மையம் ஆகியவை வடமலையான் இணை மருத்துவ அறிவியல் கல்லூரியின் சிறப்பம்சங்களாகும்.

மருத்துவ தரச்சான்று மற்றும் மருத்துவ சுற்றுலா என மருத்துவத்துறை ஒளி வீசும் நேரத்தில் எங்கள் மருத்துவ மனையின் மனித வளத்தைக் கொண்டு நாங்களும் எங்கள் சமூகமும் மனம் வீச உழைத்து கொண்டிருக்கிறோம். மருத்து வத் துறை மகத்தான துறையாக மதிக் கப்பட மாண்பு கொண்ட மனித வளத்தை எங்களுடன் இணைக்கக்காத்து கொண்டு இருக்கிறோம் என்று மதுரை வடமலையான் இணை மருத்துவ அறிவியல் கல்லூரியின் முதல்வர் **பேரா.தி.ஜெயராஜசேகர்** தெரிவித்தார்.

**மேலும் தொடர்புகளுக்கு -**
**போன்: 0542-2545400 (100 lines),**
**0452-2545941(direct line)**
**e-mail:paramedical@vadamalayan.org**


டாக்டர் ஜி.துரைசாமி

செயலாளர் திருமதி. லாவண்யா கதிர் அவர்களும் சேர்ந்து லாமிகா கல்வி அறக்கட்டளையை வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள்.

கதிர் கல்வி நிறுவனங்கள் என்ற மிகப்பெரிய ஆலமரத்தின் கீழ் கதிர் பொறியியல் கல்லூரி, கதிர் மேலாண்மை கல்லூரி, செங்கதிர் ஆசிரியர் பயிற்சி நிறுவனம் மற்றும் கதிர் கல்வியியல் கல்லூரிகள் ஆகியவை சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

கதிர் கல்வி நிறுவனங்களின் ஓர் அங்கமான கதிர் பொறியியல் மற்றும் மேலாண்மை கல்லூரியில் செயல்பட்டுவரும் பாடப் பிரிவுகள் பின்வருமாறு:

B.E - ECE, B.E - EEE, B.E - CSE, B.Tech - IT, B.E - MECHANICAL, B.E - AERONAUTICAL*

MBA -Master of Business Administration

(*Subject to approval) இந்த கதிர் கல்வி நிறுவனங்கள், பாராட்டத்தக்க தனிச்சிறப்பு களைக் கொண்டு இயங்கி வருகின்றன.




## சிறப்பம்சங்கள்

1. விரிவான கல்லூரி வளாகம்
2. தூய்மையான சுற்று சூழல்
3. திறமையான ஆசிரியர்கள்
4. நவீனமயமாக்கப்பட்ட ஆய்வுக் கூடங்கள்
5. இணையதளம் மற்றும் wifi வசதிகள்
6. உயர்தர உணவகம்
7. பாதுகாப்பான குடிநீர் வசதி
8. பாதுகாப்பான போக்குவரத்து
9. மாணவ / மாணவிகளுக்கு அனைத்து வசதிகளுடன் தனித்தனி - விடுதிகள்
10. 500க்கும் மேற்பட்ட கணிணி வசதிகள் கொண்ட ஆய்வுக்கூடம்
11. குளிர்சாதன வசதியுடன் கூடிய செமினார் ஹால் / ஆடிட்டோரியம்
12. 10,000க்கும் மேல் நூல்களைக் கொண்ட அதிநவீன நூலகம்
13. விமான நிலையத்தில் இருந்து 3½ கி.மீ தொலைவில் கல்லூரி அமைந்துள்ளது.
14. நவீன உடற்பயிற்சிக் கூடம்
15. ஒவ்வொரு மாணவ, மாணவியர்களுக்கு தனித்தனியே கணிணி வழங்கப்படுகின்றது.

# எதிர்காலம்!



### மாணவர்களின் கருத்து:

"படிப்புடன், மாணவர்களின் தனித் திறமையை வெளிக்கொணடுவா அதிக வாயப்புகள் கொடுக்கப் படுகின்றன. புதிய கல்லூரி படிப்பில் நவீன உத்திகளைப் பயன்படுத்துகிறோம். கல்வியாளர்களின் கலைக்கூடம்தான். இந்த கதிர் பொறியியல் கல்லூரி நிறுவனங்களில் அளிக்கப்படும் தொடர் பயிற்சி மிகவும் பயன் உள்ளதாக இருக்கிறது. புதிய கல்லூரி: ஆனால் ஐம்பது வருடங்களுக்கு மேல் அனுபவம் வாய்ந்த கல்லூரி என்று உணர்கிறோம்."




கதிர் கல்வி நிறுவனங்கள்
'விஸ்டம் ட்ரீ' நீலாம்பூர், அவினாசி ரோடு, கோயம்புத்தூர்-641 062.
தொலைபேசி: 0422-6581018, 6554778. மொபைல்: 98422 56778
இ-மெயில்: kathirce@gmail.com
வெப்சைட்: www.kathircollegeofengineering.ac.in






''வீட்டிலேயே பர்ஸ் வெச்சிட்டு வந்துட்டேன். எனக்கு அவசரமா ஆயிரம் ரூபா வேணும்.''

''நான் முப்பது ரூபா தர்றேன்... ஆட்டோ பிடிச்சு வீட்டுக்குப் போய் பர்ஸ் எடுத்துட்டுவா.''

- மணிகண்டபிரபு,
எம்.பி.ஏ.
பாரதிதாசன்
பல்கலைக்கழகம்,
திருச்சி






# சிரிப்பா சிரிங்க!

''வக்கீலுக்கும் டாக்டருக்கும் என்ன வித்தியாசம்?''

''தெரியலியே''

''வக்கீல்கிட்ட போனா கேஸ் முடியாது. டாக்டர்கிட்ட போனா கேஸ் முடிஞ்சுடும்.''

- ர. ராஜீவன்,
சேதுபதி
மேல்நிலைப்
பள்ளி, மதுரை



நமக்குப் பிடித்தவர்கள் நம்முடன் இருக்க வேண்டும் என்று ஆசைப்படுவதை விட, நலமுடன் இருக்க வேண்டும் என்று ஆசைப்படு! அதுதான் உண்மையான அன்பு! (மனசை டச் பண்றதுன்னு சொல்வாங்களே. அதானா இது!)



- கி.ஷர்மிளா, மூன்றாமாண்டு பி.ஈ.,
பிரியதர்ஷினி பொறியியல் கல்லூரி,
வாணியம்பாடி

''யாரு பேசறது?''

''நான் செல்லமா பேசறேன்''

''நான் மட்டும் என்ன கோபமாவா பேசறேன்!''

- ஆர். சாரதா, பன்னிரண்டாம் வகுப்பு
எஸ்.எஃப்.எஸ் மேல்நிலைப் பள்ளி, புதுக்கோட்டை





''கஞ்சன்னா யாரு?''

''நூறு எஸ்.எம்.எஸ். அனுப்பினாலும் ஒரு ரிப்ளை கூட அனுப்பாதவங்க சார்.''

- எஸ்.பூபதி, பி.எட்., ஸ்ரீ வாரி கல்வியியல் கல்லூரி, தென்னரசம்பட்டு, திருவண்ணாமலை



"ஹாய் ஃப்ரெண்ட்ஸ், நீங்க படிச்சு முடிச்சிட்டு வேலைக்குப் போகத் தயாராக இருக்கிற மாணவரா? மாணவியா? இன்டர்வ்யூவுக்குப் போறீங்களா? வெற்றி பெற வாழ்த்துக்கள். ஒரு வேளை, உங்களுக்கு இந்த வேலை கிடைக்கலையா? மனம் தளராதீங்க! தன்னம்பிக்கை இழக்காதீங்க!" என்கிறார் சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ணா மிஷன் ஆஸ்ரமத்தின் சுவாமி போதமயானந்தா. அவரோட ஊக்கமூட்டும் டானிக் வார்த்தைகளைப் படியுங்க! மனச்சோர்வு ஓடியே போயிடும்; தன்னம்பிக்கையும், புத்துணர்ச்சியும் வந்திடும்.




# இன்டர்வ்யூ போறீங்களா?

உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா?

மிக நல்ல மதிப்பெண்கள் எடுத்து கல்லூரியில் படிப்பை முடித்த கையோடு சுவாமி விவேகானந்தாவுக்கு வேலை கிடைக்கவில்லை. ஆறு மாத காலம் அவர் காத்திருக்க நேர்ந்தது. அதன் பிறகே அவருக்கு ஒரு பள்ளிக் கூடத்தில் அவருக்குப் பிடித்த மாதிரியான தலைமை ஆசிரியர் வேலை கிடைத்தது. சுவாமி விவேகானந்தருக்கே இப்படி ஒரு அனுபவம் ஏற்பட்டது என்றால் சாதாரணமான இளைஞர்கள் எம்மாத்திரம்?

**வேலை தேடும் இளைஞர்களே!**

எறும்புகளைப் பாருங்கள். அவற்றிடமிருந்து விடாமுயற்சியைக் கற்றுக் கொள்ளுங்கள். ஒரு எறும்பு ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறது. அதன் வழியில் ஒரு சிறு கட்டை விழுந்து கிடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அங்கே வந்ததும், எறும்பு, வழியில் ஏதோ ஒரு தடை உள்ளதே என்று மனம் ஒடிந்து வந்த வழியே திரும்பிச் சென்று விடுவதில்லை. அந்தக் கட்டையின் மேலே ஏறிச்சென்று அதனைக் கடந்து செல்ல முடியுமா என்று பார்க்கிறது. அப்படி ஏறிச் செல்ல முடியாத பட்சத்தில், கட்டைக்குக் கீழே அதாவது வழி தென்படுகிறதா என்று பார்க்கிறது. வழி தென்பட்டால், கட்டைக்குக் கீழே புகுந்து, அந்தப் பக்கத்தை அடைந்து, தன்னுடைய பயணத்தைத் தொடருகிறது. அதுவும் இல்லை என்றால், கட்டையை ஒட்டியே வலது புறமோ, இடது புறமோ திரும்பி, நகர ஆரம்பிக்கிறது. 'ஐயோ! இது சுற்று வழி ஆயிற்றே!' என்று





மனம் தளர்ந்து உட்கார்ந்து விடுவதில்லை. அந்த எறும்பிடமிருந்து விடா முயற்சியை நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

எறும்பின் இன்னொரு குணம் நமக்கெல்லாம் ஒரு பாடம். எப்போதுமே, எதிர்காலம் பற்றி சிந்தித்து, இப்போதே அதற்கு தன்னைத் தயார் படுத்திக் கொள்ளுவது. இளைஞர்கள், இன்டர்வ்யூவுக்குப் போவதற்கு சில நாட்கள் முன்னால், தங்களை தயார்ப் படுத்திக்கொள்ள ஆரம்பித்தால் வெற்றி நிச்சயமில்லை. எனவே, முன்கூட்டியே திட்டமிட்டு தயார் படுத்திக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

தோல்வி அடைவதில் தவறில்லை; நம்முடைய தோல்விக்குக் காரணம் மற்றவர்கள்தான் என்று பிறர் மீது பழி சுமத்தக்கூடாது. அது நம் வெற்றிக்கு வழி வகுக்காது. நமது தோல்விக்குக் காரணம் என்ன என்று ஆராய முற்பட வேண்டும்.

ஒன்றின்மேல் ஒன்றாக செங்கற்களை வைத்து அடுக்கிக் கொண்டே போனால், அது பலமான சுவராகி விடாது. அவற்றைச் சேர்க்க சிமெண்ட் பூச வேண்டும். பூசிய சிமெண்ட் இறுகி, பலமான சுவர் கிடைக்க தண்ணீர் ஊற்ற வேண்டும். அதுபோல வாழ்க்கையிலும் சின்னச் சின்ன விஷயங்களில் கூட கவனம் செலுத்தி, அவற்றை தக்க இடத்தில், தக்க முறையில் பயன்படுத்தி,

**டிப்ஸ்!**

இன்டர்வ்யூ அழைப்பு வந்ததும், அந்தக் கம்பெனியின் வரலாறு, அவர்கள் தயாரிப்பு அல்லது சேவை, சாதனைகள், சமீபத்தில் அந்நிறுவனத்தைப் பற்றி மீடியாவில் வந்த தகவல்கள் என்று எல்லாவிதமான தகவல்களையும் திரட்டுங்கள்.

பல மொழிகளைத் தெரிந்து வைத்திருப்பது சிறப்பான தகுதி. ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகள் தெரிந்திருந்தால் அவற்றையும் மறக்காமல் குறிப்பிடுங்கள். அனுப்பும் விண்ணப்பத்தின் நகல் பிரதியையும் உங்கள் வசம் வைத்துக்கொள்ளுங்கள்.

'ஆள் பாதி ஆடை பாதி'ன்னு சொல்வார்கள். நம்மோட ஒவ்வோர் அசைவுக்கும் ஒவ்வொரு மதிப்பெண் உண்டு என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

நமது தோல்விக்குக் காரணம் மற்றவர்கள்தான் என்று பிறர் மீது பழி போடுவதால் நமக்கு வெற்றி கிட்டிவிடாது. நம் தோல்விக்கான காரணங்களை ஆராய்ந்து, அவற்றைத் தவிர்த்து, வெற்றிப் படிகளில் ஏற வேண்டும்.

இன்டர்வ்யூவில் கலந்து கொள்ள நுனி நாக்கு ஆங்கிலம் தேவையில்லை. அவர்கள் கேட்கும் கேள்வி உங்களுக்குப் புரிந்தால் போதும். தெளிவாக தமிழிலேயே பதிலைக் கூறலாம். அரைகுறை ஆங்கிலம் வேண்டாம்.






இது இன்டெர்நெட் யுகம். சகலவிதமான வேலைகளையும் ஒரு கம்ப்யூட்டர் முன்னால் உட்கார்ந்துகொண்டு செய்து விட முடியும். இதில் வேலை தேடும் படலமும் அடக்கம். இன்று ஏராளமான வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித்தரும் இணைய தளங்கள் இருக்கின்றன. பெரும்பாலான இணைய தளங்கள், இலவசமாகவே வேலைதேடு பவர்களின் தகவல்களை பதிவு செய்து கொண்டு, வேலைக்கு ஆள் எடுக்க விரும்பும் நிறுவனங்களிடமிருந்து கட்டணம் வசூலித்துக் கொள்கின்றன. குறிப்பிட்ட துறைகளில் உள்ள வேலை வாய்ப்புகள், குறிப்பிட்ட ஊர்களில் உள்ள வேலை வாய்ப்புகள் என்று ரகவாரியாக உள்ள வேலை வாய்ப்புகளை அறிந்து கொள்ளலாம்.

இன்று இந்தியாவில் பத்து சதவிகித வேலை வாய்ப்புகள், இத் தகைய இணைய தளங்கள் வழியாகவே நிகழ்கின்றன.

தங்களைப் பற்றிய விவரங்களைப் பதிவு செய்த பிறகு, அந்த இணையதளத்தில் இருக்கும் வேலை வாய்ப்புக்கான பகுதியில் ஆராய்ந்து தங்களுக்கு ஏற்ற வேலைகளை முடிவு செய்து, நீங்கள் பதிவு செய்த உங்கள் பயோடேடா விவரங்களை அந்த நிறுவனங்களுக்குஅனுப்பிவைத்துவிடலாம். அவர்கள் பரிசீலித்து இண்டர்வ்யூவுக்கு அழைப்பார்கள். படித்து முடித்த கையோடு வேலை தேடும் இளைஞர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம்.

**- மானஸா**

**வேலைவாய்ப்பு இணைய தளங்களின் முகவரிகள் உங்களுக்காக:**

www.clickjobs.com, www.timesjobs.com, www.searchindia.com, www.naukri.com, www.jobconsultancy.com, www.careersandoccupations.com, www.monsterindia.com, www.thenetjobs.com, www.jobportals.com.au, www.01webdirectory.com, www.2myjobs.com, www.khoj.com, www.netartmedia.net, www.jobmarina.com, www.resourceindia.com, www.schooljobs.in, www.bpojobs.com, www.jobs.monstergulf.com, www.jobsahead.com, www.speedconsult.com, www.webseekers.in, www.indianjobs.in, www.jobsomega.com, www.jobstreet.com

வெற்றி காண வேண்டும்.

எப்போதும் பாசிட்டிவ்வான எண்ணங்களைக் கொண்ட மனிதர்கள், வாழ்க்கையில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்; அதே போல வாழ்க்கையில் வெற்றி பெற்ற மனிதர்கள் எப்போதுமே, தங்கள் மனதில் பாசிட்டிவ்வான எண்ணங்களை கொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள். வெற்றி இலக்கை நிர்ணயம் செய்து கொள்ளுங்கள்; அதை நோக்கிய பயணத்தில், எத்தனைத் தடைகள் வந்தாலும் மனச் சோர்வு அடைந்துவிடாதீர்கள். வெற்றி உங்களுக்கே!



**தொகுப்பு:**
**எஸ். சந்திரமௌலி**

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

# நீங்க நூத்துல ஒருத்தரா?



**மே** மாதம் முடிந்து +2 தேர்வு முடிவுகள் வெளிவரும் நேரம். அதற்கு முன்! பொறியியல், மருத்துவம் படிக்க சேர்வதற்கும், சேர்த்து விடுவதற்கும் துடிக்கும் மாணவமணிகள், அவர் தம் பெற்றோர்கள்... எதிர்கால கனவுகளுடன் இதில்தான் நல்ல எதிர்காலம் என்பது பலரது நம்பிக்கை...

இதே கனவுகளுடன் பதினைந்து ஆண்டுகட்கு முன் நானும் இருந்தேன். என் மகன்களை பொறியியலில் சேர்க்க என் வற்புறுத்தல் பேரில் இருவரும் தேர்வு எழுதி, நல்ல தனியார் கல்லூரியில் இடமும் கிடைத்தது. ஆனால்...

என் மகன்கள் பொறியியல் கல்லூரியில் சேர மறுத்துவிட்டனர். ''எங்களை எங்கள் நோக்கில் படிக்க விடுங்கள். எங்கள் எதிர்காலத்தை நாங்களே, வகுத்துக்



✱ மகளின் திருமணத்தில்...

அட்டவணை

| மூத்த மகன் | இளைய மகன் | மகள் |
|---|---|---|
| +2<br>சக்திரியா, விருதுநகர் | +2<br>சக்திரியா, விருதுநகர் | +2 தமிழ் மீடியம், நகராட்சி மேல் நிலைப் பள்ளி, திருப்பத்தூர் |
| B.Sc (Chemistry)<br>APSA கல்லூரி, திருப்பத்தூர் | B.Sc (Chemistry)<br>APSA கல்லூரி, திருப்பத்தூர் | B.Sc (Physics)<br>APSA கல்லூரி, திருப்பத்தூர் |
| M.Sc (Chemistry)<br>அமெரிக்கன் கல்லூரி, மதுரை | M.Sc (Chemistry)<br>APSA கல்லூரி, திருப்பத்தூர் | M.Sc (Chemistry)<br>APSA கல்லூரி, திருப்பத்தூர் |
| M.Tech (Polymer)<br>CUSET, கொச்சி | M.Tech (Modern Method of Chemical Analysis) டெல்லி | M.Tech (Atmospheric Science)<br>CUSET, கொச்சி |
| பி.எச்டி,<br>ஐ.ஐ.டி, கரக்பூர் | | பி.எச்.டி, கரக்பூர், (குடும்பச் சூழ்நிலை காரணமாக இரண்டாமாண்டுக்கு மேல் தொடர முடியவில்லை.) |



கொள்கிறோம். லட்சத்தில் ஒருவராக இல்லாமல் நூற்றில் ஒருவராக இருக்க விரும்புகிறோம்'' என்றனர்.

எதிர்காலத்தை அவர்கள் வசம் ஒப்படைத்தோம். அவர்கள் தங்கள் எதிர்காலத்தை அமைத்துக் கொண்டதை மேலே பட்டியலிட்டுள்ளேன்.

இன்று மூத்தவர், டொரன்டோ பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருப்பதோடு கனடாவின் பிரஜையாகவும் ஆகிவிட்டார்.

இளையவர், தற்போது நவிமும்பை யில் ஒரு முன்னணி பார்மாசூட்டிகல் கம்பெனியில் பணிபுரிந்து கொண்டிருக்கிறார். அடிக்கடி கம்பெனி விஷயமாக அமெரிக்காவுக்கு பறந்து கொண்டிருக்கிறார்.

இருவரும் தற்போது ஐ.டி. துறைக்கு மேலாக ஆறு இலக்கத்தில் மாத சம்பளம் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆட்டு மந்தைபோல ஒரே இடத்தில் குவியாமல் எந்தத் துறையில் முன்னேறும் வாய்ப்பு உள்ளது என்பதை அறிந்து செயல்பட்டால் மாணவர்கள் எதிர்காலம் நல்லபடியாக அமையும்.

– பி. சக்திவேலம்மாள், மதுரை

**உங்கள் வீட்டில் கம்ப்யூட்டர் இருக்கிறதா? அதிலே இன்டர்நெட் இணைப்பு கொடுத்திருக்கிறீர்களா? உங்கள் வீட்டில் வயது வந்த பிள்ளைகள் இருக்கிறார்களா? அவர்களிடம் ஃபேஸ் புக், ட்விட்டர் என்ற வார்த்தைகளை உச்சரித்துப் பாருங்கள். அவர்கள் முகம் பிரகாசமடையும்!**



* மார்க் சுக்கர்பெர்க்

கம்ப்யூட்டரும், இன்டர்நெட்டும் இல்லாமல் எதுவுமில்லை என்றுள்ள இன்றைய நிலைமையின் இன்னொரு பரிணாமம்தான் ஆர்க்குட், ஃபேஸ் புக், ட்விட்டர் ஆகியவை. இவற்றில் நம்பர் ஒன் இடத்தில் இருப்பது ஃபேஸ் புக்! உலகம் முழுவதிலுமாக சுமார் நாற்பது கோடி பேர்கள் ஃபேஸ் புக்கில் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். இந்தியாவில் மட்டும் ஃபேஸ் புக் உறுப்பினர்களின் எண்ணிக்கை, ஒரு கோடி இருக்கும் என்று புள்ளி விவரங்கள் சொல்கின்றன.



## காதல் தோல்வி போட்ட பிள்ளையார் சுழி!

ஹார்வர்டு பல்கலைக் கழக மாணவரான மார்க் சுக்கர்பெர்க் தன்னை கைவிட்டுவிட்ட காதலியின் நினைவுகளிலிருந்து மீள வழி என்ன என்று யோசித்தபோது ஒரு ஐடியா பளிச்சிட்டது. அந்தப் பல்கலைக் கழகத்தின் மாணவர்கள், ஆசிரியர்கள் பற்றிய விவரங்களைத் தொகுத்து ஒரு புத்தகம் போடுவார்கள். அந்தப் புத்தகத்தின் பெயர் 'ஃபேஸ் புக்'. அதைப் போல, ஹார்வர்டு பல்கலைக்கழக மாணவர்களுக்காக மட்டும் என்று தன் சக மாணவர்கள் மூன்று பேரின் துணையுடன் இணைய தளம் ஒன்றை உருவாக்கினார். அது பிரபலமானபோது, மற்ற பல்கலைக் கழக மாணவர்களும் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். இன்று ஒரு ஈ மெயில் முகவரி இருந்தால் போதும், பதின்மூன்று வயதுக்கு மேற்பட்ட எவரும் ஃபேஸ் புக்கில் உறுப்பினர் ஆகலாம்.

காதல் தோல்வியில் துவண்டு, அதிலிருந்து மீள முயன்ற அந்த சுக்கர், ஃபேஸ் புக் உபயத்தில் இன்று அமெரிக்காவின் மிகப் பெரிய பணக்காரர்களுள் ஒருவராக ஆகிவிட்டார்.



## ட்விட் செய்ய வாறீகளா?

ஒரு குழுவினர் தங்களுக்குள் குறுஞ் செய்திகளை அனுப்பும் வசதியாக அமெரிக்காவில் உள்ள இணைய ஒளிபரப்புத் தொழிலில் உள்ள ஆடியோ நிறுவனத்துக்குள்ளே ஆரம்பிக்கப்பட்டது தான் ட்விட்டர். தொடக்கத்தில் இந்த சேவைக்குப் பெயர் '10958' பின்னர் 40404 என்று பெயர்மாற்றம் பெற்று, கடைசியில் 'ஃப்ளிக்கர்' என்பது போல 'ட்விட்டர்' என்று பெயரிட்டார்கள். நாளடைவில் அனைவரும் பயன் படுத்தக் கூடிய ஒரு சேவையாக இது மாற்றப்பட்டது. 2007ல் அமெரிக்காவில் நடைபெற்ற 'சௌத் பி சௌத் வெஸ்ட்' என்ற நிகழ்ச்சியின் போது அதில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான வர்கள் ட்விட்டர் மூலம் செய்திகளை தங்களுக்குள் அனுப்பிக் கொள்ள, இது பெரிய அளவில் உலகின் கவனத்தை ஈர்த்தது.




## ஏனிந்த ஆர்வம்?

ஃபேஸ் புக், ட்விட்டர் போன்ற சமூக வலை அமைப்புகளுக்கு மக்கள் மத்தியில் ஏன் இப்படி ஒரு அபாரமான வரவேற்பு?

# ஃபேஸ் புக், ட்விட்டர்

# ஆச்சரியமா? ஆபத்தா?







மனித உறவுகள் பலவீனம் அடைந்து வரும் இன்றைய உலகில், மனிதர்கள் தீவுகளாக மாறிக் கொண்டு இருக்கிறார்கள். பழைய காலம் போல குடும்பம் என்ற அமைப்பு இப்போது வலுவான ஒன்றாக இல்லை. குடும்ப உறவுகள் சிதைந்து கொண்டிருக்கின்றன. இதன் காரணமாக தனித்து விடப்பட்ட மனிதர்கள் உறவுகளைத் தேடி அலைகிறார்கள். உறவின் பொறுப்புகளை எடுத்துக் கொள்ளாமல் பயன்களை மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்று விரும்புகிற நவீன கால மனிதர்களுக்குக் கிடைத்துள்ள இந்த நூற்றாண்டின் வரப்பிரசாதம்தான் இவை.

'இன்று எனக்கு மூடு

# ஒரு எச்சரிக்கை!

"முதல் பிரச்னை, ஃபேஸ் புக், ட்விட்டர் போன்ற சமாசாரங்கள் மீது பிள்ளைகளுக்கு ஏற்படும் அதீதமான ஈர்ப்பு. அவர்கள் கணிசமான நேரத்தை அவற்றுக்காக செலவிடத் தூண்டுகிறது. இதைக் கண்டிக்கும் பெற்றோர்கள் மீது பசங்களுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. அடுத்து, ஃபேஸ் புக் போன்றவற்றில் நாம் பகிர்ந்து கொள்ளும் தகவல்களை, நமக்கு சம்மந்தமில்லாதவர்கள் கூட தெரிந்துகொண்டு அவற்றை துஷ்பிரயோகம் செய்ய வாய்ப்புகள் உள்ளன. இப்படிப்பட்ட சமூக நட்பு இணையதளத்தின் மூலம் அறிமுகமான ஒருவரைத் தேடிக்கொண்டு திருமணம் செய்துகொள்ளும் நோக்கத்துடன் ஜப்பான் நாட்டைவிட்டு வந்துவிட்டாள் ஒரு பெண். தன் இணைய தள நண்பரைச் சந்தித்தபோது, "இண்டர்நெட் நட்பெல்லாம் சும்மா ஒரு ஜாலிக்குத்தான்" என்று அவன் சொல்லிவிட மனமுடைந்து தற்கொலை செய்துகொண்டாள்.



"இன்னொரு சம்பவம். அமெரிக்காவில் வசிக்கும் ஓர் இந்திய ஆணும், பெண்ணும் திருமணம் செய்துகொள்ள முடிவு செய்து தங்கள் பெற்றோரின் சம்மதம் பெற்றார்கள். அமெரிக்காவில் இருவரும் நண்பர்களுக்கு மதுபான விருந்து அளித்து, அப்போது எடுத்த ஃபோட்டோக்களை தங்கள் ஃபேஸ் புக்கில் போட, அதைப் பார்த்த பையனின் குடும்பத்தினர், ' இப்படி ஒரு மது பார்ட்டி அவசியமா? அந்தப் போட்டோக்களை ஃபேஸ் புக்கில் போட வேண்டுமா?' என்று கண்டிக்க, அந்தப் பெண், 'கல்யாணத்துக்கு முன்பே, இப்படி என் சுதந்திரத்தில் தலையிடுகிறவர்கள், கல்யாணத்துக்குப் பின் எப்படி எல்லாம் நம் வாழ்க்கையில் மூக்கை நுழைப்பார்களோ?" என்று ஆட்சேபித்து, கல்யாணத்தை நிறுத்தி விட்டாள்.

எனவே, எதையும் நல்லவிதமாகப் பயன்படுத்தும் பொறுப்பு நம்மிடமே உள்ளது" என்கிறார் மனநல ஆலோசகர் சரஸ் பாஸ்கர்.

அவுட்' என்று ஒரு செய்தியைப் போட்டு விட்டால் போதும், அவ்வளவுதான், ஆறுதல் செய்திகள் நயாகரா நீர் வீழ்ச்சி போல அளவில்லாமல் கொட்ட ஆரம்பித்து விடும். தனது பிறந்த நாளை ஒருவர் மறந்துவிட்டாலும், அவருக்கு ஃபேஸ் புக்கில் பிறந்த நாள் வாழ்த்துக்கள் குவிந்து விடும்.

## சுதந்திரம் உண்டு...ஆனால்...

திரையுலகப் பிரபலங்கள் பலருக்கு ஃபேஸ் புக் மற்றும் ட்விட்டர்கள் மூலமாக லட்சக்கணக்கான ரசிகர்கள் கிடைத்துள்ளனர். அவர்கள் தங்கள் படங்கள் பற்றியும், இதர விஷயங்களையும் தன் ரசிகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்கள். அரசியல் பிரபலங்களும் கூட ஃபேஸ் புக்,மற்றும் ட்விட்டரில் அவ்வப்போது தங்கள் கருத்துக்களைப் பகிர்ந்துகொள்கிறார்கள்.

கடந்த அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் வேட்பாளர்கள் ட்விட்டரைப் பயன்படுத்தி தேர்தல் பிரசாரம் செய்தார்கள். அமெரிக்காவிலும் இதர சில நாடுகளிலும் அரசாங்கத்தின் முடிவுகள், நடவடிக்கைகள் இவற்றுக்கு எதிராக மக்கள் கருத்தை ஏற்படுத்த இவை சிறந்த கருவிகளாகப் பயன்படுத்தப் பட்டுவருகின்றன. அவசர காலங்களில் பாரம்பரிய முறைகளைவிட ட்விட்டர் மூலமாக உடனடியாக உதவிகள் கிடைத்துள்ளன. அதே சமயம் குற்ற நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்களுக்கும் ட்விட்டர் பயன்படுகிறது என்ற குற்றச்சாட்டும் எழுந்துள்ளது.

– எஸ். சந்திரமௌலி







பூஞ்சாரல் பக்கங்கள்

"டைட்டானிக் கப்பல் எப்படி கவுந்துச்சு தெரியுமா? குபுக், லுபுக், புளுக், குளுக், பொதக், லொச்சக், பச்சக்...

(என்ன சிரிப்பு... ராஸ்கல்... வருத்தமான ஸ்டோரி சொல்லிக் கிட்டிருக்கேன், சிரிக்கிற?)

- கி.ஷர்மிளா, மூன்றாமாண்டு பி.ஈ., பிரியதர்ஷினி பொறியியல் கல்லூரி, வாணியம்பாடி






"என்னடா, குறைச்ச மார்க் வாங்கிட்டு வந்துருக்கே?"

"விலைவாசி ஏறிப்போச்சு, எதையுமே அதிகமா வாங்க முடியலப்பா."

- கைலாஷ் நாத் சர்மா, பி.காம், மூன்றாமாண்டு, ஆச்சார்யா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, புதுச்சேரி

"ஒண்ணுமே தெரியாத ஸ்டூடன்ட்கிட்ட கேள்வி கொடுக்கிறாங்க. எல்லாம் தெரிஞ்ச டீச்சர்கிட்ட விடையை கொடுக்கிறாங்க. என்ன கொடுமை சார் இது!"

(நல்லா கேக்கறாய்யா கேள்வி!)

- எல்.பூபதி, பி.எட்., ஸ்ரீவாரி கல்வியியல் கல்லூரி, தென்னரசம்பட்டு, திருவண்ணாமலை





என்னதான் நீங்க செண்டிமெண்ட் பார்த்தாலும், கப்பல் கௌம்பறதுக்கு முன்னாடி எலுமிச்சம் பழம் எல்லாம் வைக்க முடியாது. சங்கு ஊதிட்டுதான் கௌம்பணும்...

(ஹைய்யோ ஹைய்யோ... சிப்பு வருது சிப்பு)

-ரிஸ்வானா, முதலாமாண்டு பி.சி.ஏ, இதயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கும்பகோணம்

## விலைவாசி ஏறிப் போச்சுப்பா!

படிக்காத அம்மாவின் கையெழுத்து ஓவியமாய் வாசலில் கோலம்...

(நீ ரொம்ப நல்லவ...!)

- டி.பிரசாந்த், பன்னிரண்டாம் வகுப்பு, ஆண்கள் அரசு உயர்நிலைப் பள்ளி, வெள்ளித்திருப்பூர், பவானி





# காலேஜ்

கல்லூரியில் காலடி எடுத்து வைக்கப்போகும் அந்த முதல் நாள் என்பது ஒவ்வொரு மாணவ மாணவிக்கும் ஒரு மிகப்பெரிய த்ரிலிங்கான, சந்தோஷமான நாள். இத்தனை வருடங்கள் பல விதமான கட்டுபாடுகளுடன் (!) பள்ளிகளில் படித்து முடித்தவர்கள், ஒரு வித சுதந்திரத்தின் எதிர்பார்ப் போடுதான் கல்லூரியில் காலடி எடுத்து வைக் கிறார்கள். தாங்கள் உடுத்திக் கொள்ளும் ஆடை அணிகலன்கள், காலணிகள், தங்களது ஹேர் ஸ்டைல்ஸ் என்று இவற்றிலும்கூட இவர்களுக்கு ஒரு சுதந்திரம் கிடைக்கும் பருவம் கல்லூரிப் பருவம். எனவே தாங்கள் 'பளிச்' என்று டிரெஸ் செய்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் விரும்புவது இயற்கைதானே! 'பளிச்' அழகு பற்றி பளீரென விளக்கினார் நேச்சுரல்ஸ் வீணா.





''இந்தப் பருவத்தில் அழகு ப்ளஸ் ஆரோக்கியம் இவை இரண்டுமே ரொம்ப ரொம்ப முக்கியம்.. நம் ஊரை போல எப்பவுமே வெயில் அடித்து கொண்டிருக் கும் பிரதேசத்தில், வேக்ஸிங் செய்வது என்பது மிக அடிப் படையானவிஷயம். வெயிலில்

## ஹேர்-கேர்! ஹேர்-கேர்! ஹேர்-கேர்! ஹேர்-கே

மாணவிகள் பெரிதும் விரும்புவது, 'ஹேர் ஸ்ட்ரெய்ட்னிங்...' மடித்துக் கட்டியோ அல்லது போனி டெய்லோ போட்டுக்கொண்டு பள்ளிக் குச் சென்றவர்கள், கல்லூரிக்குள் நுழையும் பொழுது தங்களது முடியைநேராக்கிக்கொள்ளவே அதிகம் விரும்புகிறார்கள். சீராக வெட்டிய தலை முடி என்பது பார்ப்பதற்கு ஒரு நல்ல அழகான தோற்றத்தைக் கொடுக்கும்.

ஹேர் கலரிங் என்பதும் எப்போதுமே கல்லூரி மாணவ மாணவிகளின் எவர் ஃபேவரெட் சாய்ஸ்.



# அழகு!



வீணா



ஷார்ட் ஸ்லீவ் ட்ரெஸ் போட்டு கொண்டால் சௌகரியமாக இருக்கும். ஆனால் அதற்கு முதல் தேவை வாக்ஸிங் செய்திருக்க வேண்டும். வியர்வை துர்நாற்றத்திலிருந்து தப்பிக்கவும், வாக்சிங் ரொம்பவே அவசியம். இதற்காகவே, நிறைய கல்லூரி மாணவிகள் எங்களிடம் வாக்சிங் செய்து கொள்ள அதிகமாக வருகிறார்கள்.

நாங்கள் கல்லூரி பெண்களுக்கு அதிகம் பரிந்துரைப்பது, 'ஃபேஸ் க்ளீன் அப்' பைதான். 'ஃபேஷியல்' என்பது இந்த வயதில் அவ்வளவாக செய்ய வேண்டிய அவசியம் இருக்காது.. ஆனால், முகத்தை மாசு மரு இல்லாமல் சுத்தமாக வைத்து கொள்ள, 'ஃபேஸ் க்ளீன் அப்' கட்டாயம் செய்து கொள்ள வேண்டும். அதுவும் 16 முதல் 18 வயது உடையவர்களுக்குஎண்ணெய்ப்பசைஎன்பதுசற்றுஅதிகமாகவே சுரக்கும். அதனாலேயே பருக்கள், ப்ளாக் ஹெட்ஸ் போன்றவை தோன்ற ஆரம்பிக்கும். இதை எல்லாம் போக்க 'பேஸ் க்ளீன் அப்' பெரிதும் உதவிடும்.



அழகான தோற்றம் என்பது ஒவ்வொருவரது தன்னம்பிக்கையை உயர்த்தும் ஒரு மிகப்பெரிய கருவி. அந்தத் தோற்றத்தைப் பாதுகாக்க நான் குறிப்பிட்டுள்ள சில அழகு சிகிச்சைகளை கல்லூரி மாணவிகள் எடுத்துகொண்டு, தங்களது கல்லூரி காலக்கட்டத்தை என்றுமே மறக்க முடியாத



## ர்-கேர்! ஹேர்-கேர்! ஹேர்-கேர்! ஹேர்-கேர்!

ஹேர் கலரிங் செய்து கொண்டால் எப்படி இருக்கும் என்று பார்ப்பதற்காகவே ஒரு முறையாவது ஹேர் கலரிங் செய்து கொள்கிறார்கள்.

நம் கல்லூரி கண்மணிகளை கதிகலங்க வைப்பது பொடுகு தொல்லை மற்றும் முடி உதிரும் பிரச்னை. மன அழுத்தம் அதிகமாவதால் ஏற்படக்கூடிய பிரச்னைகள்தான் இவை. அவற்றைக் கட்டுபாட்டுக்குள் கொண்டு வர, நல்ல பார்லரில் தலை முடியை க்ளென்சிங் செய்து கொள்ள வேண்டும்.



## காலேஜ் அழகு செய்யக் கூடியவை...

* தேர்ந்த பணியாளர்களுடன் கூடிய தரமான, சுத்தமான பியூட்டி பார்லரைத் தேர்ந்தெடுங்க.
* தலைமுடி ஸ்ட்ரெயிட்னிங் மற்றும் கலரிங் என்பது நல்ல முறையில் இருக்க வேண்டுமென்றால், அதற்கான ஆஃப்டர்கேர் முறைகளைப் பின்பற்ற வேண்டும். மைல்ட் ஷாம்பூ மற்றும் அதற்கேற்ற கன்டிஷனர் உபயோகிக்க வேண்டும்.
* பொதுவாக வெளியில் போகும்போதெல்லாம் சன்ஸ்க்ரீன் லோஷன் பயன்படுத்துவது சருமத்துக்குப் பாதுகாப்பு.
* மேனி அழகாக இருக்க நல்ல சத்தான உணவு, முறையான உடற்பயிற்சி, அதிக அளவு தண்ணீர் குடித்தல் இவை எல்லாமே அவசியம். கண்ணுக்குக் கீழே கரு வளையம் போன்ற பிரச்னைகள் வராது.

▶▶ இனிமையான கட்டமாகக் கழித்திட கட்டாயம் முயன்று பார்க்க வேண்டும்..

விஷ் யூ ஆல் எ ஹேப்பி அன்ட் ப்யூட்டிஃபுல் காலேஜிங்!





## பெடிக்யூர் - மெனிக்யூர்

*பள்ளியில் ஷூ போட்டு பாதங்களை மூடியவர்கள், கல்லூரிக்குள் நுழையும் பொழுது, சூரிய வெளிச்சம், அழுக்கு போன்றவை பட்டு, பாதங்கள் அழகை இழக்கும். அழகான ஆரோக்கியமான பாதத்துக்கு 'பெடிக்யூர்களை'யும் கைகளுக்கு 'மெனிக்யூர்களை'யும் செய்து பயன் அடையலாம். விதவிதமான நெயில் பாலிஷ்களையும், நெயில் ஆர்ட், குறிப்பாக ஃபிரெஞ்சு நெயில் பாலிஷ் போட்டு கொள்வதும் லேட்டஸ்ட் ஃபேஷன்.*

தொகுப்பு: நளினி சம்பத்குமார்.

## காலேஜ் அழகு செய்யக் கூடாதவை...

* அடிக்கடி தலையை ஸ்ட்ரெயிட்னிங் செய்து கொள்வது அல்லது கலரிங் செய்து கொள்வது கூடவே கூடாது.
* எப்போதும் நகப் பாலிஷ் போட்டுக் கொள்ளக் கூடாது. நகங்களுக்கு சூரிய வெளிச்சமும் காற்றோட்டமும் தேவை.
* நாம் உபயோகிக்கும் அழகு சாதனப் பொருள்கள் அனைத்துமே நல்ல தரமானதாக இருக்க வேண்டும்.
* வெயில் காலங்களில் வாரத்தில் இரண்டு நாட்களுக்கு ஒரு முறையும் மற்ற சீஸன்களில் வாரத்தில் மூன்று நாட்களுக்கு ஒருமுறையும் ஷாம்பூ செய்தால் போதும்.
* 21 வயதை நெருங்குவதற்கு முன் முகத்தில் ப்ளீச்சிங், ஃபேஷியல் என்பது தேவையே இல்லை. 18 வயதுக்கு முன் வாக்ஸிங்,பெடிக்யூர் போன்றவற்றுக்கு அவசியம் இல்லை.
* ஷாம்பூ செய்து முடித்த உடன், ஒரு நல்ல மாய்சரைப் போடாமல் விட்டு விடக் கூடாது.

# நியூ(ஸ்) மார்ட்




**வ**ரும் கல்வி ஆண்டிலிருந்து ஒன்பதாம் வகுப்பு மாணவர்களுக்கும் அறிவியல் பாடத்தில் ப்ராக்டிகல் பரீட்சைகள் இருக்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.


கார்த்திக் மாணிக்கம்


நிதின்நோரியா

**இ**ந்திய - அமெரிக்க நட்புணர்வுக்காக இணைய தளத்தில் இடம் பெற்ற ப்ளாக் (Blog) போட்டியில் பெங்களூரைச் சேர்ந்த ரஜத் பூஷன் என்னும் மாணவர் முதல் பரிசு பெற்றார் ப்ரீமியர் ஸயின்ஸ் அண்ட் டெக்னாலஜி இன்ஸ்டிட்ட்யூட்ஸ், எதிர்காலத்தில் இணைய தள பயிற்சி வகுப்புகள் மூலம் நிறைய மாணவர்கள் பயன்பெறுவார்கள் என்று நம்புவதால் சில வருடங்களில் வர்சுவல் யூனிவர்சிட்டி அமைக்க இருப்பதாக செய்தி வெளியாகியுள்ளது.

**ப்**ளஸ் டூ தேர்ச்சி அடைந்த மாணவர்களின் சதவிகிதம் கடந்த பத்தாண்டுகளைவிட இந்த ஆண்டுதான் மிக அதிகம்! மாணவிகளில் 88 சதவிகிதமும் மாணவர்களில் 82 சதவிகிதமும் தேர்ச்சி பெற்றுள்ளனராம்!

சுதர்ஸன் பட்நாயக்... இவர் மணலில் சிற்பம் செதுக்கும் அற்புதக் கலைஞர். அண்மையில் ரஷ்யாவில் நடைபெற்ற மணல் சிற்பப் போட்டியில் தங்கப் பதக்கம் பெற்று நம் நாட்டுக்கு பெருமை சேர்த்துள்ளார் இந்த இளைஞர்.

**அ**மெரிக்காவில் உள்ள 'ஹார்வர்டு பிஸினஸ் ஸ்கூல்' பாரம்பரியப்பெருமை கொண்டது. இதன் 102 வருட வரலாற்றில் முதன்முறையாக இந்திய வம்சாவளியைச் சேர்ந்த நிதின்நோரியா, டீன் ஆகியுள்ளார். இந்தக் கல்வி நிறுவனத்தின் பத்தாவது டீன் இவர்.

**ஐ.**ஏ.எஸ் அதிகாரியாக தேர்வாகியிருப்பவர் கார்த்திக் மாணிக்கம். எட்டு வயதில், ஒரு விபத்தில் காலை இழந்தவர். பின்னர் செயற்கைக்கால் பொருத்தப்பட்டது. ஏழ்மையான குடும்பம். இவரது தந்தை ஐ.ஏ.எஸ் அதிகாரிகளுக்கு, கார் டிரைவராக வேலை பார்ப்பவர். வைராக்கியத்துடன் படித்து வெற்றி பெற்ற கார்த்திக் மாணிக்கம் இன்றைய மாணவர்களுக்கு ரோல் மாடல்!

**தொகுப்பு: பத்மினி பட்டாபிராமன்**

## மாணவர்களில் மாணிக்கம்


ரஜத்பூஷண

# A to Z கல்வி கைடு!

## ஸ்ரீ கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்.


எஸ். மலர்விழி, அறங்காவலர்


டாக்டர் K. சுந்தரராமன் முதல்வர்

கோவை ஸ்ரீ கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி 1997ம் ஆண்டு தொடங்கப்பட்டது. கோவை நகரின் மையப் பகுதியிலிருந்து 6 கிலோ மீட்டர் தூரத்தில் பாலக்காடு செல்லும் சாலையில் இயற்கை அழகுடன் ஐந்து நட்சத்திரத் தகுதிக்கு இணையான கலை நயத்துடன் கட்டப்பட்ட கட்டடங்களில் தரமான கல்வி வழங்கப்படுகிறது. கல்லூரியின் தலைவர் மற்றும் நிர்வாக அறங்காவலருமான திருமதி எஸ்.மலர்விழி அவர்கள் மிகத் திறம்பட இக்கல்லூரியினை நிர்வகித்துக் கொண்டிருக்கிறார்.

2800க்கும் மேற்பட்ட மாணவ - மாணவியர்கள் பயிலும் இக்கல்லூரிக்கு தேசிய தர நிர்ணயக் குழுவான 'NAAC' 'A' தகுதி வழங்கிச் சிறப்பித்துள்ளது. ISO 9001-2008 தரச் சான்றிதழும் இந்நிறுவனம் பெற்றுள்ளது.

இக்கல்லூரியில் 14 இளக்கலைப் பட்டப் படிப்பு, 8 முதுகலைப் படிப்பு மற்றும் 6 துறைகளில் ஆராய்ச்சிப் படிப்பும் கற்றுக் கொடுக்கப் படுகின்றன.

**தரம்**

30,000 சதுர அடிப்பரப் பளவில் நூலகம் செயல் பட்டுக் கொண்டிருக்கிறது. நவீன ஒலி - ஒளி மற்றும் குளிர் சாதன வசதியுடன் கூடிய கருத்தரங்க அறைகள் உள்ளன. இயற்கை அழகுடன்



### தமிழ்த்துறை

முனைவர் விஜயசாமுண்டீஸ்வரி தலைமையில் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது இத்துறை. பல தமிழ் வல்லுநர்களை, பேச்சாளர்களை, கவிஞர்களை அழைத்து பல நிகழ்வுகள் நடத்தி ஆர்வத்தையும், பங்கேற்பையும் தூண்டி மாணவ, மாணவிகளின் திறமைகளை வளர்க்கின்றனர்.

தமிழ்த்துறை சார்பில், தேசிய, அளவிலும் பல்கலைக் கழக அளவிலும் பல போட்டிகளில் மாணவர்கள் பரிசு களைப் பெற்று வருகிறார்கள். பல ஆய்வுக் கட்டுரைகளை இளநிலை வகுப்புகளில் சமர்ப்பிக்கும் அளவுக்குத் திறமையான திவர்களாகப் பயிற்சி பெறுகின்றனர். தமிழ்த்துறை, முழுக்க முழுக்க மாணவர்களது படைப்புகளை 'தூரிகை' என்னும் இதழாக வெளியிட்டு வருகிறது.

### விளையாட்டுத் துறை

கைப்பந்து விளையாட்டு இந்தக் கல்லூரியின் சிறப்பு விளையாட்டு. ஒவ்வொரு வருடமும் உலக அளவுக்கு திறமையான வீரர்கள் தேர்வு செய்யப்படும் அளவுக்கு புகழ் உடையது. ஒவ்வொரு வருடமும் ஸ்ரீகிருஷ்ணா கேடயத்துக்கான தேசிய அளவிலான போட்டிகள் இந்த வளாகத்தில் நடைபெறுகின்றன. அர்ச்சுனா, துரோணாச்சார்ய விருது பெற்ற ஸ்ரீதரன் சிறப்புப் பயிற்சியாளராகப் பயிற்சி தருகிறார்.



## உணவு மற்றும் விடுதி மேலாண்மைத் துறை

"வெளிநாட்டு வேலை வாய்ப்புகளை உடனடியாக, லட்சக் கணக்கான ஊதியத்தில் பெற்றுத் தரும் இந்தத் துறை, எங்கள் கல்லூரியில் மிகவும் சிறப்பு வாய்ந்தது" என்கிறார், இந்தக் கல்லூரியின் முதல்வர்.

தாஜ் குரூப் விடுதிகளின் முதன்மை கார்ப்போரேட் கன்சல்டன்ட் திரு. ஜெயச்சந்திரன் போன்றசிறந்தவல்லுநர்கள்வரவழைக்கப்பட்டு பயிலரங்கம் நடத்தப்படுகிறது. மாணவர்களது தனித் திறமைகள் வெளிக் கொணரப்படுகின்றன.



வருடந்தோறும் நாடு முழுவதிலுமிருந்து இருபதற்கும் மேற்பட்ட சமையற் கலை வல்லுனர்கள் அழைக்கப்படுகின்றனர்.

பல்வேறு மாநில, நாடுகளின் உணவு வகைகள் எங்கள் மாணவர்களால் சமைக்கப்பட்டு மூவாயிரத்துக்கும் மேற்பட்டவர்களுக்கு பரிமாறப்பட்டு பெரிய தேசிய உணவுத் திருவிழா நடத்தப்படுகிறது.

வேலை வாய்ப்புப் பயிற்சி முகாம்களில் தாஜ் குரூப்ஸ். செரட்டன் குரூப்ஸ் ரெஸிடென்ஸி குரூப்ஸ் போன்ற நட்சத்திர விடுதிகளில் சொகுசுக் கப்பல்கள், விமானத் துறை விடுதிகளில் உயர்ந்த வேலை வாய்ப்புகளைப் பெற்றுச் செல்கிறார்கள்.

# நாரக மந்திரம்!

கூடிய திறந்த வெளித் திரையரங்கம் மற்றும் 3000 மாணவர்கள் அமரும் வகையில் முற்றிலும் குளிர்சாதன வசதி செய்யப்பட்ட பிரம்மாண்டமான கலையரங்கமும் மாணவர்களுக்காகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

பன்னாட்டு நிறுவனங்களில் மாணவர்கள் முழுமையான வேலை வாய்ப்பினைப் பெறுவதற்கான பயிற்சி வழங்கப்பட்டு வருகிறது. 2009-2010- ஆண்டில் புகழ்பெற்ற நிறுவனங்கள் மற்றும் பன்னாட்டு நிறுவனங்களில் 348 மாணவர்களும், குறிப்பாக, இன்ஃபோசிஸ் நிறுவனத்தில் மட்டும் 76 மாணவர்களும், சைபர்நெட் ஸ்லேஷ் சப்போர்ட்டு நிறுவனத்தில் 36 மாணவர்களும், வேலை வாய்ப்பினைப் பெற்றுள்ளனர். 42,000 சதுர அடி பரப்பளவில் உணவு மற்றும் மேலாண்மைத் துறைக்கென அனைத்து வசதிகளுடன் கூடிய கட்டடம் மாணவர்களின் தனித் திறமைக்குச் சவாலாக அமைந்துள்ளது. ஆண், பெண் இருபாலருக்கும் தனித்தனியே காற்றோட்டம் மிக்க விடுதிகள் வளாகத்தில் உள்ளன.

**தரம், தாரக மந்திரம்... இங்கு. என்றும் நிரந்தரம்.**

## ஆடை வடிவமைப்புத் துறை

இந்தக் கல்லூரியில் ஆடை வடிவமைப்புத் துறை மிகவும் ஸ்பெஷலானது. ஃபேஷன் எம்பிராய்டரி, ஃபேஷன் ஜூவெல்லரி, ஸ்க்ரீன் பிரிண்டிங், ஃபேப்ரிக் மற்றும் மியூரல் பெயிண்டிங் போன்ற பயிற்சிகளும் பிரத்யேகமாகத் தரப்படுகின்றன.

தொழிற்சாலைகளில் மட்டுமே பயன்படுத்தக் கூடிய உயர் ரக தையல் இயந்திரங்களால் பயிற்சி அளிக்கப்படுவது மற்றொரு சிறப்பம்சம்.

பேர்ல் அகாடமி ஆஃப் ஃபேஷன், நேஷனல் இன்ஸ்ட்டிடியூட் ஆப் ஃபேஷன் டெக்னாலஜி போன்ற முன்னணி கல்வி நிறுவனங்களில் தங்கள் பேற்படிப்பைத் தொடரும் அளவுக்கு மாணவர்கள் இங்கு உருவாக்கப்படுகிறார்கள்.

கல்லூரியில் படித்துக்கொண்டே டிஸைனிங், ஆயத்த ஆடை வடிவமைத்தல் போன்ற வேலைகள் செய்து சம்பாதிக்கின்றனர்.

தொகுப்பு: ஆர்.பாலா



**ஸ்ரீ கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி**
சுகுணாபுரம், குனியமுத்தூர் போஸ்ட், கோயம்புத்தூர் - 641 008
தொலைபேசி எண்: 0422 - 2678400/2678060/62
தொலை நகல்: 0422 - 2678052
ஈ.மெயில்: principal@skasc.ac.in வெப்சைட்: www.skasc.ac.in

டாக்டர். விஜயலக்ஷ்மி பந்தையன்

ரோஸ் நிறம்
அன்பை வளர்க்கும்.
மனத்தில்
அந்த நிறத்தை நினைத்து
யாருக்குச்
செலுத்த வேண்டுமோ
அவர்களை மனத்திரையில்
கொண்டு வந்தால் போதும்.
ரோஸ் நிறம் அவர்கள் மீது
பாயும்!

# மை டியர் மைண்ட் பவர்

ஆழ்மனம்-5




தீபா இன்ஜினியரிங் இரண்டாம் வருடம் படிக்கும் மாணவி. அவளது பெற்றோர் அவளை அழைத்து வந்திருந்தனர். தீபாவின் முகத்தைப் பார்க்கும்பொழுது அவளுக்குள் ஓர் எரிமலையே வெடிக்கத் தயாராக இருப்பது தெரிந்தது. அவ்வளவு கடுகடுப்புடன் அமர்ந்திருந்தாள்.

அவளது தந்தை பேசத் துவங்கினார். ''இரண்டாவது வருஷத்துல படிப்பை விடறேங்கிறா. கல்லூரிக்குப் போக மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறா. எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் புரிந்துகொள்ள மறுக்கிறா'' என்றார்.

தீபாவைப் பார்த்தேன். ''ஆரம்பத்துலேயே சொன்னேன் மேடம்! எனக்கு இன்ஜினியரிங் படிக்க விருப்பமில்லேன்னு. என்னை வற்புறுத்தி சேர்த்துட்டாங்க. என்னால படிக்க முடியலை. மேலும் நான் ஃபேஷன் டெக்னாலஜி படிக்க விரும்புறேன். இனிமே என்னால இந்தப் படிப்பை படிக்க முடியாது''. அவள் ஆணித்தரமாகச் சொல்லிவிட்டாள்.

''பிடிக்காதுன்னு சொன்னப்புறமும் எதற்கு இன்ஜினியரிங் கல்லூரியில் சேர்த்தீங்க?'' என்று அவளது தந்தையிடம் கேட்டேன்.

''முதலில் பிடிக்கலைன்னு அவள் சொன்னது உண்மைதான். ஆனா, நாங்க கொஞ்சம் எடுத்துச் சொன்ன பிறகு சரின்னுட்டா. அப்புறம்தான் பல சிரமங்களுக்கிடையே பல இலட்சங்கள் கட்டி, கல்லூரியில் சேர்த்தேன். ஒரு வருஷம் நல்லாதான் போய்வந்தா. இப்போ என்ன ஆச்சுன்னு தெரியலை. போக முடியாதுன்னு மறுக்கிறா. நீங்கதான் எடுத்துச் சொல்லணும். மிச்சமிருக்கற இரண்டு வருஷ படிப்பை எப்படியாவது முடிக்கட்டும். அப்புறம் என்ன வேணும்னாலும் படிக்கட்டும். இப்படி பாதியில் விட வேணாம்னு அறிவுரை சொல்லுங்க!'' என்றார் பரிதாபமாக.

தீபாவின் கண்களில் கோபமும், வெறுப்பும் தாண்டவமாடின. அருகிலிருந்த தன் பெற்றோரை விரோதிகள் போல் பார்த்தாள். தீபாவின் கோபத்தைப் புரிந்துகொள்ள முடிந்தது. பிடிக்காத படிப்பை, பெற்றோர்கள் வற்புறுத்திப் படிக்கச் சொல்லும்பொழுது மனம் அந்தத் துறையில் லயிப்பது சிரமம்தான். பெற்றோர்கள் இந்தத் தவறை நிச்சயம் தவிர்க்க வேண்டும். ஒருவருக்கு நாட்டம் உள்ள துறையில் படிக்க வாய்ப்பளித்தால், அதில் அவர் மிகவும் சிறப்பாக, பரிமளிக்க முடியும். ஆனால், தீபாவின் விஷயத்தில் கிட்டத்தட்ட பாதிக் கிணறு தாண்டிய கதை ஆகிவிட்டது. இந்தச் சூழ்நிலையில் படிப்பை நிறுத்துவதை விட அதை முடித்து விடுவதுதான்



புத்திசாலித்தனம் என்பதை மறுக்க முடியாது.

**தீ**பாவுக்கு எடுத்துக் கூறினேன். பெற்றோரின் வேண்டுகோளுக்கிணங்க மீதமுள்ள இரண்டு வருட படிப்பை முடித்துவிட்டு, அதன்பிறகு உன் விருப்பம் போல் எதையும் தொடர லாம் என்று விளக்கினேன். அவள் மனத்தில் சற்று இணக்கம் ஏற்படுவது தெரிந்தது. ஆனால் அதை ஒப்புக்கொள்ள, அவளது பிடிவாதம் இடம் கொடுக்கவில்லை என்பது புரிந்தது.



அவளது பெற்றோரை மட்டும் மறுபடியும் சந்தித்தேன். வெளிப் படையாகப் பேசி தீபாவை ஒப்புக் கொள்ள வைப்பது கடினம். அவளது ஆழ்மனதுடன் அவர்கள் தினமும் பேசி வந்தால், நிச்சயம் அவனிடம் தகுந்த மாற்றத்தைக் காணலாம் என்பதையும் புரிய வைத்தேன்.

**ஆ**ல்ஃபா மைண்ட் பவர் மூலம் இது சாத்தியம். தியான நிலையில் நாம் சற்று அமைதியாக இருக்கும் பொழுது, மூளையின் வேகம் பீட்டா நிலையிலிருந்து ஆல்ஃபா நிலைக்குக் குறைகிறது. வினா டிக்கு 7- 14 சைக் கிள்களாக இருக்கின்றன. ஆல்ஃபா நிலையில் நாம் இருக்கும் பொழுது, நமது உணர்வின் நிலை மிகவும் உயர் வானது. மிகவும் சக்தி வாய்ந்த நிலை இது. இந்த நிலையில் நாம் இருக்கும் பொழுது இன்னொரு வரை நினைத்து அவரது ஆழ்மனதுடன் நாம் பேச முடியும். நேரில் சொல்ல முடியாத விஷயங்களை இந்த நிலையில் சொல்ல முடியும். இப்படி நாம் பேசுவது அவர் களது ஆழ்மனத்தில் போய் சேர்ந்து, அங்கு மெள்ள மெள்ள ஒரு நல்ல மாற்றத்தை ஏற்படுத்தும். அவர் களைச் சிந்திக்கவும் வைக்கும்.

தீபாவின் பெற்றோர், இந்த செய்முறையை ஆல்ஃபா மைண்ட் பவர் வகுப்பில் கற்றுக் கொண்டார்கள். ஆல்ஃபா தியான நிலையில், தினமும் தீபாவின் ஆழ்மனதுடன் பேசி வந்தார்கள். பேசும்பொழுது அவள் மனத் திலிருந்த கோபத்தைக் களைந்து, அன்பை வளரச் செய்ய, ரோஸ் நிறத்தையும் அவளுக்குச் செலுத் தினார்கள். ஒரு மாதம் கழிந்து தீபாவை அழைத்து வந்தார்கள். தீபாவே பேசினாள். ''அப்பாவுக்காக என் முடிவை மாத்திக்கிட்டேன் மேடம். கல்லூரிக்குப் போக ஆரம்பிச்சுட்டேன். பார்க்கப் போனால் அப்படி ஒன்றும் சிரமமில்லை. நம்மால் இந்தப் படிப்பை படிக்க முடியாதா? ஏன் முடியாது? முடிச்சுக் காட்டுவோம்னு நினைச்சேன். சந்தோஷமாவே படிக்கிறேன்'' என்றாள்.

நிச்சயம் ஆல்ஃபா நிலையின் சக்தி அற்புதமானதுதான்! நான் முறுவலித்துக் கொண்டேன்.

(தொடரும்)

# ஓவரா கடிக்கிறாங்கப்பா...






முன்னாடியெல்லாம் செய் அல்லது செத்து மடின்னு சொன்னாங்க...

அப்புறம் சாகுறதுக்கு முன்னாடி ஏதாச்சும் செய்ன்னு சொன்னாங்க.

இப்ப லேட்டஸ்ட்டா... சாதிக்காம சாகாதேங்கிறாங்க...

எங்கக் கேள்வி என்னன்னா..

நாங்க என்ன சாதிக்கணும்?

*(நீங்க எப்பவுமே இப்படிதானா? இல்ல இப்படி தான் எப்பவுமேவா?)*

- ரிஸ்வானா, முதலாமாண்டு பி.சி.ஏ, இதயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கும்பகோணம்





"ஹோட்டல்ல சாப்பிட்டதும் பார்க்கிறேன் கையில் காசு இல்லை..."

"அய்யய்யோ... அப்புறம் என்ன பண்ணீங்க?"

"அப்புறம் பாக்கெட்ல இருந்து எடுத்துக் கொடுத்துட்டேன்..."

- சுடர்விழி, எம்.டெக், சாஸ்த்ரா பல்கலைக்கழகம், தஞ்சாவூர்






யு.எஸ்.ஏ. ல திருட்டைக் கண்டு பிடிக்க ஒரு மிஷின் கண்டுபிடிச்சாங்க. அந்த மிஷின் இங்கிலாந்துல முப்பது நிமிஷத்துல எழுபது திருடர்களைக் கண்டு பிடிச்சிருக்கு. ஸ்பெயின்ல முப்பது நிமிஷத்துல நூற்றைம்பது திருடர்களை கண்டு பிடிச்சிருக்கு. இந்தியாவுல பதினைந்து நிமிஷத்துல மிஷினையே காணோம். அடிங்கொய்யால... யாருகிட்ட..."

- கி.ஷர்மிளா, மூன்றாமாண்டு பி.ஈ., பிரியதர்ஷினி பொறியியல் கல்லூரி, வாணியம்பாடி





எனக்கும்
ஆசைதான்...
எல்லோரையும்
போல உன்னுடன்
பேச,
பழக, சிரிக்க,
கொஞ்ச, கெஞ்ச,
அழ...
ஆனாலும்
முடியவில்லை.
- இப்படிக்கு
நிழல்

- ரேகா, பன்னிரண்டாம் வகுப்பு, பெண்கள் மேல்நிலை பள்ளி, திருச்சி

'டானிக்' கதை

# ஆட்டோ

**தே**சியக் கல்லூரியின் பிரதான சாலை நெடுகிலும் அலங்கார வளைவுகள், மின்விளக்கு ஜோடனைகள். 'கலைத்தாயின் தவப்புதல்வனே வருக!', 'வருங்கால முதல்வரே வருக!', 'எங்கள் உயிரே வருக!' பலத்த வரவேற்புடன் தமிழ்த் திரையுலக நடிகர் அரவிந்தனின் ஆளுயர கட்-அவுட்கள் சாலையின் இரு மருங்கிலும் ஒளி வீசிப் பிரகாசித்தன.

ரசிகர் மன்றங்கள் நடிகர் அரவிந்தனுக்கு 'பத்மஸ்ரீ' பட்டம் கிடைத்ததற்குப் பாராட்டு விழா எடுத்தன. கல்லூரி மைதானமும் வளாகமும் நிரம்பி வழிந்தது. இரவு ஏழு மணிக்கு அரவிந்தன் மேடையேறியதும் அரங்கமே கைதட்டலாலும், விசிலாலும் அதிர்ந்தது. அரவிந்தன் பேசத் துவங்கினார்.

''உங்கள் முன் நிற்கும் அரவிந்தனை ஒரு நடிகனாக அல்ல, உங்களில் ஒருவனாகக் கருத வேண்டும். இந்தக் கல்லூரிக்குச் சம்பந்தமில்லாத ரசிகர் மன்ற விழாவினை, இங்கு நடத்த அனுமதித்த கல்லூரி நிர்வாகத்துக்கு என் உளமார்ந்த நன்றி. இது போன்ற விழாக்களை நடத்தி, காலத்தையும், பணத்தையும் என் ரசிகர்கள் வீணடிப்பதை நான் சற்றும் விரும்பவில்லை. இதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்!''

அரவிந்தனின் இந்தப் பேச்சைக் கேட்டதும் ரசிகர்கள், கூச்சல் எழுப்பத் துவங்கினர். முன்வரிசையில் இருந்த ஒரு தீவிர ரசிகன், ''பின்னே ஏன் தலைவா, விழாவிலே கலந்துக்க சம்மதிச்சே? எத்தனை நாள், எத்தனை பேரோட உழைப்பு தெரியுமா? எவ்வளவு பணம் செலவழிச்சுருக்கோம் தெரியுமா? இப்படி ஒரேயடியா எங்களைக் கவுத்துட்டியே தலைவா?'' தேம்பி அழத் துவங்கி விட்டான் அந்த இளைஞன்.

''தம்பி, மேடைக்கு வாப்பா!'' கனிவுடன் அழைத்தார் அரவிந்தன்.

ரசிகனை அன்புடன் அணைத்துக் கொண்டே, ''இந்தப் பாராட்டும் பரிசளிப்பும் தேவையில்லாத விஷயம் ராஜா! இதுக்கு செலவு பண்ணிய காசை, ஏதாவது நல்ல காரியத்துக்கு உபயோகப்படுத்தி இருக்கலாம் தம்பி. அப்புறம் ஏன் இந்த விழாவுக்கு வந்தேனு கேட்டே இல்லையா? சொல்றேன்.

டால்மியாபுரம் கணேசன்




# திராஃப்!

''நான் இந்தக் கல்லூரியின் பழைய மாணவர்களிலே ஒருவன்'' இதைக் கேட்டதும், ஆசிரியர்களும், மாணவர்களும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

கூச்சல் அடங்கியதும், ''பி.காம் இரண்டாமாண்டு வரைக்கும்தான் படிச்சேன். அதுக்கு மேலே தொடர வழியில்லே! எங்கப்பா பக்கத்திலே உள்ள ஒரு கிராமத்திலே, கணக்குப்பிள்ளையா வேலை பார்த்தார். அவர் திடீரென காலமானதும் புத்தகம், நோட்டு வாங்கக்கூட காசில்லே. அப்பல்லாம் கணக்குப்பிள்ளைங்க எழுதறதுக்கு மங்கலா இருக்குற சாணித்தாள்லே தான் அரசாங்கம் பிரிண்ட் பண்ணிக் கொடுக்கும். வேற வசதியில்லாம, அந்தப் பேப்பரிலேதான் நோட்டு தைச்சு உபயோகப்படுத்துவேன். இனிமே படிக்க முடியாதுங்கற நெலைமை வந்துச்சு. ரெண்டாம் வருஷம் கடைசி வகுப்பிலே மாணவர்கள் எல்லாம் வாத்தியார்கிட்டே ஆட்டோகிராஃப் வாங்கினாங்க. எல்லார்கிட்டேயும் ரொம்ப கவர்ச்சியா அழகான ஆட்டோகிராஃப் நோட் இருந்துச்சு. ஆனா எங்கிட்டே இருந்ததோ சாணித்தாள் நோட்டுத்தான்.

''எங்க ஆசிரியர் பெரியசாமி, ஒரு நடிகர்போல ரொம்ப கவர்ச்சியாயிருப்பார். எப்போதும் எடுப்பா ட்ரெஸ் பண்ணுவார். அற்புதமா பாடம் நடத்துவார். ஆனா, முன்கோபி.

என் நோட்டைப் பார்த்ததும், ''என்னடாது? என் கையெழுத்துக்கு மதிப்பில்லையா? ஒரு குப்பைக் காகிதத்தை நீட்றே?''னு கோவமா, என்னோட நோட்டைப் பறிச்சு ஜன்னல் வழியா வெளியிலே வீசிட்டார். விக்கிச்சுப் போயிட்டேன் நான். அழுதபடியே, ''சார் உங்க நினைவு என்னைக்கும் எங்கிட்டே இருக்கணும்னுதான் கையெழுத்தைக் கேட்டேன். அது ஒரு கோடி பெறும் சார். மதிப்பு, உங்க கையெழுத்துக்கும், நான் உங்க மேலே வெச்சுருக்கற மரியாதைக்கும்தான் சார். இந்த நோட்டுக்கு இல்லே!''

''வகுப்பே அமைதியில் உறைஞ்சு போச்சு. கொஞ்ச நேரம் என்னையே வெறிச்சுப் பாத்துகிட்டிருந்தவர், தானே வெளியே போய், என் நோட்டை எடுத்து வந்து, கையெழுத்திட்டுக் கொடுத்தார்.

''மன்னிச்சுருடா தம்பி, கோபத்திலே உன்னைப் புண்படுத்திட்டேன். வருங்காலத்திலே, நீ பெரிய ஆளா வருவே! உங்கிட்டே நானே கையெழுத்து வாங்கற நேரம் வரும்!'''ன்னார்! அவர் கால்ல விழுந்து வாங்கினேன். அவர் வாக்கு பொய்க்கலே.

''அதனாலதான், எனக்கும் இந்தக் கல்லூரிக்கும் நெருக்கமான தொடர்பு இருக்கு. என்னைக்கும் அது இருக்கும். இந்த நல்ல நேரத்திலே, கல்லூரி கட்டட நிதிக்கு பத்து லட்ச ரூபாயை நன்கொடையா கொடுக்க ஆசைப்படறேன். நிர்வாகம் பெரிய மனசு பண்ணி ஏத்துக்கணும்.''

'அரவிந்தன் வாழ்க!' 'அரவிந்தன் வாழ்க!' வாழ்த்தொலிகள் வானைப் பிளந்தன.









பூந்தூறல் பக்கங்கள்

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்



# சுட்டப் பழமா?

நீ பூ, நான் வண்டு;
உன்னில் தேன் எடுப்பதற்காக...
நீ கற்கள், நான் தீ;
உரசலிடையேயும்உண்மைகாண்பதற்காக...
நீ அலை, நான் கடல்;
என்றும் உன்னோடு நான் சேர்ந்திருக்க...
*(அவ்ளோதானா? இன்னும் இருக்கா...)*

- பி.காளியம்மாள், ஸ்ரீ கற்பக விநாயகா கல்லூரி, மதுரை

மனிதனாக...
பகவத் கீதை படித்து
இந்துவாய்...
குரான் படித்து
முஸ்லிமாய்...
பைபிள் படித்து.
கிறிஸ்தவனாய்
தோழனே!
இம்மூன்றையும் படித்து
மனிதனாய்
வாழ்ந்தாலென்ன?!

- ஆர். மகாலக்ஷ்மி, பி.யு.சி. பள்ளி, காயக்காடு, புதுக்கோட்டை

✱ மௌன விரதம்!
இருப்பதென்றால்
உன்கண்களைமூடிக்கொள்.
ஏனென்றால்,
உன் உதடுகளைவிட
உன் கண்கள்தாம்
அதிகம் பேசுகின்றன!

- ஆர். கார்த்திகா, பயோடெக் மூன்றாமாண்டு, ஜெய்ராம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சேலம்



நான் உன்னைப் பார்க்கும்போது
நீ மண்ணைப் பார்க்கிறாய்
என்னை விட மண்
அழகாக இருக்கிறதா சொல்
உனக்காக மண்ணோடு
மண்ணாகிறேன்.
- வைரமுத்து
*(சுட்டப் பழமா... அதான் இனிக்குது...)*

- மஹிமா, முதலாமாண்டு, பி.ஏ., குருநானக் கல்லூரி, சென்னை







சாய்ந்து கொள்ள தோளாக
நீ கிடைத்தால்
தோல்வியும் எனக்கு ஒரு சுகமே!
பாராட்டி வாழ்த்து கூற
நீ இல்லையெனில்
வெற்றியும் எனக்கு ஒரு சுமையே!
(இப்பவாவது புரிஞ்சுக்கிட்டியே... போதும் ராசா... போதும்...!)

***- ஆர். சுந்தர், பி.பி.ஏ இரண்டாமாண்டு, ஜெய்ராம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சேலம்***



ஒரு சினிமாவுக்குப் போறதுக்கு முன்னாடி அந்தப் படம் எப்படி இருக்கும்னு நாமே தெரிஞ்சுக்கலாம். எப்படின்னு கேட்கறீங்களா?

* இரட்டைப் பிள்ளைகளில் ஒருவர் கெட்டவராக இருப்பார்.

* வெடிக்கப் போகும் வெடிகுண்டின் இரண்டு ஒயர்களில், ஹீரோ எதைக் கட் பண்ணுகிறோரோ அது தான் சரியாக இருக்கும். (அதனால நாம் டென்ஷன் ஆக வேண்டியதில்லை.)

* காட்சிகளில் ஹீரோ இரவு லைட் அணைச்சு படுத்தாலும் அறையிலிருக்கும் எல்லாப் பொருள்களும் பளிச்சுன்னு தெரியும்.

* ஹீரோ அடி வாங்கும்போது முகத்தைக்கூட சுழிக்க மாட்டார். ஆனால் தாயோ, கதாநாயகியோ, அவருக்கு காயத்தைத் துடைக்கும்போது வலியால் துடிப்பார்.

* ஹீரோ போலீஸா இருந்தா, வேலையிலிருந்து நீக்கப்பட்டதும்தான் குற்றவாளியைக் கண்டுபிடிப்பாரு.

* ஹீரோ (அ) ஹீரோயின் ஆடும்போதுகூட்டத்தில் ஆடும் எல்லோரட நடன ஆசைவுகளும் கரெக்டாத் தெரியும்.

*(ஹி... ஹி... சினிமாபார்த்துப்பார்த்து, பைத்தியமாயிட்டேன். கூடிய சீக்கிரம் டைரக்டரா ஆகப் போறேன்.)*

*- ஆர். ரம்யா, பி.ஈ கம்ப்யூட்டர் சயின்ஸ், இரண்டாமாண்டு, பி.இ.எஸ். பொறியியல் கல்லூரி, பெங்களூரு*


தீனதயாளன்

இதுல ஏதோ ஒரு மனசு நிறைவு. சும்மா அம்மா, அப்பாவைத் தொந்தரவு செய்யாம இருக்கோமேன்னு!

# பலே, பசங்களா! பலே!

"**எ**ன்னோட பாக்கெட் மணி தேவை தாங்க என்னை பார்ட் டைம் ஜாப் பக்கம் இழுத்தது" என பளிச்சென பேச ஆரம்பிக்கிறார் பொறியியல் கல்லூரி மாணவர், தீனதயாளன்.

"சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமைகளில் நீங்க என்னை, கட்டாயம் சினிமா தியேட்டர்களின் வாசலிலோ அல்லது ஷாப்பிங் மால்களிலோ பார்க்கலாம். அங்க வர்றவங்க, போறவங்ககிட்ட எல்லாம் முகவரிகள் சேகரிக்குறது தான் என்னோட வேலை. அட்ரஸ் கொடுக்க நிறைய பேர் ரொம்பவே தயங்குவாங்க. என் வேலையோட சவாலே அதான். அப்படி இப்படின்னு பேசிஅட்ரஸ்வாங்கிக்கொடுத்துடுவேன்.

"அப்பா அம்மா திருச்சில இருக்காங்க. அவங்க அனுப்பற பாக்கெட் மணி எனக்கு பத்த மாட்டேங்குது. இதுல ஏதோ ஒரு மனசு நிறைவு. சும்மா அம்மா, அப்பாவைத் தொந்தரவு செய்யாம இருக்கோமேன்னு. சம்பாதிக்கற காசை சேர்த்து வெக்கற பாலிசியெல்லாம் நம்மகிட்ட கிடையாது. பசங்ககூட காண்டீன் பக்கம் போனா போதும், எப்படி காசு செலவாகுதுன்னே தெரியாது... படிப்புக்கு எந்தவித தொந்தரவும் வராமதான் இந்த பார்ட் டைம் ஜாப் பாக்கறேன். வீட்டுக்குக் கூட தெரியாது நான் பார்ட் டைம் பார்ப்பது" என்கிறார் தீன தயாளன். *(இப்ப தெரிஞ்சுடுமே!)*

**கா**ம்பெயரிங், ஈவெண்ட் மேனெஜ்மெண்ட், என ஸ்டேஜ், ஸ்டேஜாக பிஸியாக வலம் வந்து கொண்டிருக்கிறார் எத்திராஜ் கல்லூரி மாணவி, சித்தாரா.

"நான் ஃபர்ஸ்ட் இயர் காலேஜ் சேர்ந்ததிலிருந்து ரெண்டு வருஷமா பல விதமான பார்ட் டைம் வேலைகள் பார்த்துக்கிட்டு இருக்கேன். எனக்கு பேஸிக்காவே மீடியா வேலை ரொம்பப் பிடிக்கும். நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குறது என்பது ரொம்ப



சுவாரசியமான வேலை தெரியுமா? பணமும் நல்லா கிடைக்குது.. நீங்க கண்ணு, கிண்ணு போட மாட்டீங்கன்னா சொல்றேன்.. ரெண்டு வருஷத்துல மொத்தமா நான் தொண்ணூறாயிரம் வரைக்கும் சம்பாதிச்சுருக்கேன். இன்னும் கொஞ்சம்


சித்தாரா

நீங்க கண்ணு, கின்னு போட மாட்டீங்கன்னா சொல்றேன்.. ரெண்டு வருஷத்துல மொத்தமா நான் தொண்ணூறாயிரம் வரைக்கும் சம்பாதிச்சுருக்கேன்.

நான் என்னோட செகண்ட் இயர் படிக்கும் பொழுதிலிருந்தே ஃபேகல்டியா வேலை பார்க்க ஆரம்பிச்சுட்டேன்


யமுனா

முடியுதேன்னு ஒரு சின்ன சந்தோஷம். விஸ்காம்ல நிறைய புத்தகங்கள் வாங்க வேண்டியிருந்தது. அதுக்கெல்லாம், இந்த பார்ட் டைம் சம்பாத்தியம் ரொம்பவே உதவிச்சு. இப்போ எம்.எஸ்ஸி படிக்கறேன். இப்பவும் அதே மாதிரி ஹிண்டு காலேஜ்ல டெக்னிக்கல் ஸ்டாஃபாக வேலை பார்த்துக்கிட்டு இருக்கேன். அடுத்து எம்.பில்., பி.ஹெச்.டி பண்ற ஐடியா இருக்கு'' என்கிறார் யமுனா.

ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்

போனா ஒரு லட்சத்தைத் தொட்டுடலாம்.

''எதையுமே, ஒரு லட்சியத்தோட வெறியோட செஞ்சோம்னா, வாழ்க்கைல வெற்றி நிச்சயம்னு எனக்கு சொல்லி கொடுத்திருக்கு நான் பார்த்த பார்ட் டைம் ஜாப். காலைல 11.30 லேர்ந்து 5 மணி வரைக்கும் காலேஜ் போவேன். அதுக்கப்பறம் ராத்திரி பத்துமணி வரை பார்ட் டைம் ஜாப் பார்ப்பேன். சனி, ஞாயிற்றுக்கிழமைல ப்ராடக்ட் ப்ரமோஷன் பண்ணப் போயிடுவேன். என்னோட ஒரு செமெஸ்டர் ஃபீஸான இருபத்தெட்டாயிரம் ரூபாயை நானே சம்பாதிச்சுக் கட்டியதை நினைச்சு எங்கம்மாவுக்கு ரொம்ப பெருமை. என் அப்பா, நாலு வருஷமா புற்று நோயால கஷ்டப்பட்டுட்டு இருக்காரு. ஸோ, நம்மால நம்ம குடும்பத்துக்கு உதவ முடியுதேன்னு நினைக்கும்பொழுது சந்தோஷமா இருக்கு'' என்கிறார் சித்தாரா.

**''நா**ன் என்னோட செகண்ட் இயர் படிக்கும் பொழுதிலிருந்தே ஃபேகல்டியா வேலை பார்க்க ஆரம்பிச்சுட்டேன்'' என பொறுப்பாகப் பேசுகிறார் யமுனா. ''கோயம்பேடுலதான் என்னோட காலேஜ். கார்த்தால ஒன்பது மணியிலிருந்து மத்தியானம் இரண்டு மணி வரைக்கும் ஸ்டூடண்டா, பி.எஸ்ஸி விஸ்காம் படிப்பேன். அப்பறம் மூணு மணிலேர்ந்து ராத்திரி எட்டு மணி வரைக்கும் தண்டையார் பேட்டைக்குப் போய் அங்க மல்டி மீடியா செக்ஷன்ல ஃபேகல்டியா வேலை பார்க்கிறேன். கோயம்பேடுலேர்ந்து தண்டையார் பேட்டை வரை போற தூரம்தான் கொஞ்சம் அதிகம். மத்தபடி வேற கஷ்டம் எதுவும் இல்ல. மனசுக்குத் திருப்தி, குடும்பத்துக்கு சப்போர்ட் பண்ண

**ல**யோலா கல்லூரியில் எகனாமிக்ஸ் படிக்கும் ஜெயதேவ், ''பார்ட் டைம் ஜாப் பார்ப்பது என்பது ஒரு மிகப்பெரியவரம். ஒருவெற்றிகரமான எகனாமிஸ்டாக முன்னேற வேண்டுமென்றால் என்னென்ன செய்ய வேண்டும் என்பதை ப்ராக்டிகலாக என்னால் கற்றுக்கொள்ள


ஜெயதேவ்

காலேஜ் படிப்பு மட்டுமே பிரகாசமான வேலை வாய்ப்பை ஒருவருக்கு ஏற்படுத்தி கொடுத்து விடாது.

முடிந்தது. காலேஜ் படிப்பு மட்டுமே பிரகாசமான வேலை வாய்ப்பை ஒருவருக்கு ஏற்படுத்தி கொடுத்து விடாது. இந்த மாதிரி பார்ட் டைம் வேலைகளைப் பார்த்தால்தான், படிப்பிற்கு அப்பாற்பட்ட, வாழ்க்கைக்குத் தேவையான பல விஷயங்களை நாம் கற்று கொள்ள முடியும்'' என்கிறார்.

**சந்திப்பு: நளினி சம்பத்குமார்**




# ஆசைகள்



மாணவப் பருவம் என்றாலே ஆசைகள் நிரம்பிய பருவம்தான்! அகண்ட நீலவானில் கோடான கோடி நட்சத்திரங்கள் இரவு பகல் எப்போதும் பிரகாசித்துக் கொண்டிருப்பதுபோல், இளைய மனத்திலும் பல ஆசைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. முக்கியமான ஏழு ஆசைகளை மட்டும் நீங்கள் பூர்த்தி செய்வீர்களானால் அனைத்து வெற்றிகளும் உங்களைத் தேடி வரும்.



1. பிறர் தங்களை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்று விரும்புகிறவர்கள், அந்தத் தகுதியை முயன்று பெற வேண்டும். அதாவது பிறருக்கு உதவுவதன் மூலம் அதை நிறைவேற்றிக் கொள்ளலாம். ஏற்கப்படுவோரின் குணங்களை, செயல்களை, சொல் மூலம் பாராட்டியும் வியந்தும், ஆமோதிப்பதைத் தெரிவிக்கலாம். நட்பையும் நல்லெண்ணத்தையும் தனிமையிலோ, பகிரங்கமாகவோ வெளிப்படுத்தலாம்.






2. தான் ஒரு முக்கிய புள்ளி என்ற உணர்வை ஏற்படுத்துங்கள். பிறருக்கு உதவி புரியுங்கள். அவர் மதிப்புக்குரியவர் என்று மறைமுகமாகவோ நேரடியாகவோ சொல்லுங்கள்.

3. எல்லோரிடமும் இதமாக நடந்து கொள்ளுங்கள்: அதாவது




"சார், என்னோட மனைவியை காணோம்."

"இது போஸ்ட் ஆஃபீஸ் சார். போலீஸ் ஸ்டேஷன்ல போய் புகார் கொடுங்க."

"ஹையய்யோ... சந்தோஷத்துல எங்கப் போறதுன்னே தெரியலியே..."

- இ. ஷர்மிளா, பி.ஈ. மூன்றாமாண்டு, பிரியதர்ஷினி பொறியியல் கல்லூரி, வாணியம்பாடி





# ...ஏழு!




இனிய சுபாவமுள்ள மனிதர் என்ற பெயர் எடுக்க ஒரே வழி, சொல்ல வருவதை சிரித்த முகத்துடன் இனிய குரலில் சொல்வது தான்.

4. நாம் சரியான முறையில்தான் நடந்து கொள்கிறோம் என்ற உந்துதல் இருக்கிறது. அதாவது முறைப்படி செய்கிறோம், நியாயமாகப் பேசுகிறோம் என்ற தன் உணர்வு ஏற்படும்போது ஆத்ம திருப்தி ஏற்படும்.

5. பிறர் பிரச்னைகளை பேச அனுமதியுங்கள். (அ) அனுதாபத்துடன் கேளுங்கள்.

6. பிறருடைய ஒத்தாசை, கட்டாயம் நமக்குத் தேவைப்படுகிறது. அது இரண்டு வகையில் கிடைக்கிறது. கடவுள் மூலமாகவும், வெளியார் உதவி மூலமாகவும். எனவே எல்லோருடனும் அனுசரித்துப் போகவும்.

7. நீங்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் பிறர் அங்கீகாரம் செய்யும்போது, உங்கள் மனம் எல்லை இல்லா ஆனந்தம் அடையும். அது போலவே, பிறர் செய்யும் எந்தக் காரியத்தையும் முழு மனதுடன் பாராட்டுங்கள். அவருக்கும் ஆனந்தம் கிட்டச் செய்யுங்கள்.

**மேலே கூறிய ஏழு ஆசைகளையும் விருப்பமுடன் தொடர்ந்து பூர்த்தி செய்யுங்கள். அனைத்து வெற்றிகளும் உங்களை நாடி ஓடி வரும்.**

- பி.நிஷாந்த், ஈ.சி.ஈ. பனிமலர் பாலிடெக்னிக், சென்னை

''பதில் தெரியாத கேள்விக்கு பரீட்சையில் பதில் எழுதுவது எப்படி?''
''வெரி சிம்பிள்! 111111111
(ஸ்க்ராட்ச் செய்து தெரிந்து கொள்ள வும்.''
(ஷ்... அப்பா... முடியல...)

- ஆர். ரம்யா, பி.ஈ கம்ப்யூட்டர் சயின்ஸ், இரண்டாமாண்டு, பி.இ.எஸ். பொறியியல் கல்லூரி, பெங்களூரு



**'ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்' இதழுக்காக மிக மிக மிக அதிகமா எஸ்.எம்.எஸ் அனுப்பி அச(தி)ர வெச்சது நம்ம ரிஸ்வானா, (முதலாமாண்டு பி.சி.ஏ, இதயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கும்பகோணம்.) மற்றும் மஹிமா, (முதலாமாண்டு, பி.ஏ., குருநானக் கல்லூரி, சென்னை) இவங்கதான். கங்ராட்ஸ் டியர்ஸ்! (ஸ்பெஷல் பரிசு உங்களுக்குத்தான். உடனே உங்க ஃபோட்டோ அனுப்புங்க!)**

-ஆசிரியர்

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN/CC(S)DN/170/09-11
post without prepayment under PMG's Licence No. WPP TN/CC(S)DN/103/09-11-Registered as a Newspaper in S

கள் திருமணத்தின் நிச்சயதார்த்தம்
ல் கிரஹப்பிரவேசம் வரையிலான ஏழு
முகூர்த்தங்களையும் கொண்டாடுங்கள்
ரம்கேவியின் பிரைடல் செவனோடு
களுக்காகவே ஆரெம்கேவியின் கைதேர்ந்த
வாளர்களால் உருவாக்கப்பட்ட
புதுப் படைப்புகள் என்றென்றும்
கள் திருமணத்தை
ழ்வோடு மனதில்
னக்கச் செய்யும்
க்கமுடியாத உங்கள்
மணத்திற்கான
ழ்ச்சிப்படைப்புகள்



